# முல்லை



8 அணா

ஆசிரியர் :

**கண்ணதாசன்**

மே 16-ல் தமிழகம் 'காண வருகிறாள்!

'குடும்ப மணம் கமழும் கதை!



புத்துப்பாடல்கள்! முத்துப்பாடல்கள்!

கண்ணதாசன் பிலிம்ஸ்

# மாலையிட்ட மங்கை

கதை: எஸ். அய்யாப்பிள்ளை, மா. லட்சுமணன், தமிழ்ப்பித்தன் / வசனம், பாடல்: கண்ணதாசன் / இசை: விசுவநாதன் ராமமூர்த்தி / கலை: அங்கமுத்து / ஆடை: லிங்கம் / ஒப்பனை (மேக்கப்): நவநீதம் / ஸ்டுடியோ: பரணி

Aykan

டைரக்ஷன் & படப்பிடிப்பு: நாதன் ~ பூரண உரிமையாளர்: ஜங்கா பிலிம்ஸ், சென்னை-17.

எதிர்பாருங்கள்: [ஆகஸ்டு 15க்கு] கண்ணதாசன் அளிக்கும் பாரிமகளிர்

# முல்லை

**ஆசிரியர்: கண்ணதாசன்.**




ஆள்வோர் :-

கா. அப்பாதுரையார், எம். ஏ. எல். டி.
கி. ஆ. பெ. விசுவநாதம்
வ. சம்பந்தன், பி. ஏ.
விசு. திருநாவுக்கரசு
க. நாராயணன்
இரா. இளஞ்சேரன்
ஆ. மாதவன்
இரா. கோதண்டராமன்
நாஞ்சில் செ. அன்பெழில்
'கமலவல்லி'
ப. புகழேந்தி
கண்ணதாசன்

மற்றும் பலரின்

**எழுத்தோவியங்கள்.**



---

'முல்லை'யில் வெளிவரும், கதைகளில் வரும் நிகழ்ச்சிகளும் பெயர்களும் கற்பனையே.

---

## Statement about ownership and other Particulars about Newspaper

# MULLAI



| | | | |
|---|---|---|---|
| 1. | Place of Publication | ... | 2/127, Mount Road, Madras-6. |
| 2. | Periodicity of Publication | ... | Monthly. |
| 3. | Printer's Name | ... | SP. Arunachalam. |
| | Nationality | ... | Dravidian. |
| | Address | ... | 2/127, Mount Road, Madras-6. |
| 4. | Publisher's Name | ... | SP. Arunachalam. |
| | Nationality | ... | Dravidian. |
| | Address | ... | 2/127, Mount Road, Madras-6. |
| 5. | Editor's Name | ... | Kannadhasan. |
| | Nationality | ... | Dravidian. |
| | Address | ... | 2/127, Mount Road, Madras-6. |
| 6. | Name and address of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | | Sp. Arunachalam, Sole Proprietor. 2/127, Mount Road, Madras-6. |

I, SP. Arunachalam, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1-3-'58

SP. ARUNACHALAM,
Signature of Publisher.

 துறை, நிலை, முறைமை கண்டு
சொல்வன துணிந்து சொல்வோம் 

# எண்ணம்




மலர் 2 ✿ மார்ச், 1958 ✿ இதழ் 5

பத்திரிகைக் காகிதத்தின் விலை, 'யானை விலை', 'குதிரை விலை'யாக உயர்ந்துவிட்டது. எந்த விலை கொடுத்தும் வாங்கிவிடுவது என்ருலோ, 'ஸ்டாக் இல்லை' என்று கை விரிக்கிருர்கள் காகித வியாபாரிகள். விலையும் அதிகம்; வியாபாரிகளிடமும் இல்லை! நம்மைப்போன்ற சாதாரணப் பத்திரிகையாளர்கள்பாடு பெருந்தொல்லைதான்! இதுவே இந்த இதழ் தாமதமாக வருவதற்கான காரணமாகும்.

பன்மொழிப்புலவர் அவர்களும், மற்றும் பல்வேறு எழுத்தாளர்களும் வழங்கியுள்ள கதைகள், கட்டுரைகள் இதழ் முழுதும் நிறைந்து கிடக்கின்றன.

'ஆட்டனத்தி-ஆதிமந்தி' காவியம், அடுத்த இதழுடன் முற்றுப் பெறுகிறது. இதழுக்கு இதழ் பலர் பாராட்டி எழுதிய காவியம் அது. '1956-ல் தமிழ் நூல்கள்' கட்டுரையும் அடுத்த இதழில் வரும்.

அடுத்த இதழ் சித்திரை (சிறப்பு) மலராக வெளிவர இருக்கிறது. சித்திரை மலரும் அதைத் தொடர்ந்து வரும் 'முல்லை' இதழ்களும், சிறந்தவையாக இருக்கும் என்பதை முன்னதாகவே சொல்லிவைக்கிருேம்.

# மயிலும் குறளும்

மயில் ஓர் அழகான பறவை. அது தமிழ்நாட்டின் சொத்துக்களில் ஒன்று. நாட்டிற்கு அழகு மலைகள். மலைக்கழகு சோலைகள். சோலைக்கழகு மயில்கள். மயிலுக்கழகு அதன் தோகையே! மயிலுக்குத் 'தோகை' என்றும் பெயர் உண்டு.

**ஏற்றுமதி:**—ஏறக்குறைய 3000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அதாவது கிறிஸ்து பிறக்க ஆயிரம் ஆண்டுகள் இருக்கும்பொழுதே தமிழ்நாட்டிலிருந்து அகில், சந்தனம், அரிசி, மிளகு, தேக்கு, மயில், முத்து முதலிய செல்வங்கள் மேல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் பெற்றிருக்கின்றன. இவ்வுண்மையை இன்றைக்கும் வரலாறு மெய்ப்பிக்கும். இவைகளுக்கு அன்றும் இன்றும் மேலை நாடுகளில் தமிழ்ப் பெயர்களே இடப்பெற்று வழக்கிலிருந்து வருகின்றன. அவை அரிசி (Rice), தோகை (Togai), சந்தனம் (Sandal), தேக்கு (Teak) என்பவைகளாம். இவற்றுள் உயிர்ச் செல்வம் மயில் ஒன்றேயாகும்.

**அரண்மனை:**—மயில் காடுகளில் உள்ள சோலைகளை மட்டும் அழகு செய்வதல்ல; நாடுகளில் உள்ள மாளிகைகளையும், அழகு செய்து வருகிறது. தமிழ்நாட்டு மன்னர்களும் பிறநாட்டு மன்னர்களும் மயில்களைத் தங்கள் அரண்மனைகளில் வளர்த்து, அதன் பலவகையான தோற்றங்களைக் கண்களால் கண்டு களித்திருக்கின்றனர்.

**உவமை:**—சங்க காலத்து நூல்களில் ஒன்றாகிய பத்துப் பாட்டில் புலவர் நக்கீரர் பாடியுள்ள முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப்படையில் முதலிரண்டு அடிகளில், காலைப்பொழுதில் கடலில் தோன்றுகிற கதிரவனை, பசுமையில் தோன்றுகிற செம்மையை, மயிலில் தோன்றுகிற முருகனைக் கூறி மகிழ்ந்திருக்கிறார். அவர் கடலையே மயிலாகவும் கதிரவனையே முருகனைவும் கண்டிருக்கிறார்.

**வணக்கம்:**—தமிழ் மக்கள் மலைகளில் மயிலைக் காணும்பொழுது அதன் அழகின்மீது மற்றொரு அழகனையும்—முருகனையும்—சேர்த்துக் கண்டு, வணங்கி வந்திருக்கின்றனர் என்று தெரியவருகிறது.

**கூந்தல்—**பெண்களின் கூந்தலுக்குப் புலவர்கள் மயில் தோகையையே உவமையாகக் கூறிவந்திருக்கின்றனர். பெண்களும் மயிலின் தோகையைக் காணும் பொழுதெல்லாம் அதைத் தங்கள் கூந்தலோடு ஒப்பிட்டுப் பார்த்துப் பெருமூச்சு விடுவதும் உண்டு.

**காதல்:**—காதலர்கள் தங்கள் காதலிகளை 'மானே! மயிலே!' எனக் கூறுவது ஒரு வழக்கம். இவ்வாறு கூறும்பொழுது பெண் மானையோ பெண் மயிலையோ எண்ணாமல் ஆண் மானையும், ஆண் மயிலையும் எண்ணியே கூறுகிறார்கள். பெண்ணுக்கு ஆணை உவமையாகக் கூறுகிறோமே என்ற உணர்ச்சியே அவர்களுக்கு இருப்பதில்லை. "காதல்கொண்ட மக்கள் கருத்தழிவார்கள்" என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டாக இருக்கிறது.

கி. ஆ. பெ. விசுவநாதம்

**கண்கள்:**—மயிலின் கண்கள் கூர்மையான பார்வையுடையவை. அழகான கண்களைப் பெற்றவை மானும் மயிலுமேயாகும். இந்தக் கண்ணழகைக் கட்டழகிகளின் கண்களிற் காணப் புலவர்கள் துடிப்பர், ஓவியர் துடிதுடிப்பர்; காதலர் கண்டுவிட்டதாகக் கூறி நடிப்பர்.

**நடை:**—மயிலின் நடை மிகவும் அமைதியுடையது. அந்த நடையில் ஒரு பெருமிதமும் கலந்திருக்கும். அதன் எடுப்பான நெஞ்சு அந்த நடைக்குப் பெரிதும் துணை செய்யும். அதன் நெஞ்சும் நடையும் பெண்களைப் பார்த்துப் பழிப்பனவாய் இருக்கும்.

**ஆட்டம்:**—ஆண் மயில் தனது தோகையை விரித்து அழகாக ஆடும். அதற்கு நிழல் கொடுக்கும் சோலை! ஒத்து ஊதும் தென்றல்! மலர் தெளிக்கும் சாரல்! மிருதங்கம் அடிக்கும் இடி! ஒளி அடிக்கும் மின்னல்! கண்கொள்ளாக் காட்சி! இயற்கையோடியைந்த வாழ்வு மயிலுக்கு உண்டு, மக்களுக்கு ஏது?

**வண்ணம்:**—'வண்ணத்திப் பூச்சி' என இனி சொல்லாதீர்கள். பலவண்ணம் உள்ள அந்தப் பூச்சியின் பெயர் **'வண்ணத்துப்பூச்சி'** என்பதேயாகும். அப் பூச்சியிலும் காணப்பெருத பல வண்ணங்களை மயில் தோகைகளிற் காணலாம். உயிர் வகைகளில் அதிக வண்ணங்கள் உடையதும், அதிக அழகு உள்ளதும் மயில் ஒன்றேயாகும்.

**ஆராய்ச்சி:**—'மயிற் கண்கள்' என்று சொல்லபபட்டு வருவது மயிலின் முகக் கண்களா? தோகைக் கண்களா? என்பது உங்களுக்குத் தெரியுமா? தெரியாதவர்கள் எப்போதேனும் மயிலைக் காணும்பொழுது ஆராய்ந்து பாருங்கள். மயிற்கண்கள் என்பது இரண்டையுமே குறிக்கும்.

> ## மொழிப் பிரச்சினை
>
> இந்தி வெறியர்கள் ஆங்கிலத்துக்குப் பதில் இந்தியைத் திணிக்க முயற்சிப்பது, தேங்காய்க்குள் சேற்றுடன் கலக்கப்பட்ட ஆரஞ்சு ரசத்தை ஊற்றுவதற்கு ஒப்பாகும். தேங்காய் ஓடு வலுவாக இருப்பதை அவர்கள் உணர்ந்துள்ளனர். அதை அவர்கள் உடைத்தால் இளநீர் பூராவும் பூமியில் விழுந்து விரயமாகிவிடும்!
>
> **–சி. இராசகோபாலச்சாரியார்**

தோகைக் கண்களும், முகக் கண்களும் ஒன்றுபோலவே தோன்றும். இந்த ஆராய்ச்சியின்போது உங்கள் கண்கள் பாதுகாப்பாக இருக்க வேண்டும்.

**அழகு:**—ஆண் அழகா? பெண் அழகா? என்பது இக்காலத்திய கேள்விகளில் ஒன்று! பெண்களே அழகுடையவர்கள் என்பது பொதுவாக வழங்கிவரும் கருத்து. 'ஆண்கள்தான் அழகு' என்பது இன்றைய போராட்டக்காரர்களின் கருத்து. இதற்குப் பறவைகளும் விலங்குகளும்கூடச் சான்றுகளாக இருந்து வருகின்றன.

ஆண் யானை (களிறு) ஆண் மாடு (காளை) ஆண் ஆடு (கடா) ஆண் மான் (கலை) ஆண் மயில் (தோகை) ஆண் கோழி (சேவல்) எது அழகு? ஆணு? பெண்ணு?

**விருந்து:**—மேல்நாட்டு மன்னன் ஒருவன் 1550 ஆண்டுகளுக்கு முன்பு பெரிய விருந்து செய்தான். அவன் விருந்து செய்த உணவுப் பொருள் என்ன தெரியுமா? **மயில்** மூளை! விருந்துண்ட மக்கள் 400 பேர்கள்! கொலையுண்ட மயில்கள்??? மன்னனின் மூளையே மூளை!

**மருந்து:**—வாந்தியை நிறுத்தவும் உமட்டலை நிறுத்தவும் என்ன செய்யலாம்? எனத் தமிழ் நாட்டு மருத்துவ அறிஞர்கள் எண்ணி ஆராய்ந்தார்கள். இறுதியாக அவர்கள் தேடிக் கண்டுபிடித்த 'மூலிகை' மயில் இறகுதான்! அதைச் சுட்டுக் கருக்கித் தேனில் குழைத்துக் கொடுப்பதன் மூலம் உடனேவாந்தியைத் தடைப்படுத்த முடிகிறது.

**எழுத்து :**—எழுத்தாணியைக் கொண்டு ஏட்டில் எழுதிவந்த மக்கள், அதைக் கைவிட்டுத் தாளில் எழுதத்தொடங்கியபொழுது முதன் முதலாக மக்களுக்கு எழுது கருவியாய்ப் பயன்பட்டது எது தெரியுமா? மயில் இறகுதான்!

இதுகாரும் கூறியவற்றால், மயிலும் அதன் தோகையும் ஏற்றுமதி செய்வதற்கும், அரண்மனைக்கும் சோலைக்கும், உவமைக்கும், வணக்கத்திற்கும், கூந்தலுக்கும், காதலுக்கும், கண்களுக்கும், நடைக்கும், நடனத்திற்கும், வண்ணத்திற்கும், அழகுக்கும், ஆராய்ச்சிக்கும், எழுத்திற்கும், விருந்திற்கும் மருந்திற்கும் கூடப் பயன்பட்டு வந்ததை நன்கறியலாம். இனி அது வள்ளுவர்க்கு எவ்வாறு பயன்பட்டது என்பதை அறிவதுதான் வியப்பிற்குரிய ஒன்றாகும்.

திருவள்ளுவர் ஒருநாள் சாலை வழியே நடந்துகொண்டிருந்தார். ஒரு வண்டிக்காரன் மயில் தோகைகளைச் சுமை சுமையாய்க் கட்டி வண்டியில் ஏற்றிக்கொண்டிருந்தான். வள்ளுவர் கண்களை மயில் தோகையின் கண்கள் கவர்ந்தன. அருகில் சென்று தொட்டுப் பார்வையிட்டார். அது பட்டினும் பளபளப்பாய், பஞ்சினும் மென்மையதாய், எடையிலும் மிக எளிதாய்த் தோன்றியது. என்றாலும் அதைக்கொண்டு இரும்புத் தூளையும் முறிக்காலம் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். நீங்கள் அந்த முடிவுக்கு வரமுடியுமா? எண்ணிப் பாருங்கள்.

வண்டிக்காரனைக் கூப்பிட்டார். "தம்பி! மயில் தோகையாயிருந்தாலும் அளவுக்கு மீறி ஏற்றாதே! ஏற்றினால் அச்சு முறிந்துவிடும்" என அருமையாகக் கூறினார். அக்குறள்தான் இது!

**"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்."**

எப்படி வள்ளுவர் மயில் தோகையைக் கொண்டு இரும்பு அச்சை முறித்தது?

மயிலும், குறளும் தமிழகத்தின் சொந்தச் சொத்துக்கள். அவை வாழவேண்டும்! ஆம்; என்றென்றும் வாழவேண்டும்!

வாழட்டும் தமிழகம்!



# ஆட்டனத்தி ஆதிமந்தி

— 7 —

(வேறு)

மலையிடைப் பிறந்து சோழன்
மனையிடைத் தவழும் பொன்னி
அலையெடுத் தார்க்கும் வேளை
அத்தியான் நீரின் மீதே
கலையெடுத் தாடல் கொண்டான்
கால்களை மெதுவாய்த் தூக்கி
தலையினில் வைத்தான்; தண்ணீர்(த்)
தடத்தினை மிதித்தான் மெல்ல!

கீழ்ப்புறம் கிடக்கும் பாதம்
கிளர்ச்சிகொண் டெழுந்து நீரின்
மேற்புறம் வருவதே தான்
வல்லவன் கலையின் நோக்கம்!
காற்புறம் வெளியில் தோன்றக்
காற்றிலே மிதப்பான் போல
மேற்புறம் வந்தான் சேரன்
விந்தையில் வீரர் மொய்த்தார்!

ஆடிடும் கலையில் இந்த
அதிசயம் செய்தார் யாவர்?
நாடின மாந்தர் கண்கள்!
நங்கையும் மகிழ்ந்தாள்! கால்கள்
ஆடின! நீரின் மேலே
அழகுற மிதந்தான் சேரன்
ஓடிய பொன்னித் தேவி
உவகையில் குதித்தாள் போல,

கண்ணதாசன்

தாவினுள் ! எழுந்தாள் ! நீரின்
    தடத்தினைப் பெருக்கிக் காட்டிக்
கூவினுள் ! வெள்ளம் ! வெள்ளம் !
    கொதித்தன மாந்தர் நெஞ்சம் !
"ஆவியே ! வருவாய்" என்ருள்
    ஆதியாள் ! ஐயோ ! வெள்ளம்
மேவியே எழுந்த தாலே
    வீழ்ந்தனன் அத்தி ! நீரில்

மூழ்கினன் ! எங்கே அத்தி !
    மூச்சுமில் லாமல் ஆங்கே
சூழ்குல மாந்தர் கேட்ட
    துயர்மிகும் கேள்வி கேட்டு
வாழ்விழந் தவளே போல
    மயங்கினள் ஆதி மந்தி
ஆழ்கடல் நோக்கி, வெள்ளம்
    அத்தியை இழுத்தே ஏகும் !

மன்னவன், அமைச்சர், ஆதி—
    மயங்கிய தமிழர் எல்லாம்
"பொன்னியே ! புனலே ! எங்கள்
    புகழ்நனைத் தருவாய் ! என்றும்
உன்னையே நம்பி வாழும்
    உயிர்களில் ஒன்றைக் கொண்டே
என்னைநீ செய்த பாவம் !
    எங்குதான் மறைக்கச் சென்ருய் ?

பணிகிறோம்! அம்மா! உந்தன்
　　பாதத்தில் வீழ்கின் றோம்! எம்
அணியினை மீட்டும் இங்கே
　　அளிப்பதுன் கடனே!" என்றார்
வணிகர்தம் ஆசை போலும்
　　வளர்ந்தகா விரியின் வெள்ளம்
கணிகைமா மருதி கொண்ட
　　கவலைபோல் மேலும் பல்கும்!

எழுந்தன கலங்கள்! நீரில்
　　ஏறின! ஆதி மாதின்
கொழுநனைத் தேடிப் பொன்னிக்
　　குலமகள் கரைகள் தோறும்
அழுந்தின கண்கள்! யாண்டும்
　　அரும்பெறல் சேரன் மைந்தன்
விழுந்துள நிலையைக் காணார்
　　வெய்துயிர்த் தயர்ந்தார் வீரர்!

திரும்பினர்! கரிகா லன்பால்
　　செப்பினர்! மன்னன், மாமன்
வருந்தினர்! ஆதி மங்கை
　　மயங்கினள்! நகரத் தோரும்
பொருமினர்! "இனியும் வீணிற்
　　பொறுப்பதற் கில்லை" என்றே
அரும்பிய துயரின் ஊடே
　　அரற்றினள் ஆதி மந்தி!

"காவிரித் தாயைக் கேட்பேன் !
கண்களின் நீரைக் காட்டி
ஆவியைத் தருவாய் என்பேன்
அன்பனை இழுத்துச் சென்ற
தேவியைத் தொடர்ந்தே சென்று
தேடுவேன் ! கடலை மன்னன்
மேவினன் என்ருல் யானும்
மேவுவேன் !" என்ருள் ! சென்ருள் !

சோழனும் மகளின் பின்னே
தொடர்ந்தனன் ! வீரர் தாமும்
சோழனைத் தொடர்ந்தார் ! மங்கை
துயரிலே அலைந்து வீழ்ந்த
தாழிடுங் கூந்தல் காற்றில்
சதுரிட நடந்தாள் ! பொன்னி
ஆழியை நோக்கிச் செல்லும்
அடியினைத் தொடர்ந்தே சென்ருள் !

(வேறு)

பொன்னிப் பெருந்தாயே ! புகழ்வளர்த்த காவிரியே
தென்னவனைக் கொண்டு சேர்த்தஇடம் கூருயோ ?

எங்கள் குலமகன்பால் எழுந்துவிட்ட ஆசையினுல்
கண்களிலே ஒன்றைக் கவர்ந்து மறைந்தாயோ ?

பொய்யோடு வந்த புன்மைப் புழுக்கூட்டம்
கையூட்டுத் தந்து கவர்ந்துசெலச் செய்ததுவோ ?

வஞ்சத்தில் ஆர்ந்து வசமிழந்த தீமனத்தர்
நெஞ்சம் அமைதியுற நேயனை நீ கொண்டாயோ ?

ஆதிக்கு வாய்த்த அழகன்பாற் காதலினுல்
மோதிப் பெருகி மூழ்கவைத்துக் கொண்டாயோ ?

ஊரார் அறியாத ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்து
சீராரும் நாயகனைத் திருடி மறைந்தாயோ ?

— அடுத்த இதழில் முடியும் —

‘முடியாது’ என்ற கடிதங்கள் அவளை வாழவைத்தன.
‘சரி’ என்ற கடிதமோ..........?



‘‘திருமதி கண்ணம்மா அவர்களுக்கு,

மிக்க நலத்தோடு நான் ஊர் வந்து சேர்ந்தேன். இங்கே, என்னுடைய வீட்டில் எல்லோரும் தங்களைப்பற்றியும், கமலம்பற்றியும் மிகவும் கேட்டார்கள். நான் அங்கு வந்து போன விபரங்கள் எல்லாவற்றையும் சொன்னேன். என்னைப் போலவே அவர்களுக்கும் கமலத்தை மிகவும் பிடித்திருக்கிறதாம். ஆனால்...

இதை எழுதுவதற்குள் நான் பல முறை உண்மையில் வருந்தினேன். என்றாலும் என்ன செய்வது? நீங்களும், திருவாளர் ராமநாதன் அவர்களும், ஒரே ஜாதிக்காரர்களாக இருந்திருந்தால் தொல்லையே இருந்திருக்காது; அதோடு நீங்கள் இருவரும் முறையாகக் கலியாணமும் செய்துகொள்ளவில்லை!

இவ்வளவு பெரிய ‘புரட்சி’யைச் செய்ய எனது குடும்ப நிலை இடம் கொடுக்காது. வேறு எங்காவது முயற்சி செய்யுங்கள்!

அன்புள்ள,
ரத்தினம்.’’

— கடிதத்தைப் படிக்கும்போதே கமலம் அழுதுவிட்டாள். மிகவும் இலேசான அந்தக் காகிதம் அவள் கையில் இருப்பது, ஏதோ பெரிய பாரத்தைச் சுமப்பதைப் போன்ற உணர்ச்சியை அவளுக்கு அளித்திருக்க வேண்டும்! அருகிலிருந்த அவளுடைய அம்மாவிடம் வீசி எறிந்தாள்.

‘சே...பச்சைத் துரோகம்! இங்கே பெண் பார்க்கவரும்போதே இந்த ‘இழ’வெல்லாம் தெரிந்துதானே இருந்தது!’ என்று முணுமுணுத்தது அவளது வாய்.

‘வருத்தப்படாதே கண்ணு! என்ன செய்வது; நம்முடைய நிலைமை அப்படி! சீக்கிரமே வேறு நல்ல எடமா கெடைக்கும்; நீ ஒண்ணையும் மனசில் போட்டுக்காதே!’ என்று அவளை சமாதானம் செய்தாள் கண்ணம்மா.

‘அதுக்கில்லைம்மா! இதுவரை எத்தனையோ பேர், இப்படி எழுதின கடிதத்தை நான் பார்க்கலியா? அப்பவெல்லாம் எனக்கு இவ்வளவு ஆத்திரம் வரவா செய்தது? ரத்தினத்தைப்பத்தி நான் இப்படி நெனைக்கவேஇல்லைம்மா!...’ என்று அழுதாள் கமலம்.

துக்கத்திற்கு ஒரு தனித் தன்மை உண்டு. யாராவது சமாதானம் செய்யும்போது ஆறுதலடைவதும் உண்டு; அதனாலேயே திடீரென்று அதிகப்படுவதும் உண்டு!

கமலம் விசித்து விசித்து அழுதாள். அவளை நினைத்துமட்டுமல்ல; அவளுடைய அம்மா, ‘அப்பா’, ரத்தினம் எல்லோரையும்பற்றித்தான்!

தோலின் நிறத்தை மறந்துவிட்டு கமலத்தின் அழகைக் கணக்குப் பார்த்தால், அவளுக்கு எதிராக யாரையும் நிறுத்தமுடியாது! அத்




ம. புகழேந்தி

தனே அழகு சுந்தரி அவள். தோலில் மட்டும்தான் என்ன இருக்கிற தாம்; ஆரஞ்சுப் பழத்தைப்போல 'சிவப்'பாக இருக்கும் எத்தனே பேர் பார்க்க அருவருப்பாக இருக் கிருர்கள் !

பிடித்து வைத்ததுபோன்ற அவ ளது மூக்கும், கடித்துச் சுவைக் கும் கனியைப் போன்ற கன் னங்களும், எப்போதும் போதை யைத் தேக்கி வைத்திருக்கும் விழி களும், எதற்கெடுத்தாலும் சிரிப் பையே சிந்தும் வாயும், பற்களும்...

கமலம் கொஞ்சம் கருப்பு. அது வும் சகிக்கமுடியாத கருப்பு அல்ல! சின்னஞ்சிறு குழந்தை சிரிக்கும் போது, அதனுடைய கன்னக் குழி களில் விழுகிறதே அந்தக் கருப்பு பார்க்கச் சகிக்கமுடியாததாகவா இருக்கிறது? அப்படிப்பட்ட கருப்பு அது! புதிதாகப் போடப்பட்ட தார், நடுப்பகலில் சூரியனின் ஒளியில் மின்னுமே, அத்தகைய ஒளி வேறு அந்தக் கருப்பில் உண்டு.சொல்லப் போனல் கருப்பு, கருப்பு என்று சொல்லுவதே தப்புத்தான்; 'மான் நிறம்' என்றுதான் மற்றவர்கள் அவளேச் சொல்லுவார்கள்.

அவளுடைய 'அப்பா'ராமநாதன் பெரிய பணக்காரர். ஏராளமான சொத்துக்கள் அவருக்கு உண்டு. 'மைனர் முதலியார்' என்ருல் அந்தப் பக்கத்தில் தெரியாதவர் களே இருக்க முடியாது; அவர் 'மேஜ'ராகி எத்தனேயோ ஆண்டு கள்ஆனபோதிலும்,அவரை ஒட்டிக் கொண்ட 'மைனர்' பட்டம் மட்டும் போகமாட்டேன் என்று அவ ரோடே இருந்து விட்டது!

அம்மா கண்ணம்மா நல்ல அழகி. கமலத்தின்மேல் ஆரஞ்சு வண் ணத்தை அடித்துவிட்டால் எப்படி இருப்பாளோ, அப்படி இருப்பாள் அவள். பத்துப் பதினேந்து வருடங் களுக்கு முன்னுல் இப்போதிருக்கும் கமலத்தைப் போலவே, காண்பவர் களின் கவனத்தையெல்லாம் ஈர்த் தவள் கண்ணம்மா.

ராமநாதனுக்கும், கண்ணம்மா வுக்கும் பிறந்தவள்தான் கமலம். என்ருலும் ராமநாதன் 'முதலியார்' என்று தெரிந்த அளவுக்கு, கண் ணம்மாவின் ஜாதி கமலத்துக்கே தெரியாது! அவளேக் கேட்டதில் அவளே திகைத்து, திண்டாடி, முத லியார், செட்டியார், நாயக்கர், பிள்ளே என்று என்னென்னவோ கணக்குப் போட்டுவிட்டு, 'ஒன்றும் சரியாகப் புலப்படவில்லேம்மா!' என்று கடைசியில் சொல்லியிருக்கி ருள். மொத்தத்தில், 'ஜாதி கூடாது' என்று மேடையில் பேசுகிறவர்கள் பிறப்பதற்கு முன்னுலேயே, அதை உதறி எறிந்துவிட்டவர்கள் கண் ணம்மாவின் முன்னேர்கள். ஜாதி ஒழிப்பின் மீதுள்ள கரை காணமுடி யாத அக்கரை அல்ல அதற்குக் காரணம்; பின் ஏதோ ஒன்று! அதெல்லாம் பழைய கதை!

கண்ணம்மா கொடியாக நின்ற போது கொழு கொம்பாக வந்தவர் ராமநாதன். அவருக்கு கண்ணம்மா தவிர, மனேவி என்று சொல்லக் கூடிய உரிமை பெற்றுள்ள மற் ருெருத்தியும் உண்டு. பார்க்கச் சகிக்கக்கூடிய தோற்றம் அவளுக்கு இல்லாவிட்டாலும், அவருடைய அத்தை மகள் என்ற 'சாசனம்' அவளுக்கு உண்டு. அதனுலேயே தான், ராமநாதனும் கண்ணம்மா வும் காதல் ஜோடியாக இருந்த போதிலும், அவள் கழுத்தில் மூன்று முடிச்சுகளேப் போட வேண்டிய 'துர்பாக்கியம்' அல்லது 'ராசி' அவ ருக்கு வந்து தொலேத்தது!

கண்ணம்மா ராமநாதனுக்கு எண்ணத்தாலும் 'துரோகம்' செய் தவளில்லே! ராமநாதன் மட்டும் வீட்டிலும், இங்குமாக தன் நேரத் தைச் செலவிடுவார். அவருக்கு சின்ன வயது முதலே கண்ணம்மா விடம் ஒரு கிரக்கம். அந்தக் கிரக் கம்தான் இவர் 'மைனரா'கஇருந்த காலத்தில் அவள் மீது மையல் கொள்ள வைத்தது. பண்ணேப் பொறுப்பை மகனிடம் ஒப்படைக்க

பெற்றோர்களுக்குக் 'கொடுத்து வைக்க'வில்லை! யார் யாருக்கோ வர வேண்டிய கொள்ளை நோய் அவர்களை ஒரு சேர அடித்துக் கொண்டு போய்விட்டது. பிறகு தான் ராமநாதன் 'பட்ட'த்துக்கு வந்தார். அவருடைய 'ஆட்சி'யில் செய்யப்பட்ட முதல் வேலை, கண்ணம்மாவுக்கென்று காணி நிலம் எழுதி வைத்ததும், கச்சிதமான வீடு ஒன்றைக் கட்டிக் கொடுத்ததும்தான். இவர்கள் தொடர்புக்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு தான், ராமநாதனுடைய அத்தை மகள் மனைவியாக அவர் வீட்டில் காலடி எடுத்து வைத்தாள். அவளுக்கு இந்தக் கதை தெரியாது என்பதில்லை; என்றாலும் தெரிந்து கொள்வதாகக் காட்டிக்கொள்வதில் 'கௌரவக் குறைச்சல்' இருக்கிறதல்லவா!

அதற்கும் இரண்டு ஆண்டுகள் கழித்த பிறகுதான், கமலம் 'திரு அவதாரம்' எடுத்தாள். அவள்மீது கண்ணம்மாவிடம் இருப்பதைவிட அதிகப் பிரியம் அவருக்கு. கமலம் ராமநாதனின் ஏகபுத்திரியாக, 'செல்லக்குட்டி'யாக வளர்ந்தாள்.

கமலம் பருவம் அடைந்தபின், அவளை யார் கையிலாவது 'பிடித்துக் கொடுத்துவிட வேண்டும்' என்று கண்ணம்மா துடியாகத் துடித்தாள். தான் என்னதான் பண்ணையாரின் ஆசைக்குரியவள் என்றாலும், அவருடைய மனைவி என்று தன்னை எவரும் அழைப்பதில்லை அல்லவா! அப்படித் தன்னுடைய மகளும் இருந்துவிடக் கூடாது; அவள் இன்னார் மனைவி என்றுசொல்லத்தக்கவளாகஇருக்க வேண்டும் என்ற அடக்கமுடியாத ஆசை அவளுக்கு. அதனாலேயே அவரும் பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடும் வேலையில் தன்னையும் ஈடுபடுத்திக்கொண்டார்.

எப்படியோ, அழகும்,அடக்கமும் நிரம்பிய அவளுக்கு, ஒரு மாப்பிள்ளை கிடைப்பது மட்டும் 'குதிரைக் கொம்'பாக இருந்தது. எத்தனையோ பேர் வந்தார்கள்; பார்த்தார்கள். அவளை வியந்தார்கள். அழகி என்றார்கள்; அறிவாளி என்றார்கள்; அடக்க ஒடுக்கமானவள் என்றார்கள். முடிவு? அவ்வளவுதான்; ராமநாதனையும், கண்ணம்மாவையும் மாறி மாறிப் பார்த்து விட்டு, ஊருக்குப் போய்க் கடிதம் எழுதினார்கள். எல்லாம் ரத்தினம் எழுதியதுமாதிரி 'புரட்சி செய்யத் தயாராயில்லை' என்பது போலத் தான்! இப்படிக் கடிதங்கள் அந்த வீட்டில் சாதாரணமாகப் போய் விட்டது. அதனாலேயே அவர்களுக்கு அவை அதிர்ச்சியை அளிப்பதில்லை!

ஆனால், ரத்தினத்தின் கடிதம்?

ரத்தினமும் அந்த 'அவர்களை'ப் போல ஒருவன்தான் கண்ணம்மாவுக்கு; கமலத்துக்கும் அப்படியா?

கண்ணம்மாவுக்கு அந்த சேதி சரியாகத் தெரியாது.

ஒரு நாள். காதல் காட்சிகளுக்கென்றே வந்திருக்குமே அப்படிப்பட்ட நிலவு சுடர்விட்ட நாள் அது.

ரத்தினம்-கமலத்தோடு படித்தவன்; முன்பு நன்கு பழகிய நண்பன். இப்போது தான் வேலை செய்கிற பட்டண[illegible]ல் [illegible]ழ்கிறவன்.

தானே அருகே வந்து நின்ற அவனை யாரோ என்ற அவள் விசாரிக்கப்போக, அது எப்படியோ உருமாறிவிட்டது!

விசாரணை, விசாரிப்பதற்குமுன் இருந்த முறை மாறி, விசாரணைக்குப்பின் புதிய வடிவு எடுத்தது.

இரவு; தொல்லை தரும் நிலவு; திருமணம்பற்றி ஏங்கியிருக்கும் மனம்;அழகான வாலிபன்;அதிலும் மிகவும்அறிமுகமான ஒருவன்.நல்லவன் என்றுபெயரெடுத்திருப்பவன்!

'யார் செய்த சதியோ வீடு வெந்துவிட்டது!'



ராமநாதன்—கண்ணம்மா விபரங்கள் எல்லாம் தெரிந்தும், "நான் ஊருக்குப் போனதும் முறையாக

உன்னைப் பெண் பார்க்க வருவேன்; கட்டாயம் மணம் செய்து கொள்வேன்!'' என்று உறுதி அளித்துப் பிரிந்தான் ரத்தினம்.

கமலத்தின் நம்பிக்கையும் வீணாகவில்லை; ரத்தினமும் முழுவதும் ஏமாற்றவில்லை!

'மாப்பிள்ளை'யாக, பெண்ணைப் பார்க்க ரத்தினம் ஒரு நாள் வந்தான்; போனான். பிறகுதான் அந்தக் கடிதம் வந்திருந்தது!



கமலம் புழுப்போலத் துடித்தாள். விலை மதிக்கமுடியாத எதையோ இழந்துவிட்டகவலை அவளை வாட்டி வதைத்தது. நடந்த விஷயங்களை அம்மாவிடம் சொல்லவும் முடியவில்லை; அடுத்து என்ன செய்வது என்பதும் புரியவில்லை. இப்படி நெடுநேரம்!

கடைசியில் அவள் தன்னுடைய நிலை முழுவதையும் ரத்தினத்துக்கு எழுதினாள். அந்தக் கடிதத்தில் அவள் எடுத்துக் காட்டாத நீதி இல்லை; உண்மை இல்லை. கடவுளிடம் பக்தன்கேட்கும் பிரார்த்தனைக் கோரிக்கைபோலவே அந்தக் கடிதம் இருந்தது.

கடிதத்துக்குப் பதில் வரும், பதில் வரும் என்று அவள்காத்திருந்தாள். காத்திருந்தது காத்திருந்ததுதான். பதில் வரவேயில்லை! முற்றுப்பெறாத இலட்சியத்தை எண்ணிக் கலங்கும் எழுத்தாளனைப்போல, விரட்டமுடியாத ஆசைகளால் வெந்து சாகும் ஏழையைப்போல... அவளுக்கு விடிவே பிறக்கவில்லை!



'அம்மா கமலம்! போ; போய், சீவி, சிங்காரிச்சுப் பொட்டிட்டுட்டு வா! யாரோ 'மாப்பிள்ளை' வருகிறாராம். இப்பதான் அப்பா சொல்லிட்டுப் போனாங்க; போ!' என்று தூங்கிக்கொண்டிருந்த கமலத்தை எழுப்பினாள் கண்ணம்மா.

'போம்மா; உனக்கு வேற வேலை கெடையாது!' என்று சலித்துக் கொண்டாள் கமலம்.

'இல்லை கண்ணு; எப்படியும் நமக்கு ஒரு வழி பொறக்காமயா இருக்கப்போவுது! உள்ளதுபோல நடக்கும்; போ, சீக்கிரமா வா!'

கமலம் எழுந்தாள்; எங்கிருந்தோ அவளுக்கு சுறுசுறுப்பு வந்தது. சாட்டை அடி கிடைத்த காளை மாட்டுக்கு சுறுசுறுப்பை விலைக்குவாங்கியா தருகிறார்கள்!

யாரோ தினகரனும்! ஆள் அழகாகத்தான் இருந்தான். எப்பொழுதும் அமைதியும், ஆர்வமும் காட்டும் கண்களும், புன்னகை தவிர எதையும் காட்டாத வாயும்...

அவன் முன், பலகாரத் தட்டோடு, 'காபி'யோடு,...நடந்து காட்டி... எல்லாம் முடிந்தது! பெண் பார்க்கும் படலம் முடிந்தது! இனி வழக்கம்போல ஊருக்குப் போய், 'மாப்பிள்ளை' எழுதுவார்: 'எனக்குச் சம்மதம்தான்; ஆனால் வீட்டிலுள்ளோர்...பெண், கலப்பு சாதிப் பெண்ணுமே!...என்ன செய்வது 'பிராப்தம்', அவ்வளவுதான். வேறு இடம் பாருங்கள்!'

'மாப்பிள்ளை' எழுந்தார். 'வருகிறேன்' என்று விடைபெற்றார்—ராமநாதனிடமும், கண்ணம்மாவிடமும்தான். என்றாலும், அவர் தன்னிடமே கேட்டதாகக் கமலத்துக்கு நினைப்பு! 'வருகிறேன்' என்கிறாரே

'போகிறேன்' என்காமல்...'வருகிறேன்' என்றவர்களெல்லாம் திரும்பி வருவதாயிருந்தால், இதற்குள் அவளுக்கு இருபத்தைந்து திருமணம் நடந்திருக்குமே!

★

'போஸ்ட்!' என்ற தபால்காரரின் குரல் கமலத்துக்கு மட்டுமே கேட்டது.

கடிதத்தை வாங்கிய கமலம் ஆச்சரியப்பட்டாள். கடித முகவரியில் அவளுடைய பெயர் இருந்தது அதிசயம்தான்!

ரத்தினம் மட்டும்தான் அவளுக்கு எழுதுவதாகச் சொன்னவன். அப்படியானால் அது ரத்தினத்தின் கடிதமா?

ஆவலோடு அவள் கடிதத்தைக் கிழித்து 'இப்படிக்கு' என்பதற்குப் பின் உள்ள கையெழுத்தைப் பார்த்தாள். இது என்ன? ரத்தினம் இல்லையே! பின்...? 'தினகரன்' என்ற பெயர் அவளுக்கு அவ்வளவு சீக்கிரம் மறந்துவிடவில்லை; இங்கே அவன் வந்துபோய் ஐந்து நாட்கள்தானே ஆகிறது! தினகரன் ஏன் அவளுக்கு எழுத வேண்டும்? இந்த 'மாப்பிள்ளை' புதுமாதிரி போலிருக்கிறது! 'முடியாது' என்ற தன்னுடைய எண்ணத்தைப் பெண்ணுக்கே எழுதியிருக்கிறானே!

சுவையில்லாமல், வழக்கமான வெறுப்போடு எழுத்துக்களின்மீது அவளுடைய கண்கள் ஊர்ந்தன. அது கொஞ்ச நேரம்தான்! பிறகு?

"அன்புள்ள கமலத்திற்கு,

இப்படி எழுதும் உரிமையை எனக்கு அளிப்பாய் என்றே நம்புகிறேன். நான் உன்னை ஆறு மாதங்களுக்கு முன்பே பார்த்திருக்கிறேன்; நேரில் அல்ல, படத்தில்.

உனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறதா? புரியும்படி எழுதுகிறேன்.

ரத்தினம் என்னுடைய நல்ல நண்பன். முறையான சிந்தனையும், தெளிவான முடிவுகளும் உடையவன். அவன் உன்னைப்பற்றி, உங்கள் இருவரைப் பற்றி எல்லாவற்றையும் என்னிடம் சொன்னான். 'எல்லாவற்றையும்' என்பதன் முழுப்பொருளும் தெரிந்தே எழுதுகிறேன். பாவம்! அவனால் அவன் மீது உயிரையே வைத்திருக்கும் பெற்றோரை மீறமுடியவில்லை; அதே நேரத்தில், நடைபெறாத உன்னுடைய திருமணம் நடந்தாக வேண்டுமே என்ற கவலையையும் மறக்க முடியவில்லை. உன் பெற்றோர்களின் சாதி காரணமாகப் பலர் மறுத்துவிட்டது தெரிந்து, தானே உன்னைத்திருமணம்செய்யத் தயாரானதையும், அதற்கு ஏற்பட்ட எதிர்ப்பையும் சொல்லிச் சொல்லி அவன் அழுதான். உனது கடிதத்தையும் காட்டினான்.

கடைசியில், நான் அவனுக்கு உறுதி அளித்தேன்—நன்றாகஎல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தபின் தான். நான் தனிக்கட்டை! என்னால் எதையும் தாங்கிக்கொள்ள முடியும்; யாருடைய எதிர்ப்பும் என்னை எதுவும் செய்யமுடியாது!

இருவரும் இந்த முடிவுக்கு வந்தோம். பிறகுதான் உன் அப்பா மூலமாக நான் உன்னைப் 'பெண் பார்க்க' என்று வந்தேன்.

இந்த விபரங்களை நான் தெரிந்து கொண்டதாகக் காட்டிக்கொள்ளக் கூடாது என்று என்னிடம் அவன் கேட்டுக்கொண்டிருக்கிறான். என்றாலும், அவனைப் பற்றிய, அல்லது என்னைப் பற்றிய விபரங்கள் உனக்கும் தெரிந்திருக்கட்டுமே என்றுதான் நான் இதை உனக்கு முன்னதாகவே எழுதினேன்.

மொத்தத்தில் ரத்தினம் வேண்டுமென்றே தவறு செய்யாதவன்!

இன்றைக்கே நான் உனது தந்தையாருக்குக் கடிதம் எழுதுவேன். எப்படி என்று தானே கேட்கிறாய்? இப்படித்தான்: 'பெண் என்னைப் பிடித்துவிட்டாள்; திருமணம் எப்போது?'

இப்படிக்கு,
தினகரன்"

கடிதம் அவளுக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை அளிக்கத் தவற வில்லை! இத்தனை நாள் ஏங்கித் தவித்த திருமணம் நடைபெறப் போவதில் எந்தப் பெண்ணுக்குத் தான் மகிழ்ச்சி இருக்காது! ஆனால் இந்தக் கடிதத்தால் அவளுக்கு மகிழ்ச்சி மட்டுமே இருக்கவில்லை; இனம் காணமுடியாத ஏதோ ஒரு பயம்! எப்படி, ஏன் என்பதுதான் அவளுக்கே புரியவில்லை! நல்ல வேளையாக அந்தக் கடிதம் வந்த போது, கண்ணம்மா சமயற்கட்டில் இருந்தாள். இல்லாவிட்டால்? இல்லாவிட்டால்தான் என்ன, அவர்தான் அப்பாவுக்கே எழுதி யிருப்பாரே!

கமலம் அன்று இரவு முழுதும் தூங்கவேயில்லை; முடியவில்லை! அவளுடைய நெஞ்சு முழுதும் தினகரன் நின்றிருந்தான். அவ ளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை! அவளிடம் தங்கி நின்ற அந்த உணர்ச்சி, நிறைவு தான் என்ன? மகிழ்ச்சியா? வருத் தமா? ஏக்கமா? பயமா?

திடீரென்று, தான் தினகரனுக்கு ஏற்றவள்தானா? என்ற கேள்வி அவள் மனதைக் குடையத்தொடங் கியது. அதற்குப் பிறகு ஏனோ அவளுக்குத் தன்னைப் பற்றிய மதிப் பீடு குறைந்துகொண்டே வந்தது. அவன் தான் எவ்வளவு பெரிய வன்! இத்தனை பேர் புகழ்க்கணித் தும, அதைவிட இவ்வளவும் தெரிந்தும்...அதுவும் ரத்தினத்தின் வாயிலேயே எல்லாவற்றையும் கேட்டும்...

அவ்வளவு உயர்ந்தவனோடு, சாதாரணமான அவள்...அதிலும், ரத்தினம் விவகாரம்...

ஒரு நாளா இரண்டு நாளா, வாழ்வு முழுவதுமல்லவா அவ னோடு வாழவேண்டும்!

சே! அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை! பூஜைக்குரிய கடவு ளின் சிலைமீது காரி உமிழுபவனைக் காணும் உண்மை பக்தனைப்போல... எப்படியோ இரவு முழுதும் அவள் விழிப்பின் மடியிலேயே தவழ்ந் தாள். எதையோ பறிகொடுத்து விட்டவளைப்போல, பயங்கரக் கொலைக் குற்றத்தைச் செய்து விட்டதைப்போல...

காலை. பொழுது புலர்ந்து, காரிய மாற்றத் தொடங்கிவிட்ட நேரம்.

'கண்ணம்மா!' என்று குரல் கொடுத்துக்கொண்டே உள்ளே நுழைந்தார் ராமநாதன்.

'என்னங்க!' என்றபடி அவரை வரவேற்றாள் கண்ணம்மா.

'நல்ல சமாச்சாரம்தான்! அண் ணைக்குப் பாத்திட்டுப் போனாரே ஒரு 'மாப்பிள்ளை'—அதுதான் 'தின கரன்'ண்ணு பேரு. அவர் கடுதாசி எழுதியிருக்காரு! நம்ம கமலத்தை அவருக்கு ரொம்பப் பிடிச்சிருக் காம். கலியாணத்தை எப்ப வச்சிக் கலாம்ணு கேட்டிருக்காரு. நேத் திக்கே இது வந்திருக்குது. நான் பண்ணை விஷயமா, பக்கத்து ஊர் வரை போயிட்டு இப்பதான் வந் தேன். படிச்சுப் பாத்துட்டு, உடனே இங்கே ஓடியாந்தேன்!'' என்று மகிழ்ந்தார் ராமநாதன்.

அவரைவிட உண்மையில் கண் ணம்மாவே அதிகமாக மகிழ்ச்சி அடைந்தாள். என்னமோ ராம நாதன் மனைவியாகவே அவள் ஆகி விட்டதைவிடப் பெரிய மகிழ்ச்சி அது!

'எனக்குத் தெரியுமுங்க. நம்ம கமலத்தைப்போல ஒரு பொண் ணைப் பாக்கமுடியுமா?'மாப்பிள்ளை' யும் நல்ல பையன். ரொம்ப அழகா இருந்தார்! எனக்கு அவரை அண்ணைக்கே புடுச்சிட்டுது!...ம்... சரி...வாங்க! இதை அவகிட்டயே சொல்லுவோம்...' என்று கூறி விட்டு, கமலம் படுத்துத் தூங்கும் மாடிக்கு விரைந்தாள் கண்ணம்மா. ராமநாதனும் பின்தொடர்ந்தார்.

சிறிதுநேரத்தில், 'அய்யோ, கமலம்! என்னைத் தவிக்க விட் டுட்டுப் போயிட்டியே!' என்ற கண்ணம்மாவின் ஒப்பாரி, தெரு முழுதும் ஒலித்தது.

☆

குறுகிய காலத்தில் நிறைந்த சாதனைகளைச் செய்து புகழ்பெற்றது—

# ரஷ்ய இலக்கியம்

உலக இலக்கியங்களிலேயே பிற்பட்டுத் தோன்றியவை ஐரோப்பிய இலக்கியங்கள். அவற்றிலேகூட மிகவும் பிற்பட்டுத் தோன்றிய புதிய இலக்கியம் ரஷ்ய இலக்கியம்.

ரஷ்ய இலக்கியத்தின் பிறப்பு 18-ஆம் நூற்றுண்டு. முறையாக அது உருவாகியது 19-ஆம் நூற்ருண்டில்தான். இவ்வளவு குறுகிய காலத்துக்குள் உலகின் கவனத்தைக் கவர்ந்த வேறு எந்த இலக்கியமும் நிச்சயமாகக் கிடையாது.

'ரஷ்யர் வாழ்வில் எங்கும் சந்தேகமும், துன்பமும், இருளும் சூழ்ந்துள்ளன. இவற்றுக்கிடையே எதிர்கால நம்பிக்கைக்கு இடமான ஒளி ஒன்று உண்டானல், அது எமது ரஷ்ய மொழியேயாகும்' என்று (துர்கனீவ்) கூறும் அளவில் ஒரு காலத்தில் மொழி மட்டுமே,ரஷ்யருக்கு ஆறுதல் அளிப்பதாக இருந்தது.

உண்மையில் ரஷ்ய மொழி அத்தகைய சிறப்பு வாய்ந்ததாக இருந்ததனுலேயே, "ஐரோப்பிய மொழிகள் எல்லாவற்றிலும் வளமும், நிறைவும் உடையது ரஷ்ய மொழியே!" என்று பிரஞ்சு அறிஞர் தோவோகு சொல்லிப் போனர்.

மொழியின் இத்தகு சிறப்புகளோடு, ரஷ்யர் உள்ளத்தின் உயர்வும் ரஷ்ய இலக்கியத்தின் வெற்றிக்கு வித்திட்டன என்பதில் தவறில்லை. ரஷ்யர் உலகில் நல்லனெனக் கண்டவற்றையெல்லாம், கண்ட புதுமையை எல்லாம் தயங்காது ஏற்றுத் தமதாக வளர்த்தனர். அதுவும் அவர்களை வெற்றி முகம் நோக்கி இட்டுச் சென்றது.

ரஷ்ய மொழியின் தனிச் சிறப்புக்கான மற்றொரு காரணம், அது தன் பண்பையும், தூய்மையையும் சற்றும் கெடாது காத்த மொழி என்பதும் ஆகும். இந்தத் தூய்மையே ரஷ்ய மொழிக்கு உலகில் ஒரு ஒப்புயர்வற்ற இடத்தைத் தந்திருக்கிறது.

ரஷ்ய மொழியில் பேச்சு நடைக்கும், எழுத்து (கவிதை, உரை நடை) நடைக்கும் பெருத்த இடைவெளி கிடையாது. இது உலக மொழிகளில் அருமையாகக் காணக் கிடப்பது; சொல்லப் போனல் வேறெம்மொழிக்கும் கிடையாதது என்றுகூடச் சொல்லலாம்!

ஒழுங்கான ரஷ்ய இலக்கியம் 18-ஆம் நூற்ருண்டில் பிறமொழித் தொடர்பாலேயே ஏற்பட்டதாயினும், அதற்குமுன் கி. பி. 9-ஆம் நூற்ருண்டு முதற்கொண்டு எழுதா இலக்கியமாகப் பொதுமக்களிடையே பல பழங் கதைகள் நிலவின. இவற்றுட் பல பாடல்களாகவும், உரை நடைக் கதைகளாகவும் அவ்வப்போதுஉருப் பெற்றன. இவற்றுட் சில பழைய வீரப் பாடல்கள் போன்ற தொகுப்புக்கள் ஆயின. இவற்றை ரஷ்யர், 'பைலிங்' தொகுப்புக்கள் என்கின்றனர்.

10-ஆம் நூற்ருண்டில் மாக்ஸிம் என்ற கிரேக்கத் துறவி இத்தாலி நகராகிய பிளாரென்ஸிலிருந்து மாஸ்கோ வந்து, இத்தாலிய இலக்கிய விளக்கங்களை ரஷ்யாவுக்குத் தர





முனைந்தார். ஆனல் ரஷ்யரின் எதிர்ப்புக்கு இரை யாகி அவர் மாளவேண்டி நேர்ந்தது.

16-ஆம் நூற்றுண்டில், அரசியல் சூழ்நிலைகள் காரணமாக பழமையின் பிடிப்பு அதிகமாக இருந்தது. அதனல் சமயச் சடங்கு முறை நூல்கள் சிலவும், செய்தித் தொகுப்புரைகளுமே அக்கால இலக்கியமாக இருந்தன.

17, 18-ஆம் நூற்றுண்டுகளில் புத்திலக்கியம் எவையும் அமைக்கப் படவில்லை என்றுலும், மொழியில் எளிய மக்களின் பேச்சு மொழி நடை ஒன்று உருவாகியது.

19-ஆம் நூற்றுண்டு பிறந்தது. ரஷ்ய இலக்கியமும் உருவாகியது. அவை இதுவரை இருந்தமாதிரி பிரெஞ்சு மொழி பெயர்ப்புகளும், ஜெர்மன் தொடர்பும் கொண்ட இலக்கியங்கள் அல்ல இதுவரை ரஷ்ய மொழி பண்படுத்தப்பட்டு வந்து, இப்போது உயிர் இலக்கியம் உருவாக்கப்பட்டது. ரஷ்ய அறிஞர்கள் எழுதினர்கள், எழுதினர்கள்; அவ்வளவு எழுதினர்கள். ஒரு நூற்றுண்டுதான் அவர்கள் எழுதினர்கள் என்றுலும், அவர்களின் அந்த ஒரு நூற்றுண்டுச் சாதனைகள், உலக இலக்கியங்களின் பல நூற்றுண்டுச் சாதனைகளைப் போட்டிக்கு அழைக்கும் அளவில் உயர்ந்து நின்றன.

நீண்ட உறக்கத்திலிருந்த ரஷ்யா, நவீன கால பிறப்பைப் பற்றிக் கவலைப்படவில்லை. வளர்ந்துள்ள மற்ற இலக்கியங்கள் பற்றிக் கவலைப் படவில்லை. சேக்ஸ்பியரை, பேகனை, மில்டனை, வால்டேரை, ரூசோவை இன்னும், யாரைப் பற்றியும் கவலைப் படவில்லை. திடீரென்று விழித்து எழுதியது; மிகுந்த வேகத்தில் எழுதியது. அந்த எழுத்துக்கள் மற்றநாடுகள் வாயடைத்து நிற்கும் அளவுக்கு உயர்ந்தன; உச்சாணியில் நின்றன.

19-ஆம் நூற்றுண்டு மகத்தானதொரு சாதனையை ரஷ்ய இலக்கியத்தில் செய்தது அதுதான் 'கலை கலைக்கா? வாழ்க்கைக்கா?' என்ற கேள்விக்கு அது அளித்த விடை. கலை, கலைக்காக அல்ல, வாழ்க்கைக்காகப் பயன்பட்டாக வேண்டிய சூழ்நிலையை ரஷ்யா உருவாக்கியது; ரஷ்யர் உருவாக்கினர். கலை, வாழ்க்கைக்காகப் பயன்பட்டது. ஏழைகள் இலக்கியம் பாட்டாளிகளின் இலக்கியம், பஞ்சைகளின் இலக்கியம் தோற்றமெடுத்தது!

ரஷ்ய இலக்கியத்தில் பாத்திரப் பண்புகள் குறிப்பிடத்தக்கவையாக இருக்கும்.

'கதாநாயகன் எப்பொழுதும் அர்த்தமற்ற முறையிலேயே நடந்து கொள்வான். அவனுக்கு விளங்காத எதைப் பற்றியோ நினைத்த வண்ணமிருப்பான். அவனது வாழ்க்கையோ ஒரு உடைந்த படகு. பலநேரம் சிந்தனை செய்வான். பிறகு எதை எதையோ பேசுவான். கடைசியாக தன் காதலைத் தெரிவிப்பான். முடிவில் திருமணம் ஆகும். அதன் பிறகு அவன் போக்கு விசித்திரமானது. திருமணம் ஆன பிறகும் எதை

யாவது பைத்தியக்காரத்தனமாக மனைவியிடம் பேசுவான். பின் அவளை யும் கைவிட்டுவிடுவான்!'—என்று ரஷ்யக் கதாநாயகன் பற்றி, கார்க் கியே சொல்லுகிறான்.

ரஷ்ய கதாநாயகிகளின் உருவகம், கதாநாயகர்களின் தன்மைக்கு நேர் மாறானது. ரஷ்ய கதாநாயகிகள் திண்மையான மனப்பாங்குடையவர் கள். காதலன், கணவன், எதிரி, யாராயிருந்தாலும், நேருக்கு நேர்-நேர்மையுடன் வாதாடுபவர்கள். துரோகம் செய்த காதலரையும், கை விட்ட கணவனையும் வெறுத்துக் குரூரமாக நடத்துபவர்கள் அல்லர். எந்த அளவு துக்கத்தையும் மௌன மாகத் தாங்கும் சக்தி படைத்தவர் கள். நாட்டின் நிலைமை கண்டு பெரு மூச்சு விடுபவர்கள் மாத்திரமல்லா மல், சமயம் வாய்த்தபோது சோர்ந்து கிடக்கும் ஆண்களுக்கு உணர்ச்சி ஊட்டி விடுதலைக்கு வழிதேடுபவர் கள்.

ரஷ்ய இலக்கியத்திலுள்ள குறிப் பிடத்தக்க ஒரு விசேஷம், காவியங் களில் '**வில்லன்**' என்ற (முரடனை, கோழையான,முட்டாளான, கடைசிச் சண்டையில் தோல்வி அடைபவ னை) பாத்திரம் அனேகமாக வருவதேயில்லை.

ரஷ்ய இலக்கியம் பொழுது போக்கு இலக்கியமல்ல. அடிமைப் பட்டு, மீள வழி தெரியாமல் அவதிப் பட்ட ரஷ்ய மக்களுக்கு அறி வுணர்ச்சியூட்ட, ஊக்கம் அளிக்க எழுதப்பட்ட உண்மை இலக்கியம் அது. அதனாலேதான் அதில் மற்ற இலக்கியங்களில் கட்டாயமாகக் காணப்படும்'வில்லன்' இருப்பதில்லை. வீதி முழுவதும் நாம் வில்லர்களையா காண்கிறோம்? நல்லவர்கள் காணப் படுவதில்லையா? நசுங்குபவர்கள் தெரிவதில்லையா?

ஜார் ஆட்சியின் கொடுமை, நிலச் சுவான்தார்களின் கோரத்தாண்ட வம், பாட்டாளிகளின் தொல்லை, எழுச்சி இவைதான் ரஷ்ய நாவ லாசிரியர்களின் சிந்தனைக் கருவிகள். உண்மையையே எழுதி, உண் மைக்கே பாடுபட்டு, உண்மை யையே உறுதிப்படுத்துவதாலேயே உண்மையில் ரஷ்ய இலக்கியம் உயர்ந்தது. 'ஓ! ஆனதை ரஷ் யாவே!' என்று ஆழ்ந்த துயரத் துடன் பரிதாபப்படாத ரஷ்ய எழுத் தாளனே கிடையாது என்று சொல்லி விடலாம்!

ரஷ்ய இலக்கியத்தில் விண்மீன் களாக ஜொலிப்பவர்கள் ஏராளமா னோர். அவர்களில் குறிப்பிடத்தக்க வர்கள் **புஷ்கின், லெர்மாண் டோவ், கொகேல், பிலின்ஸ்கி, தூர்கனிவ், டால்ஸ்டாய், டாஸ் டாவஸ்கி, ஆண்டன் செக்காவ், மாக்கிம் கார்க்கி, மாயகோவ் ஸ்கி, செர்ஜி எஸ்னின், பேபெல், இவானேவ், பில்ன்யாக், படே ய்வ், லியோனவ், இலியா ஹெரன்பர்க்** முதலியோராவர்.

**புஷ்கின்**—ரஷ்ய இலக்கியத் தந்தை. முதற் கவிஞன். அலெக் சாண்டர் புஷ்கின் அவனது முழுப் பெயர். 1799-ம் ஆண்டு பிறந்த வன்; 1837-ல் மறைந்தான்.

'ரஸ்லனும் லுட்மிலவும்,' 'ஜிப்ஸி' (நாடோடிகள்), 'காகஸஸில் ஒரு கைதி,' 'குதிரை வீரன்,' 'போரிஸ் கூடுனேவ்,' இவ்ஜினி ஒனிஜின்' முத லிய கவிதைகள் அவன் எழுதியவற் றில் முக்கியமானவை. 'பனியும் புய லும்,' 'இஸ்பேட் ராணி' 'தளபதியின்



மகள்' 'ட்யூப்ரோவ்ஸ்கி' முதலிய கதைகளும் குறிப்பிடத்தக்கவை.

**மைக்கேல் லெர்மாண்டோவ்,** புஷ்கினுக்கு அடுத்த, அவனுக்கு இணையான கவிஞன். 1714-ல் பிறந்து 1841-ல் மாண்டான். இவனுடைய சாவு மிகவும் வேடிக்கையானது. ஒரு நண்பனுடன் விந்தையாகப் பேசிக்கொண்டிருந்தான். பேச்சின் வேகம் வளர்ந்து, துப்பாக்கி பயன்படுத்தப்பட்டுஇவன் செத்தான்.

'மிட்ஸிரி', 'பிசாசு' இவை இரண்டும் லெர்மாண்டோவ் எழுதிய முக்கியமான காவியங்கள்.

லெர்மாண்டோவின் வசன காவியங்களில் தலை சிறந்தது 'நம் காலத்திய வீரன்.'

**நிக்கோலி வாஸ்ஸிலிவிச் கொகேல்** ரஷ்ய வசன இலக்கியத்தின் ஆரம்பகர்த்தா. அதனுல்தான் ''நாங்களெல்லாம் கொகேலின் 'மேலங்கி'யிலிருந்து உண்டானவர்கள்'' என்று டாஸ்டாவஸ்கி கூறுகிருன்.

'மேலங்கி', 'இன்ஸ்பெக்டர் ஜெனரல்' 'இறந்த மனிதர்கள்' ஆகியவை இவனுடைய எழுத்துக்களில் மிக உயர்ந்து நிற்பவை.

'மேலங்கி' ஏழ்மையில் உழன்று தவித்த ஒரு அரசாங்க குமாஸ்தாவினுடைய சோகச் சித்திரம்.

'இன்ஸ்பெக்டர் ஜெனரல்' ரஷ்யாவின் தலை சிறந்த நாடகமாக மதிக்கப்படுவது. அப்போதிருந்தஅரசாங்க ஊழியர்களின் கீழ்த்தரமான குணங்களை விளக்கிக் காட்டும் சிந்தனைச் சித்திரம் அது.

கொகேலின் வழியிலேயே அரை நூற்ருண்டு காலம் ரஷ்ய இலக்கியம் சென்றது என்பது குறிப்பிடத்தக்க விஷயம்.

**பிலின்ஸ்கி** (1811-48) கல்வி கற்கும் நாளிலேயே எழுதத் தொடங்கிவிட்ட சிந்தனைச் சிற்பி. படிக்கும்போது அவன் எழுதி வெளியிட்ட நாவல் 'கலினின்'

பிலின்ஸ்கி வாழ்வு முழுதும் வறுமையால் தொல்லைப்பட்டு, க்ஷய ரோகத்தில் மரணமடைந்தவன்.

பிலின்ஸ்கி நாவலாசிரியன் என்பதைவிடச் சிறந்த இலக்கிய விமர்சகன் என்பதே சரியானதாகும். மிகச் சிறந்த விமர்சகஞன அவன், ரஷ்ய இலக்கியம் வளர நல்ல முறையில் வழி வகுத்தவன்.

**இவான் துர்கனீவ்**-இவனுடைய எழுத்துக்கள் ஐரோப்பிய இலக்கிய மன்றத்தில் ரஷ்யாவுக்கு உயர்ந்த இடத்தைத் தேடித் தந்தன. இவனும் டால்ஸ்டாயும், டாஸ்டாவஸ்கியும்தான் ரஷ்ய எல்லையைத் தாண்டி முதலில் புகழ்பெற்ற ரஷ்ய இலக்கிய கர்த்தாக்கள். ஒரு நூலிலேயே ரஷ்யாவின் முதல் எழுத்தாளஞன பெருமை இவனுக்கு உண்டு.

'வேட்டையாடுபவனின் குறிப்புகள்' அவன் பெருமையை உரைத்த நூல். 'ரூடின்', 'லைசா', 'புதிய சகாப்தத்தின் துவக்கத்தில்...!,'தந்தையும் தனயனும்,'புகை மண்டலம்','கன்னி பூமி' ஆகியவை அவன் எழுதிய நீண்ட நாவல்களில் மிக முக்கியமானவை.

1818-ல் பிறந்து 1883-ல் இறந்த துர்கனீவ், 1878-ல் சர்வ தேசீய எழுத்தாளர் சங்கத்தின் உப தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தான். இவன் ஒரு மனிதாபிமானி. இவனைப்போல் காதலைப் பற்றி எந்த இலக்கியாசிரியனும் அலசி அலசி எழுதியதில்லை. துர்கனீவ் ஒரு எழுத்தாளன் மாத்திரமல்ல, மனித சமுதாயத்துக்கே அறிவுரை கூறும் விவேகி; மனிதர்களின் தலைவன்!

**லியோ டால்ஸ்டாய்,** மிகப் பிரபலமான ரஷ்ய ஆசிரியன். உலகம் முழுவதும் 'உயர்ந்த எழுத்தாளன்' என்று பெயரெடுத்தவன். (1828-1910) 82 ஆண்டுகள் வாழ்ந்தான். இன்று உலகில் அதிகமாக விற்கப்படும் நூல்களில் அவனுடைய நூல்களுக்கு முக்கிய இடம் உண்டு.

டால்ஸ்டாயின் நூல்களில் மேல் நிற்

பவை 'அன்னுகரினுவும்', 'போரும் சமாதானமும்' ஆகும்.

'குழந்தைப் பருவம்' இவனுடைய முதல் நூல்.

இவனுடைய சிறு கதைகள் மற்றெந்த ஆசிரியனுடையதையும்விட, மனித சமுதாயத்திற்கு நீண்ட வேண்டுகோளை விடுகின்றன. கிறிஸ்தவ மதக் கொள்கைகள், அன்பின் தன்மை, மனிதனின் கொடூரம், தவறுகள் எல்லாம் தத்துவ முறையில் டால்ஸ்டாயின் சிறு கதைகள் விளக்கும்.

டால்ஸ்டாய் உலகறிந்த பேராசிரியன்.

**தியோடர் டாஸ்டா வஸ்கி,** 1821-ம் ஆண்டு பிறந்தவன்;சிறந்த நாவலாசிரியன்.

'ஏழைமக்கள்', 'குற்றமும் தண்டனையும்', 'இறந்துபோனவர்களின் நினைவுகள்', 'முட்டாள்', 'கார்மஸாவ் சகோதரர்கள்' ஆகிய ஐந்து நாவல்களும் இவனுடைய கொள்கையை, எழுத்து வன்மையை அறிய உதவுபவை.

இதில் 'ஏழைமக்கள்', கொகேலின் 'மேலங்கி'யின் வழியில் எழுதப்பட்டது.

டாஸ்டாவஸ்கியின் நாவல்கள் மிக நீண்டவை. அக்காலம் மற்றவர் கை வைக்கப் பயப்பட்ட மனோதத்துவத் துறை பற்றி எல்லாம் எழுதினன் அவன்.

1881 ல் இறந்தான். ஏழை; கடனாளி; தொல்லைப்பட்டவன்.

**ஆண்டன் பவ்லோவிச் செக்காவ்** உலகச் சிறு கதை எழுத்தாளர்களில் முன்னணியில் நிற்பவன். பிரெஞ்சுக்கு மாப்பசானைவிட ரஷ்யாவுக்கு செக்காவ் பெரியவன்.

கதைகள், நாவல்கள், நாடகங்கள் எல்லாம் எழுதியவன்.

செக்காவின் சிறு கதைகள் உலகத்திலேயே சிறு கதை அமைப்பைப் பாதித்தன. பலர் - உலகெங்கும் அவனுடைய சிறுகதைப் பாணியைக் கையாண்டனர். ஆனல் யாராலும் அவனை எட்டிப்பிடிக்க முடியவில்லை. செக்காவ், செக்காவ்தான் !

இவன் காலம் 1860-1904.

**மாக்சிம் கார்க்கி** ரஷ்ய இலக்கிய பொற்காலத்தின் கடைசிப் பிரதிநிதி என்று கருதப்படுபவன். இவன் புகழேணியில் உயர்ந்தபோது, இவனுக்குப் போட்டியாக ரஷ்யாவில் எந்த இலக்கியப் பேராசிரியனும் இல்லை.

கார்க்கியின் இயற்பெயர் 'அலக்ஸி மாக்ஸிமோவிச் பெஷ்கோவ்' 1869ல் பிறந்தவன்.

சிறந்த, உயிருள்ள, அற்புதமான எழுத்தாளன். பேரறிஞன், பாட்டாளிகளின் தலைவன் லெனினின் நண்பன். சின்ன வயதில் வேலை தேடி, தொல்லை அனுபவித்து, அப்போதும் படித்து இலக்கியாசிரியனுக உயர்ந்தவன்.

எப்போதும் அவன் புகழ் சொல்லும் நாவல் 'அன்னை' (Mother)யை யாரும் மறந்துவிடமுடியாது.

1936-ல் அவன் இறந்தான்.

அவனுடைய கல்லறையில் மாலட்டோவ் சொன்னது இது :

'லெனின் இறப்பிற்குப் பிறகு நமக்கேற்பட்டுள்ள மகத்தான நஷ்டம்; கார்க்கி மறைந்ததுதான்!'

இதுபோதும் கார்க்கி பற்றிக் கூற!

மாயக்கோவஸ்கி உயர்ந்த கவிஞன்.

செர்ஜி எஸ்னின் சிறந்த இலக்கிய கர்த்தா.

பேபல், இவானேவ், பில்ன்யாக் நல்ல நாவலாசிரியர்கள்.

படேய்வ், லியோனுவ், இலியா ஹெரன்பர்க் மிகத் திறம்பெற்ற சோசலிச எழுத்தாளர்கள்.

கார்க்கிக்குப் பிறகு வந்த இவர்களெல்லாம் (1917)ரஷ்யப் புரட்சிக்குப் பின்வந்தவர்கள்.

இத்தகைய மிகச் சிறந்த இலக்கிய கர்த்தாக்களாலேயே ரஷ்ய இலக்கியம் புதுமை பெற்றது; புகழடைந்தது; பொலிவுற்றது.

**வாழ்க ரஷ்ய இலக்கியம் !**

அவன் அவளைக் காதலித்தான். ஆனால் அந்தக் காதல் வெற்றி பெற முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு இல்லை. ஆகவேதான் அவன் அந்த முடிவுக்கு வந்தான்!

# துறவு

"யார் அது?"

வாசலை அடுத்திருந்த சிறிய அறையிலிருந்து எழுந்து வந்த கனத்த குரல், இழுத்துவந்த ரிக்ஷாவை தடுத்து நிறுத்தியது.

"நான்தான்பா, டாக்டர் கோதை!" ரிக்ஷாவின் உள்ளேயிருந்து ஒலித்தது கிளிமொழி.

"ரைட், போகலாம்!" மீண்டும் அதே தடித்த குரல். வானம் பொசு பொசுத்துக் கொண்டிருந்தது. வாசலைக் கடந்து வண்டி உள்ளே நுழைந்தது.

"ஏன் மேரி, உன்னிடம் சில்லறை இருக்குதா? நாலணாகொடு!"

"ஏன்மா, இம்மாந்தூரம் இஸ்துக்கினு வந்திருக்கிறேன். நாலணா கொடுக்கிறியே, நாஸ்தாக்கு பத்துமா? போமா, நீயே வச்சிக்க," பொடுபொடுவென்று பேசியவாறு வண்டியைத் திருப்பினான் ரிக்ஷா வாலா.

"கூடுதலா இரண்டணா கொடு மேரி. போகட்டும் பாவம்! இந்தாப்பா, இதையே வாடிக்கையாக் கிடாதே!"

"சேஞ்ச் வேறு இல்லையே கோதை!" மேரி கூறினாள். ரிக்ஷாக்காரன் வண்டியைக் கீழே வைத்துவிட்டு, துண்டை எடுத்து முகத்தைத் துவட்டினான்.

"ரிக்ஷா, உன்னிடம் சில்லறை இருக்குதா?"

"இல்லேமா, எட்டணா கொடு" என்றபடி நிமிர்ந்து பார்த்தான். அவன் முகத்திலே ஒரு திகைப்பு படர்ந்தது. உடல் இனம் தெரியாத அதிர்ச்சியால் தாக்கப்பட்டது. அவன் உதடுகள் ஏதோ சொல்லத் துடித்தன. திடீரென்று தலையிலிருந்த தொப்பியை முன்னே இழுத்து முகத்தை மறைத்தவாறு தலையைக் கவிழ்த்துக் கொண்டான்.

"சில்லறை இல்லையா, என்ன பண்றது இப்போ?" கோதை திகைத்தாள்.

அதற்குள் அவன், "வேணும்மா, நாளைக்கு வாங்கிக்கறேன்" என்றபடி வண்டியை இழுத்துக்கொண்டு ஓடினான். "ரிக்ஷா, ரிக்ஷா" என்று அவள் கூவினாள். அதற்குள் வண்டி, வாசலைக் கடந்து பூந்தமல்லிச் சாலையிலே போய்க்கொண்டிருந்த கூட்டத்தோடு கலந்து கொண்டது. இந்த வேடிக்கையான ரிக்ஷாக்காரனை எண்ணி, வியந்த அவர்கள் 'லேடீஸ் சர்ஜன்ஸ் குவாட்டர்சி'னுள் நுழைந்தார்கள். பொது மருத்துவ நிலையத்தினுள்ளே கோயாளிகளின் முக்கல், முனகலும், நர்சுகளின் காலடி ஓசையும் இரவின் அமைதியைக் குலைத்துக் கொண்டிருந்தன.

மத்திய புகைவண்டி நிலைய மணி பதினோரு முறை முழக்கி ஓய்ந்தது. ஏதோ ஒருபுகைவண்டி 'ஓ'வென்று கூவிக்கொண்டு நிலையத்தைவிட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்தது. வண்டியை இழுத்துக் கொண்டு மலைப்பாதைக்குத் திரும்பினான் ரிக்ஷாக்காரன்.

அவன் இதயத்தில் ஒரு புதிய கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. இன்றைய சம்பவம் அமிழ்ந்து விட்டது. எனினும் அது எழுப்பிய

நினைவலைகள், அவனது சிந்தனையைக் குழப்பிக் கொண்டிருந்தன. நடந்து மறந்தவைகளெல்லாம் அவனது நினைவரங்கில் இப்பொழுது நடப்பவைகள்போல காட்சியளித்தன. ஆம்! அப்பொழுது...சில ஆண்டுகட்கு முன்னால்...

தாமரைக் குளம், நாஞ்சினாட்டில் பண்டை இலக்கியங்களெல்லாம் புகழ்ந்து கூறும் பஃறுளியாற்றின் (பழையாறு) கரையில் இருக்கும் ஒரு சிற்றூர். பெயருக்கேற்பவே அந்த சிற்றூரின் நான்குபுறமும் காட்சியளிக்கும் செந்தாமரைக் குளங்கள் அந்த ஊருக்குப் புதிய அழகைத் தந்துகொண்டிருந்தன. ஊரைச்சுற்றி வளர்ந்தோங்கி நிற்கும் தென்னை மரங்களும், வளமான நஞ்சைக் காடுகளும் ஊரின் இயற்கையழகை இன்னும் ஒருபடி உயர்த்திக் காட்டின. இயற்கை நலங்கள் அத்தனையும் பெற்ற அந்த சிற்றூரில்தான் பழனி பிறந்து, தவழ்ந்து, நடந்து, வளர்ந்து, வாழ்ந்தான். வயதான பெற்றோர் ஆசைக்கும் அருமைக்கும் ஒரே மகன் என்ற காரணத்தால் அவனிடம் கொஞ்சம் அதிகமாகவே அன்பு காட்டினர். எப்படியாவது உயர்ந்துவிட மாட்டோமா என்ற ஆசைக்கும், எங்கே தாழ்ந்து விடுவோமோ என்ற அச்சத்துக்கும் இடையே ஆட்பட்டுத் தவிக்கும் நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்தவன் அவன். ஏதோ இரண்டு ஏக்கர் நிலமும், இருப்பதற்கு வீடும், இரண்டு மூன்று எழுத்துக்களும் 'என் சொத்து' என்று அவன் சொல்லிக்கொள்வதற்கு ஆதாரமாக இருந்தன. மதிபார்த்து சிரித்து, மரப்பாச்சி வைத்து ஆடி, மணல் வீடு கட்டி மகிழ்ந்து, சிறு பறை அறைந்து, சிறு தேர் இழுத்து ஓடி அவன் விளையாடிய காலத்திலெல்லாம் அவனுக்குத் துணையாக இருந்தாள் கோதை.

கோதை, சீமான் செல்வநாயகத்தின் மகள். அவனது வீட்டின் எதிர் மாளிகையில்தான் அந்த அழகின் திருஉரு களிநடம் புரிந்தது. கோதையின் குடும்பமும் பழனியின் பெற்றோரும் சாதியால் வேறுபட்டிருந்தாலும் அன்பாலும், பண்பாலும் நெருங்கி உறவாடினர். குழந்தைகள் இரண்டும் ஆடிப்பாடியும், அடித்தும் சிரித்தும் விளையாடுவதைக் கண்டு பெற்றோர்களின் உள்ளம் பெருமகிழ்வடைந்தது. தவழும் பருவத்தைக் கடந்து தத்தி நடக்கும் பருவத்தைத்தாண்டி ஆரம்பப்பள்ளியிலே அவர்களிருவரும் ஒருசேர அடியெடுத்து வைத்தனர். கோதை உண்டால்தான் பழனி உண்பான். பழனி உண்டால்தான் கோதை உண்பாள்.

அந்த சின்னஞ் சிறு வயதிலேதான் பழனியின் குடும்பத்திலே புயல் வீசத் துவங்கிற்று. பழனியின் தந்தை கொடிய நச்சுக் காய்ச்சலுக்குப் பலியானார். அவரை ஆட்கொண்ட நோய் சில பல நாட்களுக்குள் பல நூறு ரூபாய்களை விழுங்கியதோடு அவர் வாழ்வையும், குடும்பத்தின் வளத்தையும் பறித்துச் சென்றது.

துவக்கப் பள்ளியை முடித்துவிட்ட கோதையும் பழனியும் தாமரைக் குளத்திலிருந்து மூன்று கல் தொலைவிலிருக்கும் சுசிந்திரம் பள்ளியில் தங்கள் மேற்படிப்பைத் தொடர்ந்தனர். சீமான் செல்வநாயகத்தின் செவலைக் காளைகளின் குதிரை மணிச் சத்தம், காலையும் மாலையும் அந்த பாதையிலே ஒலித்துக்கொண்டிருந்தது. பழனியும், கோதையும் அந்த வண்டியிலேதான் பள்ளி சென்று வந்தனர். அந்த உயர்நிலைப் பள்ளியை அடுத்திருக்கும் நந்தவனமும், சூழ்ந்திருக்கும் தென்னந்தோப்பும், தொட்டு ஓடும் பழையாறும் அந்தச் சின்னஞ் சிறுசுகளின் பிஞ்சு உள்ளங்களைக்

கவர்ந்தன. பள்ளியின் சுற்றுப்புறங்களிலெல்லாம் சிட்டுக்குருவிபோல ஓடித் திரிந்தனர். பள்ளி ஆசிரியர்களிடமிருந்து 'நல்லவர்கள்' என்ற பெயரைமட்டுமல்ல 'கெட்டிக்காரர்கள்' என்ற பட்டத்தையும் தட்டிப் பறித்தனர். நாள் என்ற நீர்த்துளி பல ஒன்று சேர்ந்து, மாதநீரோடையாக மாறி, ஆண்டு என்றநதியிலே சங்கமமாகிக் காலம் பறந்துகொண்டிருந்தது.

அப்பொழுது அவர்கள் இருவருமே பள்ளி இறுதி வகுப்பில் பயின்றுகொண்டிருந்தனர். 'அரசாங்கத் தேர்வு' என்ற அச்சம் அவர்களை ஆட்டிப் படைத்து பாட நூற்களிலேயே கண்ணையும் கருத்தையும், பதிய வைத்தது. சாதாரண 'கெஷன்'னேடுசுற்றிகொண்டிருந்த கோதை பாவடை, சோளியால் தன் பருவ வளர்ச்சிக்குத் திரை போட்டாள். ஆனுல் அந்தத் திரையை விலக்கிக் கொண்டு பருவப் பூரிப்பு பல்லைக் காட்டியது. எனவே தகாத செயல் புரியும் அதனைத் தடுத்து நிறுத்த, தாவணி தேவைப்பட்டது. பழனியும் ஆர்வ நெஞ்சினனுய், அரும்பு மீசைக் காரனுல் வளர்ந்து கொண்டிருந்தான்.

ஒரு நாள் காலை பாட நூற்களின் மேல் விழிகளை மேய விட்டுக் கொண்டிருந்த பழனியின் கையில் ஒரு குவளைக் 'காப்பி'யைக்கொடுத்தவாறு, "இனிமே நீ கோதையோடு கண்டபடியெல்லாம் சுற்றிக் கொண்டு திரியமுடியாது!" என்ருள் அவன் தாயார்.

"ஏனம்மா?"

"ஏனு? அவள் பெரியவளாகிவிட்டாள்!"

அவன் கருத்து ஏட்டின்மேல் படியவில்லை. மாடி முன்றிலில் வந்து நின்றவாறு மாளிகையைக் கவனித்தான். ஊரார் பலர் உள்ளே போய்வந்து கொண்டிருந்தனர். வண்டியிலே வாழைப்பழக்குலைகள் வந்து இறங்கின. கோதையின் உறவினர்கள் பலர் காரிலும் வண்டியிலுமாக அயலூரிலிருந்து வந்து இறங்கிக்கொண்டிருந்தனர். அன்று பழனி பள்ளிக்குப் போகவில்லை. தொடர்ந்து இரண்டு வாரங்கள் கோதையும் பாடசாலைக்கு வரவில்லை. பள்ளிக்கூடம் பழனியைப் பொறுத்த அளவில் பாலைவனமாகக் காட்சியளித்தது.

கோதைக்கு சட்ட திட்டங்கள், கட்டுக்காவல்கள் விதிக்கப்பட்டன. உரிமைகள் பலவற்றைப் பறித்துக் கொண்டு அவளைச் சில துறைகளில் அடிமையாக்கினர். கோதையின் தாய் அவளை அழைத்து "இந்தாம்மா, கோதை! பழனியோடு இனிமேல் நீ பேசக்கூடாது. நாளைக்கு நீ வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட வேண்டியவள். அதை உணர்ந்து நடந்துகொள்" என்று போதனை புரிந்தாள். அந்த அறிவுரையைச் சுற்றியே அவளது உள்ளம் வட்டமிட்டது. 'பழனியோடு பேசக்கூடாதா! ஏன்?, வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட வேண்டியவளா...? அப்படியானுல் பழனி...? என்றெல்லாம் அவள் மனம் எண்ணிக் குமுறியது, நினைந்து உருகியது. பழனியும், கோதையும் 'ஏன் பெரியவர்களாக வேண்டும், என்றுமே சிறியவர்களாக இருக்கக்கூடாதா' என்று எண்ணினர்.

அன்றுமுதல் பள்ளிக்குச் செல்லும்போது பழனிக்கு கோதையின் வண்டியில் இடம் தரப்படவில்லை. ஊரினுள்ளே அவர்கள் கலந்து பேச உரிமை மறுக்கப்பட்டாலும், ஊர் எல்லைக்கு அப்பால் அவர்களது கண்கள் உறவாடி மலர்ந்ததையோ அவர்கள் காதல் உரையாடி மகிழ்ந்ததையோ யாரும் தடுக்க முடியவில்லை. செம்புலப் பெயல் நீர்போல, அன்புறு நெஞ்சம் தாம் கலந்தன. பள்ளி இறுதித் தேர்வும் நடந்து முடிந்தது. இருவரும் மூன்ருவது வகுப்பில் தட்டுத் தடுமாறிக் கரையேறினர்.

நாகர்கோவில் இந்துக் கல்லூரியில், இடைநிலை வகுப்பின் இரண்டாவது பிரிவில் கோதை புகுந்தாள். பழனியும் தொடர்ந்தான். காலையும் மாலையும் கோதையின் பளபளப்பான 'மோரிஸ்' கார் வளவளப்பான அந்த காங்கிரிட் சாலையிலே மிதந்து கொண்டிருந்தது. பழனியோ வியர்வை கொட்ட ஓடிநடந்து, வெயில் சுட காத்து நின்று, மோட்டாரினுள்ளே முண்டியடித்து ஏறி, கால்கடுக்க தவம்புரிந்து கல்லூரி சென்று கொண்டிருந்தான். கதாசிரியர்களுக்கு நவீன காதலின் பிறப்பிடமாகவும், மாணவர்க்கு காதல் பேருலகின் நுழைவு வாயிலாகவும் இருந்துவரும் கல்லூரி இவர்களுக்கிடையே ஏற்பட்டிருந்த காதல் பிணைப்பையும் கண்காணித்து வந்தது. குழந்தைப் பருவத்திலிருந்தே அன்பாக அரும்பி, பாசமாக அவிழ்ந்து, காதலாக மலர்ந்து, பண்பு மணம் பரப்பிக் கொண்டிருந்த உறவுக்கு கோதையின் பெற்றோர் உலைவைக்க முயன்றனர்.

அன்று முழுமதி நாள். பால் போல் நிலவு காய்ந்து கொண்டிருந்தது. ஊர் ஆரவாரத்தையும் சலசலப்பையும் அடக்கிக்கொண்டு அமைதி இரவின் துணையோடு தனது ஆட்சியைத் துவக்க முயன்றுகொண்டிருந்தது. படுக்கையிலே தூக்கம்வரவில்லை பழனிக்கு. பலகணித் திரையை ஒதுக்கிவிட்டு எதிர்மாளிகையை உற்றுப் பார்த்தான். மாடி முன்றிலிலே கோதை நின்றுகொண்டிருந்தாள். அவள்விழியும் நினைவும் எதிர்வீட்டினுள்ளே துடித்துக் கொண்டிருக்கும் அவனது உயிரின் ஒரு கூறைத் தான் தேடிக் கொண்டிருந்தன. பழனி வீதியிலே நின்றுகொண்டு மேல்துண்டை அசைத்து வாழைமரக் கொல்லைக்கு வரச்சொல்லி விட்டு தன்வழியே நடந்தான். அதிகார அணைகட்டித் தடுக்கப்பட்டிருந்த அன்பு வெள்ளம், அந்த வாழைமரச் சோலையிலே மோதிக் கலந்தது. பழனியின் மடிமீது தலைவைத்துப் படுத்தபடி கோதை இன்பக் கனவுகளில் மிதந்து கொண்டிருந்தாள். அவள் தன்னை மறந்து ஏதேதோ பேசிக்கொண்டிருந்தாள். எத்தனை எதிர்ப்புகள் வந்தாலும் அவற்றைத் துச்சமென மதித்து, தூரஒதுக்கிவிட்டு மன்றவில் கூடவேண்டும், மணம் பெற வேண்டும் என்று திட்டம் தீட்டினர்.

திடீரென்று அங்குவந்த சீமான் செல்வநாயகம் கொக்கரித்தார். கவலையின் அடித்தளத்தில் நின்றபடி கோதை கண்ணீர் சொரிந்தாள். வெட்கமும் வேதனையும் பிடுங்கித் தின்ன பழனி வெறியுணர்ச்சியை மறைத்துக் கொண்டு வீர உணர்ச்சியை வெளிப்படுத்தினன். பழனியின் விளக்கமோ, கோதையின் விவாதமோ செல்வநாயகத்தின் சிந்தையைத் தொடவில்லை. 'சாதிவிட்டுச் சாதி கல்யாணமா?' என்று கொதித்தார். பழனிக்கு அன்று இறுதி எச்சரிக்கை தரப்பட்டது. 'இனிமேல் இதுபோல் ஏதாவது நடந்தால்...?' அவர் உறுமினர். கோதையின் கல்லூரிப் படிப்புக்குத் தடையுத்தரவு போடப்பட்டது. பழனியின் தாயாரை செல்வநாயகமே சந்தித்து 'பையனின் உடம்பு பத்திரம்' என்று சொல்லி வைத்தார். பழனி நடைப்பிணமானுன்.

மறுஆண்டு கோதையின் வற்புறுத்தலுக்கிணங்க திருச்சி புனித சிலுவை மகளிர் கல்லூரியில் கோதையின் படிப்பு தொடர்ந்தது. பழனி தோல்வியை அணைத்துக் கொண்டு இந்துக் கல்லூரியிலேயே படித்துக் கொண்டிருந்தான் கடிதங்கள் அவர்கள் காதலை வளர்த்தன. அவன் ஊனை மறந்தான். உறக்கத்தைத் துறந்தான். மகன் பற்றிய கவலை அவனைப் பெற்று வளர்த்த தாயை மரணக் குழியில் தள்ளியது. இவர்கட்கிடையே கடிதத் தொடர்பு இருப்



பதை அறிந்து கொண்ட அவள் தந்தை, பழனியைப் பயமுறுத்தினர். அடியாட்கள் மூலம் அல்லல்கள் பல கொடுத்தார். தன் காதலுக்கு மதிப்பில்லாத, காதலியும் அங்கில்லாத ஊரை விட்டுப் புறப்பட்டான் பழனி. திருச்சியிலே கோதை கல்லூரி விடுதிக்கு வெளியே தலைநீட்ட முடியாத அளவுக்கு காவல் போடப்பட்டது. சென்னை நகர 'பிளாட்பாரம்' தன்னிலை கெட்டுவந்த பழனிக்கு தங்குவதற்கு இடம் தந்தது. கல்லூரிப் படிப்பிற்குத் தலைமுழுக்கு போட்டு விட்டு காலம் கழிப்பதற்கு ஒரு வழியைப் பார்த்தான். அதுதான் கடைசியாக அவன் தேடிக்கொண்ட மனிதனை மனிதன் இழுக்கும் 'புனிதமான' செயலான அந்த வேலை!

"டேய் யாரது சோம்பேறி, ரிக்சா வையும் விட்டுக்கினு தண்டவா ளத்தை பார்த்துக்கினு நிற்கிறன். தற்கொலை எதாச்சும் பண்ணப் போறியா?" போலீசாரின் உறுமல் வண்டியை இழுத்துக் கொண்டு அவனை ஓடவைத்தது. இன்று அவனது வண்டியிலே ஏறிவந்தவள். கோதைதான்! அவளிடம் 'நான் தான் பழனி' என்று அவன் சொல்லியிருந்தால்...?பழனி நினைவுக்கு சூடேற்றியவாறு நடந்தான். இடத்தைவிட்டு எழுந்து வேறொரு இடத்தில் சென்று சுருண்டு படுத்தான்.



சுழன்று கொண்டிருந்த மின் விசிறியின் கீழே 'சோபா'வில் உட்கார்ந்து மேனாட்டு ஆங்கில இதழ் ஒன்றைப் புரட்டிக்கொண்டிருந்தாள் கோதை. பணியாள் ஒருவன் தலைமை மருத்துவர் கொடுத்த சீட்டு ஒன்றை அவளிடம் தந்துவிட்டுச் சென்றான். அந்தச் சீட்டை வாங்கிப் படித்ததும் அவசர அவசரமாக கோட்டை எடுத்து மாட்டிக் கொண்டு, குறிப்பேட்டையும் நாடிக்குழாயையும் கையில் பிடித்தவாறு நடந்தாள் அறுவைக் கத்தன் (ஆபரேஷன் தியேட்டர்) வெளியே தலைமை மருத்துவரும் நர்சுகளும் நின்று கொண்டிருந்தனர்.

'மிஸ். கோதை இருபத்து மூன்றுவது வார்டில் எட்டாவது பெட், கொஞ்சம் சீரியஸ் கேசு..... இன்னிக்கு மார்னிங்தான் ஆபரேஷன் நடந்தது. கவனித்துக் கொள்ளுங்கள்' என்று தலைமை மருத்துவர் கூறினர்.

'எஸ், சார்' என்று பதில் கூறிவிட்டு இருபத்து மூன்றுவது வார்டை நோக்கி கோதை நடந்தாள். படுக்கையிலே கிடந்த நோயாளி 'நித்ராதேவி'யின் அரவணைப்பிலே தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருந்தான். வலது கால் முட்டுக்குக்கீழ் எடுக்கப்பட்டிருந்தது. இடது காலும் பலத்த காயங்களோடும் கட்டுகளோடும் காட்சியளித்தது நெற்றியிலும் தலையிலும் வேறு பலத்த கட்டுகள் போடப்பட்டிருந்தன. நினைவிழந்து தூங்கிக் கொண்டிருந்த அந்த நோயாளியின் முகத்தில் ஒரு அமைதி, பரிபூரண நிம்மதி குடிகொண்டிருந்தது. அடர்ந்து வளர்ந்திருந்த இளந் தாடி அந்த முகத்துக்கு ஒரு புதுக் களை ஊட்டிக் கொண்டிருந்தது. அந்த முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றாள் கோதை. எங்கேயோ அந்த முகத்தைப் பார்த்தது போன்ற ஓர் எண்ணம் அவள் இதயத்திலே நிழலாடியது. நினைத்து நினைத்துப் பார்த்தாள்; நினைவுக்கு எட்டவில்லை. ஆனல் இளமையின் பூரிப்பு ஒவ்வொரு அங்கத்திலும் ஒளிவிட, படுக்கையிலே வீழ்ந்து கிடந்த அந்த கட்டுமஸ்தான உடலைவிட்டு அவளது கண்ணோட்டம் விலகவில்லை. அவளது இதய உணர்ச்சி அந்த உடலோடு ஒன்றிக் கலந்து விட்டது போன்ற ஒரு தோற்றம் அவளுக்குத் தெரிந்தது.

"என்ன மிஸ் கோதை" 'பேசியண்டை' அப்படியே விழுங்கிவிடுவதுபோல வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே!" அவள் காதுகளைத் தாக்கியது கேள்வி. குரல்வந்த திசையில் திரும்பிப் பார்த்தாள். கூப்பிய கரங்களோடு டாக்டர் திருமாறன் நின்று கொண்டிருந்தார். கோதையும் பதிலுக்கு வணக்கம் தெரிவித்தாள். திருமாறன் அவளது அருகில் வந்து கொண்டு 'யார் இந்தே பேசியண்ட்' என்று கேட்டார்.

"யாரோ பாவம், பலத்த அடி!" என்று இரக்கம் தொனிக்கக் கூறினாள்.

'யாரோவா? பெயர்ப் பலகையைப் பார்த்தால் போகிறது' என்றபடி, பெயர்ப் பலகையை எடுத்துப்

**தகுந்த காரணம் !**

"உன் திருமண மோதிரத்தை ஏன் தவருன விரலில் போட்டுக் கொண்டிருக்கிருய் ?"

"நான் தவருன மனிதனைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறேன்; அதுதான் காரணம் !"

பார்த்தான். அதில் பெயர் என்று போடப்பட்டிருந்த கோடு நிறைவு பெருமலே நின்றது. அதன் கீழே ரிக்ஷாக்காரன் எழும்பூர் பிளாட்பாரம்' என்று எழுதியிருந்தது.

கோதையின் நினைவைவிட்டு விலகி நின்ற நிகழ்ச்சி மீண்டும் வந்து ஒட்டிக்கொண்டது. ஆம் அவன்தான்...அன்று இரவு நாளை வந்து ரூபாயை வாங்கிக் கொள்கிறேன் என்று சொல்லிவிட்டுச் சென்ருனே அதே ரிக்ஷாக்காரன் தான்! அவள் உள்மனம் பேசியது. அவளுக்கு அந்த உருவத்திடம் ஏதோ ஓர் இனம் தெரியாத கவர்ச்சி இருந்தது. 'மிஸ் கோதை! நீங்கள் போகலாம், மாலை மூன்று மணிக்கு வந்தால் போதும். அது வரை நான் இருக்கிறேன்' என்ருர் திருமாறன். 'தாங்ஸ்' சொல்லி நகர்ந்தாள் அவள்.

திருமாறன் எம். பி. பி. எஸ். பட்டத்தை வாங்கிக் கட்டிக் கொண்டு அங்கே துணை மருத்துவராக பணிபுரிபவர். ஆழ்ந்த அறிவும் உயர்ந்த நோக்கும், சிறந்த பண்பும், பொருள் செறிந்த பேச்சும் எழில்நிறைந்த உருவும் அவருக்கு ஒரு சிறந்த எதிர்காலம் உண்டு என்பதை சித்தரித்துக் கொண்டிருந்தன. தாமரை இலை மேல் தண்ணீர்போல, தொட்டும் தொடாமலும் மருத்துவக் கல்லூரி நாகரிகத்தோடு தொடர்பு வைத்துக் கொண்டிருந்த கோதை, அவர் கருத்தைக் கவர்ந்தாள்; நெஞ்சில் நிறைந்தாள். சந்தர்ப்பமும் சூழ்நிலையும் அவர்களை ஒரேவார்டில் பணிபுரிய வைத்தன. காதல் கீதம் பாடும் அமராவதியாக அவள் இருப்பாள் என்று அவர் தப்புக் கணக்குப் போட்டார். ஆனல் அவள் காதலைக் கடந்த மணிமேகலைபோல காட்சி தந்தாள். புரியாத புதிராகவே அவள் அவர் நினைவிலே சதிராடினுள். கனவிலும் நினைவிலும் அவள் நினைவாஞர் மாறன்.

சிறிது நேரத்தில் எதிரே படுத்திருந்த நோயாளியின் உடல் அசைந்தது. விழிகள் திறந்தன. டாக்டரையே உற்றுப் பார்த்தான். டாக்டர் திருமாறன் கையிலிருந்த ஊசிக்குழாயில் மருந்தை நிரப்பி நோயாளியின் கையினுள் ஏற்றினுர். அருகில் நின்ற தாதி, ஒரு கோப்பை பானத்தை அவனுக்குப் பருகக் கொடுத்தாள். அவன் மெல்லிய குரலில் 'அம்மா, அப்பா' என்று முனகிக் கொண்டிருந்தான்.

"ஐயா, உங்கள் பெயர் என்ன?" டாக்டர் திருமாறன் மெதுவாகக் கேட்டார்.

"பழனி!" அவன் ஈனசுரத்தில் பதில் சொன்ஞன். கட்டிலை அடுத்துத் தொங்கிக்கொண்டிருந்த பெயர்ப் பலகையில் பெயரைப் பொறித்துக் கொண்டார். மீண்டும் சிறிது நேரத்தில் நோயாளி தூக்கத்தில் ஆழ்ந்தான்.

மாலை மூன்று மணிக்கு கடிகார மணியோசை முன்னே வர கோதை பின்னே வந்தாள். திருமாறன் 'பேசியன்டின் பெயர் பழனி' என்று கூறக் கேட்டதும் திடுக்கிட்டாள். அவளது இதயத்திலே புயல்வீச ஆரம்பித்தது. நடந்து முடிந்து, சில வேளைகளில் அவளால் மறந்து விடப்பட்ட அல்லது மறக்கடிக்கப்பட்ட நிகழ்ச்சிக

ளெல்லாம் நினைவுகளாகத் தோன்றி அவளைத் திகைக்க வைத்தன. அவள் உடலோடு உயிராக ஒன்றி விட்ட அவன், இன்று உயிரற்ற பிணம் போல அவளெதிரே விழ்ந்து கிடப்பது அவளுக்கு வேதனையைத் தந்தது. அவளது தந்தையின் கெடுபிடியால் ஊரை விட்டு பழனி ஓடிப்போன பிறகு அவன் என்னவானுன், எப்படியிருக்கிருன் என்பதையே அறியாமல் திகைத்தாள். சில பல வேளைகளில் அவன் நினைவு வருகின்ற நேரத்தில் எல்லாம் கண்ணீர்க் கடலில் நீந்திஞள். அந்த நேரத்தில்தான் திருமாறன் அவள் வாழ்வில் தலைநீட்டிஞர். அவரை நண்பராக மதித்தாள், ஆனல் அவள் உள்ளம் ஏற்றுக் கொள்ளவில்லை. எனினும் ஒரோர் சமயம் அவளுக்கு திருமாறன் பற்றிய் சபலம் தட்டுவதுண்டு. அப்போதெல்லாம் அவள் மணிமேகலையை எண்ணிக்கொள்வாள். இன்று அதே பழனி அவளிடமே உயிருக்கு மன்ருடிக் கிடக்கிருன்! ஏன், அவன் வண்டியிழுப்போனுக மாறினுன்? விடை கிடைக்காத விடுகதையாகத் தோன்றியது இவ்விஞ. அன்று அவளையும் மேரியையும் மருத்துவ மனையில் கொண்டு சேர்த்ததும், கூலி பெருமல் திரும்பிச் சென்றதும் அவள் நினைவுக்கு வந்தன.

டாக்டர் திருமாறன் அவள் முகத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியையும், சலனத்தையும் புரிந்துகொண்டார். "ஏன் மிஸ். கோதை, பேசியண்டைப் பார்த்து இவ்வளவு அதைரியப்படுகின்றீர்கள்"? அவர் கேட்டார். "ஒன்றுமில்லை...பாவம், இவர் எனக்குத் தெரிந்தவர். எப்படியோ வாழ்ந்தார். இப்பொழுது இப்படி மாறிவிட்டார்!" என்ருள். அவள் கண்களில் நீர் ததும்பிக் கொண்டிருந்தது.

அவள் விழிகளில் வழிந்த நீர் திருமாறனின் இதயத்தில் ஒரு

### ஏன் அவ்வளவு நேரம் ?

"நான் அவனிடம் ஒரு பத்து நிமிடம்தான் பேசினேன். அதற்குள் என்னை 'முட்டாள்' என்று சொல்லிவிட்டான் அவன்!"

"அதற்கு அவனுக்கு அவ்வளவு நேரமா பிடித்தது!'

சூருவளியையே ஏற்படுத்தியது. "அந்த ரிக்ஷாவாலா யார்? அவன் மேல் இவள் இவ்வளவு இரக்கம் காட்டுவதேன்? இவர்கட்கிடையே என்ன தொடர்பு?" என்றெல்லாம் அவரது உள்ளம் கேட்டது.

"பயப்படத் தேவையில்லை நீங்கள், விரைவில் நலமாகிவிடும். நாம் இருவரும்தானே இந்த வார்டில் இருக்கிருேம், ஸ்பெஷல் அட்டன்சன் கொடுக்கலாம்" என்றெல்லாம் அவளுக்கு அனுதாபம் கூறிஞர். சிறிது நேரத்தில் விடை பெற்றுக் கொண்டு நகர்ந்தார்.

திருமாறன், பழனி இருவரும் இப்போது மாறிமாறி அவள் இதயத்தில் தோன்றிக் கொண்டிருந்தனர். பழனி விட்டுப்போன இடத்தில் திருமாறன் நுழையத் துடித்துக் கொண்டிருந்தார். ஆனல் தமிழ் மண்ணுக்கே உரிய பெண்மைப் பண்பு அவரைத் தடுத்து நிறுத்தியது. காலமெல்லாம் கன்னியாகவே வாழ்ந்துவிட வேண்டும் என்று அவள் எண்ணவில்லை. முகரப்படாத மலராக செடியில் இருந்தபடியே வாடி வதங்கி, சருகாகி, கீழேவிழுந்து, புழுதியோடு புழுதியாவதை அவள் விரும்பவில்லை. ஆனல் பழனி, திருமாறன் இருவருள் யாரைத் துணைக்கொள்வது? அவள் எண்ணிஞள். 'காளை ஒருவனை கைப்பிடித்து'

வாழ வேண்டும் என்பதுதான் அவள் ஆசை. ஆனல் அந்த 'ஒருவனின்' இடத்திற்கு உரிமை கொண்டாடி இப்பொழுது இருவர் நிற்கிருர்கள். பழனி, அரும்பாக இருந்த காலத்திலிருந்து அவளது அன்புக்குரியவன்; பண்பின் நிலைக்களன். அதிகம் படிக்காவிட்டாலும் அறிவின் ஊற்றுதான். ஆனல் இன்று அவன் முடவன். காலை இழந்து விட்டான், கட்டிலோடு கட்டிலாகக் கிடந்து அழுந்திக் கொண்டிருக்கிருன். திருமாறன், தெளிந்த பண்பும், தேர்ந்த அறிவும் உடையவர். பார்த்தவரைப் பற்றி இழுக்கும் கவர்ச்சி அவர் தோற்றத்திலே ஒளிவிட்டது. அதோடு பரம்பரைப் பணக்காரர். 'இந்த இருவருள் ஒருவர் யார்?' என்ற கேள்வியைச் சுற்றி அவள் உள்ளம் ஓடிக்கொண்டிருந்தது.

வழக்கத்திற்கு மாருக கோதை அன்று இரவு வெகுநேரம் வார்டில் பழனியின் பக்கத்திலேயே இருந்தாள். பழனி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். தாதிகளிடம் சொல்லி அவனைத் தனியாகக் கவனிக்கச் சொன்னுள். தலைமை மருத்துவரிடமும் 'தனக்கு வேண்டிய ஆள்' என்று அறிமுகப்படுத்திளுள். அவரும் இரண்டு தடவை வந்து பார்த்துச் சென்ருர்.

மறுநாள் வைகறைப் பொழுதிலேயே வார்டுக்குக் கோதை வந்து விட்டாள். பகல் முழுவதும் பழனியின் பக்கத்திலிருந்து அவள் நகரவேயில்லை. ஏறத்தாழ எட்டு மணிநேர நீண்ட பெரும் தூக்கத்திலிருந்து கண்விழித்தான் அவன். திரும்பிப் பார்த்தபொழுது எதிரே நாற்காலியில் அழகி ஒருத்தி ஆரஞ்சுப்பழத்தை உரித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அவளை அடுத்து நின்றுகொண்டிருந்த ஓர் குமரன் அவளோடு சிரித்து பேசிக்கொண்டிருந்தான். எதிரே ஆரஞ்சு, ஆப்பிள் பழங்களும், குளுக்கோஸ் போன்ற விலையுயர்ந்த சத்தான உணவுப் புட்டிகளும் அடுக்கப்பட்டிருந்தன. கூர்ந்து பார்த்தான். அவள் யார் என்பதை உணர்ந்து கொண்டான். ஏழை பழனி இன்று நீர்மேல் எழுத்துப் போல் அவள் நினைவில் இருந்து மறைந்து விட்டான். பழனிக்காக வளர்ந்த கோதை, இன்று வேருெருவனேடு வாழப்போகிருள். கலைக் கல்லூரியோடு பழனியைத் துறந்தாள்; மருத்துவக் கல்லூரியில் மாறனைத் தொடர்ந்தாள். மனிதனை மனிதன் இழுக்கின்ற கேவலத் தொழில்புரியும் தான் எங்கே, மனித குலத்தை வாழவைக்க உன்னதப் பணிபுரியும் அந்த டாக்டர் எங்கே? நொண்டிக்கு மாலை இட்டு, வாழ்வெல்லாம் கோதை நொந்து சாகவேண்டாம். கோதையின் வாழ்வை சோகத் திரையிலே கண்ணீரால் தீட்டப்பட்ட ஒரு துயர ஓவியமாக்க நான் விரும்பவில்லை. மாறனைக் கைப்பிடித்து அவள் மங்கள வாழ்வு பெறட்டும், அதற்கு ஒரேவழி அவர்களை எனக்குத் தெரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ளக்கூடாது...'' என்று அவன் இதயம் பேசியது. அவன் விழிகளிலே நீர் வழிந்தது.

'கோதை, கோதை! பழனி விழித்து விட்டார்!' மாறன் கூவிஞர். கோதை திரும்பிப் பார்த்தாள். இலேசாகத் தாடியைத் தடவியவாறே பழனி அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். கோதையின் உணர்ச்சி பொங்கி வழிந்தது.

'பழனி! பழனி! என்னைப் பார் பழனி!....உனக்கு ஏன் இந்த அவல நிலை ஏற்பட்டது?' என்றெல்லாம் அரற்றி அழுதாள்.

பழனி தனது ஆசாபாசங்களையெல்லாம் அடக்கிக் கொண்டு சிரித்தான். திருமாறனைப் பார்த்து ''ஏன் டாக்டர் உங்கள் மனைவி இப்படி அழுகிருர்கள்?....என்னை அவர்கட்கு எப்படி டாக்டர் தெரி

யும்? என்றெல்லாம் விட்டு விட்டுப் பேசினான்.

திருமாறனுக்கு பழனியின் வாயால் கோதை தன் மனைவி என்று கூறக் கேட்டதைப் பற்றி மகிழ்ச்சிதான். அவர் அந்த ஆனந் தத்தை நினைவிலேனும் அனுபவிப் பதற்கு முன்னதாகவே கோதை, "ஏன் பழனி உனக்கு மூளை கலங்கி விட்டதா?...கனவு கண்டாயா?... என்னை யாரென்றே உனக்குப் புரியவில்லையா பழனி?...உண்மை யாகவே புரியவில்லையா?'' என் றாள். பழனி இதுவரை அவளைத் தெரியாததாகவே காட்டிக் கொண் டான். தாதி கொடுத்த பழரசத் தையும், மருந்தையும் அருந்தி விட்டு, மீண்டும் பழனி தூங்குவது போல் நடித்தான்.



நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. பழனியின் உடல் நலத்திலும் குறிப்பிடத்தக்க அளவு மாற்றங்கள் இருந்தன. மரக்கால்களின் துணை கொண்டு நடக்கின்ற ஆற்றல் பெற்று விட்டான். நாள்தோறும் காலையும் மாலையும் மருத்துவ மனை யின் சுற்றுப்புறத்தில் நடந்து பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தான். இன் னும் ஒருவாரத்தில் வெளியே செல்லலாம் என்று தலைமைமருத்து வரும் கூறிச் சென்றார்.

வைகறை நேரத்திலேயே வருகை தந்து, பழனியின் உடல் நலத்தின் மேல் பரிவு காட்டினாள் கோதை. அவளுக்காக அவன்மேல் அக்கரை கொண்டார் மாறன்.

ஒருநாள் காலை அவள் வார்டுக்கு வந்தபோது சுடுமணலில் கால் வைத்த குழந்தைபோல் அலறினாள். காரணம் பழனி படுக்கையில் இல்லை. தாதியை அழைத்துக் கேட்டாள்; அவள் தனக்குத் தெரி யாது என்றாள். காவலாளியை அழைத்து வினவினாள்; அதிகாலை யில் பார்த்ததாகக் கூறினான். அதற்குள் அடுத்த வார்டில் நின்று கொண்டிருந்த மாறனும் அங்கே வந்து சேர்ந்தார். தேடிப்பார்த்த பொழுது கோதையின் முகவரிக்கு எழுதிய கடிதம் ஒன்றுமட்டும் அந் தப் படுக்கையின் அடியிலிருந்து கிடைத்தது. அவசர அவசரமாக அதைப் பிரித்துப் படித்தாள். அந் தக் கடிதம் அவளது கண்ணீர் துளி யால் நனைந்து கொண்டிருந்தது. கடிதம் பேசியது:

"கோதை! இன்று, வாழ்வு துவக்கவேண்டிய நம்மை அந்தஸ்து வாட்டிவதைக்கிறது. உனக்காகவே வாழ்ந்தேன். இனியும் வாழ்ந்தால் உனக்காகவே வாழ்வேன்.

உன் தந்தைக்குப் பயந்து நான் ஊரைவிட்டு ஓடிவரவில்லை. உன்னையும் அழைத்துக் கொண்டு நான் வந்திருந்தால், தொடர்ந்து வீசும் துயரப் புயலிலே நீ தொல் லைப்படுவாயே என்ற அச்சம் என்னைமட்டும் தனியாகச் சென் னைக்கு விரட்டியது.

உடலுழைப்பால் வாழவேண்டும் என்ற எண்ணம், என் உள்ளத் திலே சிறுவயதிலிருந்தே ஊறியிருப் பது உனக்குத் தெரியும். அதன் விளைவுதான் கடைசியில் மனிதனை மனிதன் இழுக்கும் 'புனிதமான'

செயலிலே என்னை நானே ஈடு படுத்திக் கொண்டது.

வண்டி இழுக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த காரணத்தினால்தான் உன்னை நான் சந்திக்க முடிந்தது. அன்று தங்கசாலையிலிருந்து உன்னையும் உன்னோடு மேரி என்ற டாக்டரையும் வண்டியில் ஏற்றி வந்ததை நான் இன்னும் மறக்கவில்லை. நீ காசு தரும்பொழுதுதான் உன்னை இன்னாரென்று அடையாளம் கண்டேன். என் உணர்ச்சி உன்னோடு என்னையும் பேசி மகிழத் தூண்டியது. ஆனால் அன்று என் அறிவு விழித்துக்கொண்டிருந்து என்னைத் தடுத்து, அடித்து, விரட்டியது. வளர்ந்து அடர்ந்திருந்த கருத்த தாடி என்னை யாரென்று நீ புரிந்து கொள்ளமுடியாதபடி செய்துவிட்டது. அதிக நேரம் நின்றால் என்னை நீ அடையாளம் கண்டுகொள்வாய் என்ற அச்சத்தால்தான் கூலிகூட வாங்காமல் ஓடி மறைந்தேன்.

அடுத்த வாரம் எதிர்பாராத விதமாக இந்த விபத்து ஏற்பட்டது. அதன்விளைவால் மீண்டும் உன்னை நான் சந்தித்துத் திர வேண்டிய சங்கடமான நிலைமைக்கு ஆளானேன். சாந்தம் தவழுகின்ற! உன் வாழ்விலே நான் புகுந்தது. நம் இருவருக்குமே சங்கடம் தருவதுதான்.

என்னை மறந்துவிடு, நான் வாழ முடியாதவன்; உனக்கு வாழ்வு தர இயலாதவன்! மாறன் உன்னை விரும்புகிறார், நீ மறுக்கிறாயாம். தாதிகள் மூலம் சேதியை அறிந்தேன். அவர் அன்பு, ஆற்றல், திறமை, உனக்கு இன்பம் தரும். நான் உனக்குச் சுமையாக இருக்க விரும்பவில்லை. அதனால் நான் படுக்கையில் இருக்கும்போதெல்லாய என்னை யாரென்று நீ புரிந்து கொண்டாய் என்பதைத் தெரிந்திருந்தும் உன் 'பழனி நானல்ல' என்று காட்டி வந்திருக்கிறேன். அதுவும் ஓரளவுக்கு வெற்றி தரத்தான் செய்தது.

நான் திரும்பி வருவேன். திருமாறனும் நீயும் இணைந்து வாழும் காட்சியைக் காண வருவேன். உனக்காகவே வாழ்ந்தேன், இனியும் உனக்காகவே வாழ்வேன். ஆனால் இந்த இரு வாழ்வுக்குமிடையே ஒரு சிறு மாற்றம்! அன்று நம்மிடையே நிலவி வந்த உறவு காதலன் காதலி உறவுபோல் தோன்றியது; இன்று அது அண்ணன் தங்கை அன்பாக மலர்ந்து மணம் வீசுகிறது.

என்னை நீ தேடித் திரிய வேண்டாம். இது என் முடிந்த முடிவு. இதிலிருந்து என்னை யாரும் திருப்ப முடியாது. ஓராண்டு காலம் நாம் பிரிந்து வாழ வேண்டும். அதன் பிறகு நாம் அனைவருமே சேர்ந்து வாழ்வோம். நான் போய் வருகிறேன். மீண்டும் சந்திப்பேன்.

நான் பிழைகள் ஏதேனும் இழைத்திருந்தால் மன்னித்துவிடு ...விடை கொடு...வருகிறேன்.

அன்புள்ள அண்ணன்
பழனி"

கடிதம் அவள் கண்ணீரால் மெழுகப்பட்டிருந்தது. மருத்துவ மனையின் மேல் மாடியிலே நின்று வெளியே எட்டிப் பார்த்தாள். அங்கு எதுவும், யாரும் தெரியவில்லை! ★



**மோசடிக்குத்தான் எத்தனை சாதுரியம்! அதுதான் எத்தனை வேஷங்களைப் போடுகிறது. அதிலேயும் இந்த மோசடி–**



# அந்தி மயக்கம்

பூங்காவில் அதிகக்கூட்டம் இல்லை.

கோடை காலமாக இருந்தால் கூட்டம் அதிகமாக இருக்கும். அப்பொழுது வாடைக்காற்று வீசும் குளிர்காலம். வாடைக் காற்றிலே பூங்காவுக்கு காற்று வாங்க யார் வருவார்கள்? அங்கே போடப்பட்டுள்ள ஆசனங்கள் காலியாகக் கிடந்தன. குழந்தைகள் விளையாடும் இடம் வெறிச்சோடிக் கிடந்தது. கார்ப்பரேஷன் ரேடியோ மட்டும் ஒரு மூலையில் அழுது வடிந்து கொண்டிருந்தது. அதனுடைய அழுகைகூட ஏழரைமணி வரையில்தான். அப்புறம் அதன் மென்னி பிடிக்கப்பட்டுவிடும்! அதற்கப்புறம் அங்கே ஒரே சுடுகாட்டு அமைதிதான்!...பாதரச குழல் விளக்குகள் புது மணப்பெண்போல் அப்பொழுதுதான் பிரகாசிக்கத்தொடங்கின. பனி அதிகம் இல்லை. அந்தி மயங்கிவிட்டது. மணி ஆறரை இருக்கும். இரவுக்கன்னி உலகக காதலனுடன் விளையாட தன்னை அலங்கரித்துக் கொண்டு '[illegible]'மென்று புறப்பட்டுக்கொண் [illegible] தாள். குளிர் காலமாகையால் வானம் சீக்கிரமாகவே இருட்டிவிட்டது. சுற்றுப்புற சூழ்நிலையில் அவ்வளவு தெளிவில்லை. எல்லாமே ஒளி குன்றி மங்கிக்கிடந்தன. பனி இன்னும் விழவில்லை.

ராமசாமி எது தவறினாலும் தினம் பூங்காவுக்குப் போகாமல் இருக்கமாட்டார். அவர் பழக்கம் அப்படி! அத்துடன் வீட்டில் எல்லோரும் ஊருக்குப் போயிருந்தார்கள். கல்லூரி ஒன்றில் உதவி ஆசிரியர் அவர். பகலெல்லாம் இளவட்டங்களோடு மாரடித்துவிட்டு மாலையில் பூங்காவுக்குச் சென்று அமைதியைத்தேடிக்கொள்ள அவர் மனம் துடிக்கும். கடற்கரைக்குப் போகலாம். ஆனால் தினமும் போக முடியுமா? காசுவேண்டாமா? ஆகவே தம்பிடி செலவில்லாமல் அமைதி தேடி கார்ப்பரேஷன் பூங்காவைத் தஞ்சம் அடைந்தவர் ராமசாமி!

கூட்டம் அதிகமில்லாமல் இருக்கும் சூழ்நிலைதான் அவருக்குப் பிடித்துப் போயிருந்தது. நெரிசல் இல்லாமல் ஓரளவுக்கு அமைதியாக இருக்கலாமல்லவா? பூங்காவுக்குச் சற்று தள்ளிப்போனால் எழும்பூர் கடைத்தெரு கூப்பிடு தூரத்தில [illegible] வண்டிகள் சத்தமும் பலவித [illegible]சல்களும் காதில் வந்து விழும்... இருந்தாலும் மற்ற இடங்களுக்கு இந்த இடம் எவ்வளவோ [illegible] தேவலை...

அன்றும் ராமசாமி வழக்கமாக [illegible]பொழுது உட்காரும் ஒரு [illegible]ஞ்சில் வ[illegible]தார். அந்த பெஞ்சின் மறு கோடியில் யாரோ ஒருவர் உட்கார்ந்திருந்தார். வயசான ஆசாமி. காலச் சவுக்கினால் அடிக்கப்பட்டு கன்னிப் போயிருந்தது அவருடைய

வ. சம்பந்தன். பி.ஏ.

தோற்றம். சற்று அழுக்கேறிய உடை. தொள தொளவென்று சற்று கிழிந்த கோட் ஒன்று அவருடைய உடம்பை மூடிக் கொண்டிருந்தது. எங்காவது குமாஸ்தாவாக இருக்கலாம்... ராமசாமி வந்து உட்கார்ந்த சில நிமிடங்களுக்கெல்லாம் அந்தப் பெரியவர் அந்த இடத்தைவிட்டு எழுந்து போய் விட்டார்.

அவர் உட்கார்ந்திருந்த அதே இடத்தில் சொல்லி வைத்தாற் போல் சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு வாலிபன் வந்தமர்ந்தான். ராமசாமி அந்த வாலிபன் மீது கண்களை ஓட்டினர். டீக்கான டிரஸ்... மடிப்புக் கலையாத நீல நிற சட்டை ஆள்பார்வைக்கு 'ஜம்'மென்று இருந்தான். ஆனால் அவன் முகத்திலே மட்டும் தெளிவில்லை. கவலையின் அறிகுறிகள் தென்பட்டன. அவன் கண்கள் கலங்கியிருந்தன. மன அமைதிக்காக பூங்காவிற்குக்காற்று வாங்க வந்தவனுகத் தெரியவில்லை. கைகளை அப்படியும் இப்படியும் பிசைந்துகொண்டான். அவன்கண்களில் நீர்கலங்கிக்கொண்டிருந்தது. ராமசாமிக்கு என்ன விஷயம்என்று விசாரிக்க வேண்டுமென்று ஆவல்.

"என்ன தம்பி சமாச்சாரம்...? ஒருமாதிரி இருக்கியே!" என்று அவனைப் பார்த்துக் கேட்டார்.

கலங்கும் கண்களுடன் அந்த வாலிபன், "ஐயா...என்னத்தைச் சொல்வேன்...என்னுடைய இப்போதைய நிலைமை ரொம்பவும் எக்கச்சக்கமாக இருக்கு...என்ன செய்றதுன்னே தெரியலே!" என்று பதில் சொன்னான். அழுகை பொத்துக்கொண்டு வரும்போலிருந்தது அவனுக்கு!

"என்ன தம்பி?...... வெட்கப்படாதே! முழுசா சமாசாரத்தைச் சொல்லு...கேட்போம்!" என்றார் ராமசாமி.

அந்தப் பையன் முதலில் சற்று தயங்கினன். பின்பு விபரமாக சொல்ல ஆரம்பித்தான்... "ஐயா... நீங்க என் தகப்பனர் மாதிரி இருக்கிங்க...உங்க கிட்ட சொல்றதுக்கென்ன...நான் இங்கே பட்டணத்துக்கு ஒரு 'இண்டர்வியூ'வுக்காக வந்தேன். சொந்த ஊர் திருச்சி. இங்கே எனக்குத் தெரிந்தவர் யாருமில்லாததினால் ஒரு ஹோட்டலில் அறை எடுத்துக்கொண்டு தங்கினேன். இன்று பகலே 'இண்டர்வியூ' முடிந்துவிட்டது. இரவே ஊருக்குத் திரும்பிப் போகவேண்டியிருந்ததால் எதாவது சாமான் வாங்கிக்கொண்டு வரலாமென்று சைனபஜாருக்குப் போனேன். முதலில் ஒரு சில்க் கைக்குட்டைதான் வாங்கினேன். பச்சை நிற சில்க் கைக்குட்டை..'ஜம்'மென்றிருந்தது. அதன் பிறகு இன்னும் சில சாமான்கள் வாங்க வேண்டியிருந்தது. பணத்தைப் பார்த்தால் பையில் பர்ஸ் இல்லை. யாரோ பிக்பாக்கெட் அடிச்சுட்டானுங்க சார்! பர்சில் முப்பது ரூபாய் பணமிருந்தது. எல்லாம் போயுட்டுது. நாலணு சில்லறைதான் கையில் இருக்கு; யாரும் தெரிஞ்ச மனுஷாளும் இந்த ஊரில் இல்லை. எப்படி ஊருக்குப் போவேன்? இப்படி நிர்க்கதியா பட்டணத்துத் தெருவிலே அல்லாடும் படியாயிட்டுது!" அவன் அழுதே விட்டான். ராமசாமிக்குஎன்னவோ போலிருந்தது. பிறர் கஷ்டம்காணச் சகிக்கமாட்டார் அவர்...இயற்கையிலேயேஇளகிய மனசு அவருக்கு!

"ஏம்பா...ஊருக்கு எழுதிப் பணம் வரவழைக்கிறதுதானே?"

"அது எப்படீங்க முடியும். பணம் வர எப்படியும் இரண்டு நாளாகும். அதுவரை இந்தப் பட்டணத்திலே பணம் இல்லாமல் என்னத்தைச் செய்றதுங்க! யாராவது உங்க மாதிரி பெரிய மனிதர் என் மேலே இரக்கப்பட்டு கொஞ்சம் உதவி செய்தால் ஊருக்குப் போய்உடனே அனுப்பிடலாம்...நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன் சார்...எனக்கு இப்ப இந்தமாதிரி கேட்க வெட்கமாயிருக்கு...என் கதையைக்

கேட்டா யாரும் நம்பமாட்டாங்க... 'போடா அளக்கிறே' என்பாங்க!''

ராமசாமி சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார். எதிரே அந்தப் பையன் கைகளைப் பிசைந்து கொண்டே அவர் வாயிலிருந்து என்ன வார்த்தை வருமோ என்று எதிர்பார்த்துக்கொண்டே நின்றான். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. முன்பின் தெரியாத ஆசாமி வந்து திடுதிப்பென்று பணம் கேட்டால் எப்படி நம்புவது? பட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவர்போல் ''அது சரி தம்பி...கடைத் தெருவிலே பச்சை சில்க் கைக்குட்டை ஒண்ணு வாங்கினேன்னு சொன்னியே—அது எங்கே? காட்டுபார்க்கலாம்!'' என்று அவனைப் பார்த்துக் கேட்டார். சட்டைப் பையினுள்ளும் பேண்ட் பையினுள்ளும் கையை விட்டுத் துழாவினான் பையன். ஆனால் கைக்குட்டை இருந்தால்தானே! பையனின் முகம் வெளிறிவிட்டது. ''பேண்ட் பாக்கெட்டில் தான் சார் வைத்திருந்தேன்...இப்ப பார்த்தால் காணோம்! எங்கோ தொலைந்து போயிட்டுது போலிருக்கு சார்!'' தடுமாறிக்கொண்டே பதில்சொன்னான் அவன்.

ராமசாமிக்கு விஷயம் ஒருமாதிரி விளங்கியது. இது ஒரு மோசடி கேஸ் என்று நன்றாகப் புரிந்துவிட்டது அவருக்கு. ஆகவே குரலைக் கடுமையாக வைத்துக்கொண்டே ''ஏன் தம்பி......முன்பு பர்ஸ் போயிட்டுதுன்னு சொன்னே. இப்ப என்னடான்னா வாங்கின கைக்குட்டையும் போயிட்டுதுங்கிறே. இதெல்லாம் என்ன வேஷம்? கேழ்வரகிலே நெய் ஒழுகுதுன்னா கேட்கிறவன் ச..வ..மட்டான்! போடா...போ...பட்டணத்திலே இந்த மாதிரி ஆளுங்க ஏராளம்!'' என்று அவர் கடுமையாகக் கூறவே மறுபேச்சுப் பேசாமல் அந்த இடத்தைவிட்டு தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டே போய்விட்டான் அந்த வாலிபன்.

அவன் போனபிறகுதான் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார் ராமசாமி. ''சே, என்ன அயோக்கியத்தனம், வயசுப் பையன், என்னமா கதை அளக்கிறான்! காலம் கெட்டுப் போச்சு! ஏமாந்தவன் தலையிலே மிளகாய் அறைப்பதே பட்டணத்திலே தொழிலாயுட்டுது!' என்று தனக்குள்ளே சலித்துக் கொண்டார் அவர்.

அதற்குமேல் அங்கே உட்காரவே அவருக்குப் பிடிக்கவில்லை. பெஞ்சைவிட்டு எழுந்தார். அது என்ன பெஞ்சுக்கடியில் மினுமினுவென்று மின்னுகிறது? ஆசையும் ஆத்திரமும் பொங்க கீழே தரையில் கிடந்த அந்தப் பொருளைக் கையிலெடுத்தார் அவர். அது ஒரு பச்சை நிற சில்க் கைக்குட்டை! பாதரசக் குழல் விளக்கின் ஒளியிலே பளபளவென்று மின்னியது! பெஞ்சுக்கடியில் பசும்புல் மறைத்துக் கொள்ளவே அந்தப் பையனின் கண்களில் படவில்லை போலும்! அவனுடைய பேண்ட் பாக்கெட்டிலிருந்து நழுவி கீழே விழுந்திருக்கலாம்!...ராமசாமியின் மனம் துடித்தது.

''சே, அந்த யோக்கியமான வாலிபனைப் பற்றி எவ்வளவு அவதூறாக நினைச்சுட்டேன். அவன் அவமானத்தா.. வெட்கித் தலைகுனிந்து கொண்டே போறானே! அவசரப்பட்டு நான்தான் தவறான முடிவுக்கு வந்துவிட்டேன். முன்பே நொந்து போயிருந்த அவனை நான் வேறு கண்டபடி பேசி அனுப்பி விட்டேனே!'' அவர் நினைப்பு எங்கெங்கோ ஓடி..சு. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவ..போல் .. பட்டென்று அந்த இடத்தைவிட்டுக் கிளம்பினார் அவர். அவருக்கே இயற்கையாக உள்ள இரக்க மனப்பான்மை அவரை அவ..த் தேடிக்கொண்டு செல்லச் செய்தது. சமீபத்திலேயே கடைத்தெருவில் அவனைக் கண்டு பிடித்துவிட்டார் அவர். ஒரு கடையில்

வாழைப்பழம் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான் அவன்.

'தம்பி' என்று அவன் முதுகில் தட்டிக் கூப்பிட்டார் ராமசாமி. அவன் திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தான். "இதோ உன்னுடைய கைக்குட்டை! பூங்காவில் பெஞ்சுக் கடியில் கிடந்தது. நீ யோக்கியமான பிள்ளை. உன்னை நான் என்ன என்னவோ மனவருத்தம் வரும்படியாகப் பேசிவிட்டேன், போகட்டும். என்னை மன்னித்து விடு. இந்தா பத்து ரூபாய்; ஊருக்குப் பத்திரமாய்ப் போய்ச்சேரு! எப்ப உனக்குச் சௌகரியமோ அப்ப இந்தப் பணத்தைத் திருப்பி அனுப்பலாம். அவசரம் ஒன்றுமில்லை! இதோ என் முகவரி!" என்று கூறிக்கொண்டே பையிலிருந்து பத்து ரூபாய் நோட்டையும், தன்னுடைய முகவரி குறித்த அட்டையையும் கைக்குட்டையையும் எடுத்து அவனிடம் நீட்டினார் அவர்!

சற்று நேரம் அப்படியே திகைத்துப்போய் நின்றான் அந்த வாலிபன். பின்பு "சார், உங்க கையிலேயே கிடைச்சுட்டுதா? பொய்யனு யிட்டேனுன்னு துடிச்சுட்டேன் சார்! எனக்கு வேண்டாம் ரூபாய்; நான் எப்படியாவது போரேன். அதுவரையிலும் உண்மையாவது தெரிஞ்சுதே, அதுவே போதும். உங்களுக்கு எதுக்கு வீண் சிரமம்" படபடவென்று பேசினான் அவன்.

'சே, அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை தம்பி! ஒரு அவசரத்திற்கில்லாமல் அப்புறம் எதுக்குப் பணம்? உன்னைப் பூரணமா நம்புறேன், மறுக்காதேப்பா!"

அவர் அவ்வளவு தூரம் வற்புறுத்திச் சொல்லவே அவன் அவர் கொடுத்ததை வாங்கிக் கொண்டான். "உங்களை என்றுமே மறக்க மாட்டேன். முன்பின் தெரியாத என்னை நம்பி இந்தக் கஷ்ட காலத்தில் பத்து ரூபாயைத் தூக்கிக் கொடுத்திருக்கிறீர்கள்; உண்மையிலே நீங்க ரொம்ப நல்லவர் சார். ஊருக்குப் போனதும் பணத்தை உடனே அனுப்பிடறேன், ரொம்ப நன்றி!" கம்மிய குரலில் கூறிக் கொண்டே கைகூப்பி அவரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான் அவன்.

அவன் போவதைப் பார்த்துக் கொண்டே நின்றார் ராமசாமி. நீலச்சட்டை அவர் பார்வையிலிருந்து மெள்ள மெள்ள மறைந்தது. அவர் உள்ளத்திலே ஒரு அசாதாரணமான அமைதி நிலவியது. "பாவம், நல்ல பையன்!" நினைவு அலைகள் நெஞ்சிலே அசைபோடக் கைக்கடிகாரத்தைப் பார்த்தார் ராமசாமி. மணி ஏழுதான் ஆகியிருந்தது. அப்பொழுதே திரும்பி என்ன செய்வது? வீட்டில்தான் யார் இருக்கிறார்கள்? மறுபடியும் பூங்காவுக்கே திரும்பி நடையைக் கட்டினார் அவர். பூங்காவில் அவர் சற்றுமுன் உட்கார்ந்திருந்த பெஞ்சுக்கருகாமையில் வந்ததும் அவருக்குத் தூக்கி வாரிப்போட்டது! அன்று அந்த வாலிபனுக்கு முன்னால் அவ்விடத்தில் வந்து உட்கார்ந்துவிட்டுப் போன அந்த கிழிந்த கோட்டு ஆசாமி, அங்கே பெஞ்சைச் சுற்றி சுற்றி எதையோ தேடிக்கொண்டிருந்தார்!

ராமசாமியினால் பொறுக்க முடியவில்லை. "என்ன சார் தேடுகிறீர்கள்?" என்று கேட்டார் அந்தக் கோட்டுக்காரரிடம்.

"ஒண்ணுமில்லை சார்! என்னுடைய மகள் ஒரு கைக்குட்டை வாங்கிவரச் சொல்லியிருந்தாள். அவளுக்குப் பிடித்த பச்சை நிறத்திலேயே ஒரு சில்க் கைக்குட்டை வாங்கிப் பையில் வைத்திருந்தேன். இப்ப பார்த்தால் காணோம்! இங்கேதான் விழுந்துட்டாப்பலே இருக்கு! ஆனால் இங்கேகூட காணோமே சார்!" என்று அந்த கோட்டுக்காரரிடமிருந்து பதில் வந்தது.

[ஆங்கிலக்கதை ஒன்றின் தழுவல்]

# தமிழ் சினிமா

**தமிழ்த் திரைப்படங்கள் பற்றிய சில கருத்துக்களை இங்கே கட்டுரையாளர் தெரிவிக்கிறார். அதே துறையில் பணிபுரிபவர் அவர். இந்தக் கருத்துக்கள் அவருடையனவே!**

பிரச்சாரம் செய்ய நம்மிடமுள்ள சாதனங்களிலேயே மிகச் சக்தி வாய்ந்தது திரைப் படம்.

— லெனின்

திரைப்படம் ஒளியின் இசை. (Cinema is the Music of Light)

— கிரேன்ஸ்
(ஒரு பிரெஞ்சு டைரக்டர்).

கருத்துக்களை வெளியிட திரைப் படம் ஒரு பெரிய சாதனம். ஆகவே நான் திரைப்படத்தைத் தொழிலாக ஏற்றேன்.

— செசில். பி. டிமில்லி.

இத்தகைய ஒரு கலையை சிலர் மேடைகளில் ஏறிக்கொண்டு, "அழித்து விடுவேன்; ஒழித்துக் கட்டுவேன்" எனக் கூச்சல் போடுவது, நமக்கு வியப்பைத் தருவதோடு மட்டுமல்லாமல், அவர்களைப்பற்றிய நமது மதிப்பீடும் குறைய உதவுகிறது; அவர்களிடம் உள்ள குறைபாடும் விளங்குகிறது. இப்போது திரைப்படத்தைத் தாக்கிப் பேசுவது ஒரு நாகரிகமாகி விட்டது. ஆனால் திரைப் படத் துறையில் உள்ள கலை நுணுக்கத்தையும், கஷ்டத்தையும் உணர்ந்தோர் இப்படிக் கூறமாட்டார்கள். நம் படங்கள் கண்ணியமான முறையில் தயாரிக்கப்படவில்லை என்பது ஓரளவு உண்மையே. அதற்காக அத் தொழிலைக் குறை கூறுவது புத்திசாலித்தனமாகாது. கை, அடிக்கவும் உதவுகிறது; அணைக்கவும் உதவுகிறது. செயல்களிலிருந்து மனிதனை அளக்க வேண்டுமே தவிர, கையின் பயனை அளக்க முற்படுவோர் வியப்புக்குரியவர்கள்!

திரையுலகமே ஒரு கலைக்கூடம். இங்கே இல்லாத கலைகளேஇல்லை! உலகத்தின் கலைகளெல்லாம் ஒன்று கூடுமிடம் மட்டுமல்ல—ஒன்றை ஒன்று தழுவி நிற்பதும் இந்தத் திரையுலகத்தில்தான். இங்கேதான் காவியமும் ஓவியமும், இயலும் இசையும், நடிப்பும் நாட்டியமும் ஒளியும் ஒலியும் கூட்டாக உள்ளன. இங்கேதான் விஞ்ஞானமும் கலையும் ஒன்றுடன் ஒன்று கலக்கின்றன. (The amalgamation of Arts and Science) இந்தத் தனிச் சிறப்பு வேறெந்தத் துறைக்குமில்லை. விஞ்ஞானமும் கலையும் கணவனும் மனைவியுமாகி சிறந்த "கலைப்படைப்புகளை" உலகுக்கு அளிக்கின்றன.

இவ்வளவு சிறப்புடைய இத் துறை தென்னாட்டில் சிறந்த முறையில் வளர்ச்சி பெறவில்லை. இதற்கு நூறு காரணங்கள் கூறலாம். ஒரே வரியில் இப்படியும் கூறலாம்: "இலக்கிய உணர்ச்சி உடையோர் தயாரிப்பாளராகவோ, உருவாக்குவோராகவோ (டைரக்டர், இங்கு இதுவரை தோன்றவே இல்லை! இலக்கியப் பற்றும் கலையுணர்ச்சி

**எழுதியவர்:**

**'வீணு'**

யும் உடைய ஒரே ஒரு டைரக்டர் நம்மிடையே இருந்திருந்தால்கூட நமக்கும் வருடத்துக்கு ஒரு 'சைக்கிள் திருடன்' (Bicycle Thief-இத்தாலிப்படம்), 'போரும் சமாதானமும்' (War and Peace-ஆங்கிலம்), "பதர்பாஞ்சொலி," "அபரஜித்தா" (வங்காளம்), "ஜாக்தேராகோ" (இந்தி) கிடைத்திருக்கும்; தென்னாட்டிலும் கலைக்கூடங்கள் இருக்கின்றன என்பது வேற்று நாட்டாருக்கு விளங்கியிருக்கும்! இங்கே "பங்கிம்," "சரத்" சந்திரர்கள் தோன்றுமலில்லை! ஆனல், ஒரு தேவகி போசோ, சத்யஜித்ராயோ, பிமல்ராயோ இங்கு-குறிப்பாக தமிழகத்தில்—பிறந்திருப்பதாக இதுவரை தெரியவில்லை!

இலக்கியத்துக்கும் திரைப்படத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. அதனல்தான் இலக்கிய வளர்ச்சியடைந்த வங்கத்திலே சிறந்த திரைப்படங்கள் வெளி வருகின்றன. இதுவரை வெளி நாடுகள் சென்று பரிசும் பாராட்டும் பெற்றுத் திரும்பிய இந்திய சலனப்படங்கள் அனைத்தும் வங்க மொழிப் படங்களே!

டைரக்டருக்கு ஏன் "இலக்கிய உணர்ச்சி" தேவை என்பது கவனிக்கத்தக்கது. டைரக்டருக்கு ஒரு எழுத்தாளனுக்குள்ள திறமையும், கவிஞனுக்குள்ள கற்பனையும், உணர்ச்சியும் தேவை. எழுத்தாளனும் கவிஞனும் தங்களின் உணர்வுகளை பேனவைக் கருவியாகக் கொண்டு காகிதத்தில் எழுதுகிருர்கள். டைரக்டர் அதே உணர்வுகளை ஒளிப்பதிவு இயந்திரத்தைக் (Camera) கருவியாகக் கொண்டு திரையிலே வெளியிடுகிருர். இருவரும் உபயோகிக்கும் சாதனங்கள் வேறே தவிர, உணர்வுகள் ஒன்றேதான்! எழுத்தாளர்களுக்கும் புத்தகம் வெளியிடுவோர்களுக்கும் (Publishers) உள்ள தொடர்புதான், டைரக்டர்களுக்கும் படத் தயாரிப்பாளர்களுக்கும் (Film Producers) உள்ள தொடர்பு. புத்தகம் வெளியிடுவோரும் தயாரிப்பாளரும் வியாபாரிகள். எழுத்தாளர்களும் டைரக்டர்களும் கலைஞர்கள். உண்மையான எழுத்தாளர்கள் புத்தகம் வெளியிடுவோரின் கருத்துக்கிணங்க எதையும் எழுதுவதில்லை! ஆனல் நம் டைரக்டர்கள் பணத்துக்காக எதையும் செய்யத் துணியாமலிருப்பதில்லை!

அறிஞர் அண்ணு போன்ருேர் புதிதாக ஏதாவது எழுதுகிருர்கள் என்ருல், புத்தகம் வெளியிடுவோர் அவர்களை நாடிச் செல்லுகின்றனர், அவர்களின் நூல்களை வெளியிட்டால் பணம் வரும் என்ற கருத்துடன். இது உண்மையே! பணம் எப்படி வருகிறது? அவர்களின் நூல்கள் சிறந்த கருத்துக்களின் உறைவிடங்கள் என்பது மக்களுக்குத் தெரியும். ஆகவே அவற்றைப் பலரும் வாங்கிப் படிக்கிருர்கள்: விற்பனை அதிகரிக்கிறது; பதிப்பாளருக்குப் பணமும் வருகிறது. அதே போன்று ஒரு டைரக்டருக்கு திறமையும் உணர்வும் இருந்தால் மக்கள் மதிப்பார்கள்; தயாரிப்பாளர்களும் நாடி வருவார்கள்; திறமையைக் காட்ட வாய்ப்பும் கிட்டும். அப்படிப்பட்ட ஆற்றலுடையோர் தோன்ருதற்கு காரணமென்ன? இலக்கியச் சுவையும் கற்பனைத் திறனும் இல்லாததே என்பதுதானே!

நம் டைரக்டர்கள் தயாரிப்பாளர்களைக் குறைகூறுகிருர்கள். தங்களின் திறமைகளை வெளியிட அவர்கள் வாய்ப்பளிப்பதில்லை என்கிருர்கள். இது தவருன கருத்து! தயாரிப்பாளர்களை ஆட்டிவைக்கும் எத்தனையோ 'ஜாம்பவான்'களான டைரக்டர்கள் இத்துறையில் உள்ளனர். அவர்கள்தான் எதைச் சாதித்தார்கள்?

இத்துறையின் இழிநிலைக்கு மற்றோர் காரணம், இந்த "திரைக் கதையாசிரியர்கள்" (Script writers) தோன்றாததேயாகும். இதுவரை வெளிவந்த பெரும்பாலான படங்கள் "திரைக்கு" என்று எழுதியவைகளேயாகும். எத்தனையோ தமிழ் நாவல்கள் இருந்தும் அவைகள் திரைப்படங்களாக வராததற்குக் காரணமும் இந்த திரைக்கதையாசிரியர்கள் இல்லாததுதான். திரைப்படத்துக்கு என்று தனியாக கதை எழுதும் பழக்கம் தென்னாட்டில்தான் அதிகம் உளளது. திரைப்படத்துக்கு கதையென்றால் உடனே ஒரு கதாநாயகன், அவனுக்கு ஒரு காதலி, ஒரு வில்லன், ஒரு வில்லி ஆகியோரே நம்மவர்களின் கண்களில் தோன்றுகிறார்கள். அல்லது மாமியாரின் கொடுமை,மருமகளின் பொறுமை! இதையும் மீறினால் பணக்காரனின் மூர்க்கத்தனம்,ஏழையின் அடிமைத்தனம், கடைசியில் ஏழையின் மகளும் பணக்காரனின் மகனும் மணமுடித்துக்கொள்வது! இவைகளைத் தவிர இதுவரை ஏதாவது புதுமைக் கருத்துக்கள் நிறைந்த படங்கள் வந்துள்ளனவா? குறிப்பிட்ட ஒன்றிரண்டு படங்களை விட்டுவிடுங்கள். நம் படங்களில் வில்லனைச் சித்தரிப்பது போன்ற கொடுமைவேறு எந்த நாட்டிலும் இல்லை. கதையென்றால் வில்லன்கள் அவசியந்தானா? சிறந்த எழுத்தாளர்களின் கதைகளில் "வில்லனை"ப் பார்க்க முடிவதில்லை! பின் ஏன் திரைப்படங்களுக்கு மட்டும் வில்லன்கள் தேவை? வில்லனே இல்லாத "தேவதாஸ்" மக்களின் ஆதரவைப் பெறவில்லையா? ஒரு கதையின் வளர்ச்சிக்கு, பிடிப்புக்கு (Grip) மாறுபட்ட குணமுடைய கதாபாத்திரங்கள் அவசியம். அந்த மாறுபட்ட பாத்திரம் ஏன் நம் படங்களில் வரும் வில்லனைப்போல் இருக்கவேண்டும்? நம்மைச் சுற்றி அம்மாதிரி மக்களா இருக்கிறார்கள்? தேவதாஸும், பார்வதியும் காதலர்கள். ஆனால் இருவரிடமும் குறைகளிருந்தன. அதுதான் அவர்களிடமிருந்த முன் கோபம்! அத்துடன் "கௌரவம்" என்ற ஒரு திரையும் இருவரிடையே இருந்தது. இதைக் கிழித்தெரிய அவர்களுக்குச் சக்தியில்லை. இருவரின் வாழ்வும் சோகத்தில் முடிந்தது. அதோடு இன்னொரு விசேஷம்,இக்கதையில் ஒரு விலை மாதுவுக்கும் உள்ளமும் உணர்ச்சியும் உண்டு என்பது சிறந்த முறையில் சித்தரிக்கப்பட்டுள்ளது. தேவதாஸும், பார்வதியும் சந்திரமுகியும் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்தார்கள். ஆகவே படமும் வெற்றியடைந்தது! வில்லனே இல்லாமல் ஒரு காதல் நவீனத்தைத் திரைப்படமாக்கி வெற்றி காணமுடியும் என்பதற்கு இப்படம் ஒரு உதாரணம்.

திரைப்படத்துக்கு ஒரு கதாநாயகன், கதாநாயகி, வில்லன் ஆகியோர் இருந்தே ஆகவேண்டும் என்பதில்லை! எந்த நிகழ்ச்சியையும் திரைப்படமாக்க முடியும். மாலை 5 மணிக்கு ஒருவன் தியாகராய நகரிலிருந்து 13ம் நம்பர் பஸ் ஏறி கடற்கரை சென்று, பின் இரவு 8 மணிக்கு அதே பஸ்ஸில் வீடு திரும்புகிறான் என்று வைத்துக் கொள்வோம். இந்த ஒரே நிகழ்ச்சியை வைத்து, கற்பனையும் கலைத்திறனும் கொண்டு ஒரு திரைப் படத்தை உருவாக்க முடியும்; மக்களின் ஆதரவையும் பெற முடியும். அப்படி வந்த "ஜாக்தே ரகோ" என்ற படத்தை நாம் மறக்கமுடியுமா? மக்களின் ஆதரவை மட்டுமின்றி வெளி நாட்டாரின் பாராட்டுதலையும் பரிசையும் பெற்றிருக்கிற அதில் ஒரு நாட்டுப்புறத்தான் பட்டணம் வந்து, ஒரு பெரிய மாளிகையில் இரவு நேரத்தில் நுழைகிறான். அங்கே ஒரு சிறு உலகத்தையே காண்கிறான். விடியற்காலை வெளியேறுகிறான். இதைத் தவிர அந்தப்



படத்தில் என்ன இருந்தது? ஆனாலும் இரண்டுமணி நேரம் நாம் ரசித்துப் பார்த்தோம்!

'உயர்ந்த கருத்துக்களும், தத்துவங்களும் நிறைந்த படங்கள் தமிழ் நாட்டில் விலை போகாது' என்ற கருத்து திரையுலகில் நிலவுகிறது. "ஜாக்தேரகோ" போன்ற படங்களை இங்கு யாரும் விரும்பமாட்டார்கள் என்றுகூட வாதிப்பவர்கள் இங்கு உண்டு. அப்படி வாதிப்போரிடம் நாம் இப்படிக் கேட்போம்: "இதுவரை உயர்ந்த தத்துவங்களும், நோக்கங்களும் கொண்ட ஒரு தமிழ்ப்படமாவது தயாரிக்கப்பட்டுள்ளதா? அப்படி வந்த படம் தோல்வியடைந்துள்ளதா?" இக்கேள்விகளுக்கு நம் தயாரிப்பாளர்கள் விடை கூறமுடியுமா? உயர்ந்த படமே தயாரிக்கப்படாதபொழுது, தோல்வியுறும் என்று கூற இவர்கள் யார்? உயர்ந்த படங்களைத் தயாரிக்க வேண்டும் என்ற உணர்ச்சியே இங்கு இன்னும் யாருக்கும் தோன்றவில்லையே! "அன்னை இந்தியா" (Mother India) என்ற இந்திப் படம் 25 வாரங்களுக்கு மேல் சென்னையில் ஓடியது. இதே கதையை அடிப்படையாகக் கொண்ட ஒரு தமிழ்ப் படம் ஆறு ஆண்டுகளுக்குமுன் வந்தது. மூன்று நாட்களே ஓடியது! இதற்குப் படம் பார்க்கும் மக்களா பொறுப்பாளி? மூன்று மணி நேரம் மக்களைக் கவரும் சக்தி அந்தத் தமிழ்ப் படத்துக்கு இல்லை. அந்தக் குறை அப்படத்தில் சம்பந்தப்பட்டோரையே சாரும்.

ஷேக்பியரின் 'மேக்பெத்', 'ஹாம்லெட்', சார்லஸ் டிக்கென்சின் 'சிட்னிகாட்டன்' (இரு நகரக் கதையில் ஒரு பாத்திரம்), தாகூரின் 'காபூலிவாலா', இளங்கோவின் 'மாதவி' இவர்களனைவரும் வெறும் உருவங்களே; கற்பனைகளே. ஆனால் இவர்கள் உண்மையிலேயே உலகத்தில் பிறந்து, வாழ்ந்து மடிந்தவர்கள் என்ற உணர்வு நமக்குத் தோன்றுகிறது, இவர்களைப்பற்றிப் படிக்கும்பொழுது. அந்த அளவு இவர்களுக்கு இந்த எழுத்தாளர்கள் உயிரளித்திருக்கிறார்கள். இம் மாதிரியான குணச் சித்திரப் பாத்திரங்களை திரைப்படங்களிலும் உருவாக்கமுடியும். 'ஜாக்தேரகோ'வில் வரும் நாட்டுப்புறத்தானும் (ராஜ்கபூர்), 'அன்னை இந்தியா'வில் வரும் அன்னையும் (நர்கீஸ்) திரையுலகில் பிறந்த கற்பனைச் சித்திரங்களே. இந்த வகையில் நம் திரையுலகிலும் ஓரிரு "குணச் சித்திர பாத்திரங்கள்" பிறந்துள்ளார்கள் என எண்ணும்பொழுது நமக்கு மகிழ்ச்சி தோன்றத்தான் செய்கிறது.

அறிஞர் அண்ணா அவர்களின் கருணாகரத் தேவரும் (ஓர் இரவு), கண்ணதாசன் அவர்களின் வெள்ளையம்மாளும் (மதுரைவீரன்), சுலோசனாவும் (மங்கையர் திலகம்) நமக்கு திரைமூலம் கிடைத்த குணச்சித்திர பாத்திரங்களாவர். கலையரசி வெள்ளையம்மாளும், 'மங்கையர் திலகம்' சுலோசனாவும் நம்முடன் பிறந்து வாழ்ந்தவர்கள் என்ற உணர்வை உண்டாக்கிவிட்டார்கள் நம் உள்ளங்களில். இவர்களின் உள்ளத்துடிப்புகள் நம் உள்ளங்களைத் துடிக்கச் செய்தன.

"உண்மைச் சம்பவங்களுக்கும், அதே சம்பவங்களைத் திரையில் காண்பதற்கும் இடையே ஒரு குறிப்பிட்ட வேறுபாடு உள்ளது. இந்த வேறுபாடே திரைப் படத்தை ஒரு "கலை"யாக்குகிறது" என்கிறார் ருஷ்ய மேதை டைரக்டர் புடோவ்கின். எழுத்தாளனின் கற்பனை, டைரக்டரின் திறமை, நடிப்போரின்

உணர்ச்சி ஆகிய மூன்றும் திரை இலக்கணப்படி ஒன்று சேருமிடத்தில் "திரைக்கலை" உருவாகிறது; சமயங்களில் காவியமே பிறக்கிறது!

'மதுரைவீர'னில் வெள்ளையம்மாள் வீரனுக்கு பச்சை குத்தும் காட்சியை, யாரும் அவ்வளவு சாதாரணமாக மறந்துவிட முடியாது. பச்சை குத்தி முடிந்துவிட்டது. வெள்ளையம்மாள் பேசுகிறாள் வீரனின் தோளில் கையை வைத்துக்கொண்டு: "திடீர் திடீரென்று மனத்துக்கு சந்தோஷம் வருகிறது. அந்த நேரங்களில் இந்த உலகமே மறந்து போகிறது. வாழ்க்கை முழுவதும் இப்படியே இருக்கக்கூடாதா என்று ஒரு எண்ணம் தோன்றுகிறது. இது எனக்குமட்டுந்தானா, இல்லை எல்லாப் பெண்களுக்குமே இப்படித்தானா?"

"என்ன சொல்லுகிறீர்கள்?" என்கிறான் வீரன்.

"ஆம்; நான் என்ன சொல்லுகிறேன் என்று எனக்குப் புரியவில்லை. எதையோ நினைக்கிறேன்; எதையோ சொல்லுகிறேன்" என்கிறாள் வெள்ளையம்மாள்.

இந்த இடத்தில் வெள்ளையம்மாள் மயங்கிய நிலையில் கனவுலகில் விளங்கும் தேவதைபோல் காட்சியளிக்கிறாள். உள்ளத்திலே ஏக்கமும் தவிப்பும் விளங்குகிறது. கரகரத்த தொண்டையிலிருந்து ஒலி கேட்கிறது. இங்கு சொற்கள் ஒலிகளாக வெளி வரவில்லை. ஆனால் சொற்களும் ஒலிகளும் ஒன்று கலந்துவிட்டன. காவியம் வடிவம் பெற்றுவிட்டது! வெள்ளையம்மாள் ஒரு கலையரசி. அவளின் காதலுணர்வுகளை எவ்வளவு கலைத்திறனுடன் வெளியிடுகிறாள் பாருங்கள்! அவள் பேசும்பொழுது அந்த முகத்திலே மயக்கமும், கண்களிலே ஒளியும் குரலிலே ஏக்கமும் தவிப்பும் தோன்றின. உடலுணர்ச்சியால் அவள் பேசியிருந்தால் முகத்தில் வெறியுணர்ச்சியே விளங்கியிருக்கும். ஆனால் இங்கு வெள்ளையம்மாளின் காதல் இயற்கையின் சக்திக்கும் அப்பாற்பட்டது; மேலானது. நாம் படத்திலே பார்த்



தது வெறும் காதல் காட்சியல்ல; ஒரு காவியக்காட்சி! இந்த இடத்திலே எழுத்தாளனின் உள்ளமும், நடிகையின் உணர்ச்சியும் ஒன்றுடன் ஒன்று பின்னிவிட்டன!

ஏட்டிலே காவியம் எழுத, சொல்லின் உதவி தேவை. சொல், அதன் ஒலி இவையிரண்டின் உதவியில்லாமலும் திரைப் படத்திலே காவியம் வடிக்கமுடியும். இதுவும் திரைக் கலைக்குள்ள தனிச் சிறப்புகளில் ஒன்ருகும்.

'மங்கையர் திலக'த்தில் தன் அண்ணனுக்குப் பிடித்தவளை தனக்கும் பிடிக்கிறதா என வாசு பெண் பார்க்கப் போகும் நிகழ்ச்சியை எடுத்துக்கொள்ளுங்கள். வாசு தரையில் உட்கார்ந்துள்ளான். சுலோசனுவின் தந்தைஅவனருகே அமர்ந்துள்ளார். சுலோசனு வந்து, வணக்கம் செலுத்தி, வாசுமுன் உட்காருகிருள். வாசு அவளையே பார்க்கிருன். அவன் வாய் மகிழ்ச்சியில் பிளக்கிறது. அவனின் பொக்கைப் பல்லும் தெரிகிறது. சுலோசனு இலேசாகத் தலையைத் தூக்கி நாணத்துடன் அவனைப் பார்க்கிருள். 'தனக்கு அவளைப் பிடித்திருக்கிறது' என்ற பாவனையில், வாசு தலையை ஆட்டுகிருன். இந்த இடத்தில் சுலோசனுவின் முக உணர்ச்சிகளைக் கவனிக்கவேண்டும். அதிலே நாணம், நளினம், பெண்மை, கனிவு, பெருமை இன்னும் எத்தனையோ உணர்ச்சிகள் இருந்தன! காவியமே பிறந்தது! சுலோசனு ஒரு குமரிப் பெண். அவளைப் பார்த்து அவள் மகனையொத்த ஒரு சிறுவன், "நீ அழகி; உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது" எனப் பேசாமல் பேசும்பொழுது, அந்தக் கன்னியின் உணர்வுகள் எப்படியிருந்திருக்கும்? ஒரு வாலிபன் அவளின் அழகை ரசித்துக் கூறினுல் அது சாதாரண, வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சியே! ஆனுல் "அழகு" "காதல்" இவைகளின் பொருளையே உணரமுடியாத ஒரு சிறுவன், ரசித்து, அதையும் பேசாமல் உணர்ச்சிகளால் (Expression) வெளிப்படுத்துவதில்தான் காவிய வடிவு உள்ளது!

இதுபோன்று காவிய வடிவில் ஒரு முழுப்படம் தமிழகத்தில் வராத குறை டைரக்டரையே சாரும். இத்துறையின் பல்வேறு கலைப் பகுதிகளிலுள்ள கலைஞர்களின் திறமைகளையும், கற்பனைகளையும் ஒன்று சேர்த்து உருவாக்கும் பொறுப்பு டைரக்டருடையது. நம் டைரக்டர்களுக்கு கேமிராவை பல கோணங்களில் வைத்துப் படமெடுக்கத் தெரிகிறதேதவிர, எழுத்தாளர்களின் உள்ளங்களைப் புரிந்துகொள்ளத் தெரியவில்லை! அப்படி புரிந்துகொள்ள கலையுணர்ச்சியும் இலக்கியப் பற்றும் தேவை.

எல்லாவற்றிற்கும் மேலாக, இத்துறையிலுள்ளோர் மக்களை புத்திசாலிகள், சிறந்த கருத்துக்களை விரும்புபவர்கள் என எண்ண வேண்டும். இத்துறையிலுள்ளோரும்மனிதர்களே! இங்குள்ளோர்க்கு உயர்ந்த கருத்துக்கள் பிடித்திருந்தால் இத்துறையில் இல்லாதோர்க்கும் பிடிக்கும். இந்த எண்ணத்தில் படமெடுக்க முயல வேண்டும்.

கலைக்காகமட்டும் படமெடுக்க வேண்டும் என்பது நோக்கமல்ல. வருமானத்தையும் கவனிப்பது அவசியமே. வெறும் கலை சோறு போடாது.பணமில்லாதவன் பிணம் எனக் கூறியவன் சாதாரண மனிதனுக இருந்திருக்கமுடியாது. ஆனுல் பணம் சேர்க்கும் ஒரு நோக்கத்துக்காக மட்டும் மனிதன் பிறக்கவில்லை. வேறு பல சீரிய காரியங்களுக்காகவும் மனிதன் பிறந்து வாழ்கிருன். அதுபோல் இக்கலைக்கூடத்திலுள்ளோரும் கலைக்காகவும் எதையாவது ஓரளவு செய்ய வேண்டும்! செய்வார்களா? ★

# சூத்திரன் மகன்

ந. அலி

செங்கிற வண்ணத்தை அடிவானத்தில் தூவிவிட்டு, கதிரவன் மறைந்துகொண்டிருந்தான். மெதுவாக இருள் படர்ந்து கொண்டிருந்தது. வலது தோளில் இறந்த கலைமானையும், இடது கரத்தில் கோடலியையும் சுமந்தவண்ணம் அவன் நடந்து கொண்டிருந்தான். வேகம் அதிகரித்தது. நெடுநேரம் நடந்து வந்து சிறிய, அழகான அந்தக் குடிசைக்கு முன்னால் மானை இறக்கினான்.

சத்தத்தைக் கேட்டு குடிசையின் உள்ளேயிருந்து தாயும் தந்தையும் விளக்கோடு வெளியே வந்தனர். "இவ்வளவு நேரம் எங்கேப்பா போயிருந்தாய்?" அன்பின் ஊற்று தாயின் குரல் மூலம் வெடித்துக் கிளம்பியது. அருகில் கிடந்த மானைக் கண்டதும் வியப்பின் சிகரத்தையடைந்தாள் அவள். "ஏது இவ்வளவு பெரிய மான்?" என்று கேட்டபடி மானைப் புரட்டிப் பார்த்தாள்.

அந்த நேரத்தில் மான்போல துள்ளியபடி அருகிலிருந்த குடிசையிலிருந்து ஒரு மங்கை வந்தாள். தங்கநிகர் மேனியாள்-யுத்தி இளைஞனைத் தொட்டுக் கொண்டே கேட்டாள்: "ஏகலைவா! இவ்வளவு பெரிய மான் உனக்கு எங்கிருந்து கிடைத்தது?"

"அருவியில் தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கும்போது இரண்டு மான்கள் மரத்தின் கீழ் விளையாடிக் கொண்டிருந்தன. கோடலியை வீசி எறிந்தேன். இந்த மானின் வயிற்றில் பாய்ந்ததும் இறந்துவிட்டது." கதையைக் கூறி முடித்தான் ஏகலைவன்.

கிராமத்தில் இந்தச் செய்தி காட்டுத் தீ போல் பரவியது. மானைப் பார்க்க எல்லோரும் கூடிவிட்டனர்.

"நாளை நல்ல விருந்துதான்," ஏகலைவன் தந்தை இரணியவதன் கூறினான்.

ஏகலைவன் சிரித்தான். "அப்பா நாளைவரை யுத்தி பொறுப்பாளா? இன்று இரவே இவள் மான் கறியைப் பற்றிக் கனவு காணமாட்டாளா?"

மாந்தளிர் போன்ற கன்னங்கள் நாணத்தால் கோவைப் பழம்போல் சிவந்துவிட்டன. தலையைக் கவிழ்ந்து கொண்டு அங்கிருந்து ஓடிவிட்டாள்.

ஊர்மக்களும் தங்கள் தங்கள் வீடு நோக்கிச் செல்ல ஆரம்பித்தனர்.

இரவு உணவுக்குப் பிறகு ஏகலைவனும் பெற்றோரும் பேசிக்கொண்டிருந்தனர். "குறி வைப்பதற்குக் கோடாலி நன்றாக இல்லை. வில்லம்புதான் இவ்வேலைக்கு ஏற்றது!" ஏகலைவன் அமைதியைக் கலைத்தவண்ணம் உரையாடலை ஆரம்பித்தான்.

"வில்லம்பா?" இரணியவதனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. "அதை எப்படி நீ கற்றுக்கொள்வாய்?"

ஏகலைவன் உள்ளத்தில் ஏதோ ஒரு ஆசை அலைமோதிக்கொண்டிருந்தது. அவன் சொன்னான்: நகரத்தில் அரசகுமாரர்களுக்கு ஒரு குருவில் வித்தை கற்றுக்கொடுக்கிறார். அவரிடம்..."

தந்தை அஞ்சினார். தாயார் வியப்படைந்தாள். "என்ன?"

"ஆமம்மா! நான் அவரிடம் கற்றுக் கொள்ளமுடியாதா?"

"முட்டாளே! தரையில் நின்று கொண்டு தாரகையைப் பிடிக்க முயல்கின்றாய். வேண்டாம்; விட்டு விடு எண்ணத்தை!"

ஏகலைவன் பதில் பேசவில்லை.

உள்ளத்தில் ஒரே கருத்து மட்டும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. "கற்றுக்கொள்வேன்; கண்டிப்பாகக் கற்றுக்கொள்வேன். அம்பும் வில்லும் அருமையான கருவிகள். எப்படியும் கற்றுக்கொள்வேன்!"

★

அஸ்தினபுரத்தை நோக்கி இரதம் சென்றுகொண்டிருந்தது. புழுதிப் படலம் சாலையை மறைத்தது. பாண்டு, திருதராட்டிரன் குமாரர்கள் வில் வித்தையைக் கற்றுக்கொண்டு திரும்பி வந்தார்கள். பறவைகள் காலைப் பண்பாடியதும் துரோணர் அவர்களை மறுபடியும் அழைத்துக் கொண்டு பயிற்சி நிலையம் செல்வார்.

இரதம் நின்றதும் அடிமைகள் ஓடி வந்து அரச குமாரர்களின் ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டனர். எல்லோரும் அரண்மனையில் நுழைந்தனர். அர்ஜுனன் மேல் துரோணருக்கு அளவற்ற அன்பு. அறிவாலும், திறனாலும் அவன் குருவைக் கவர்ந்திருந்தான்.

கோட்டையில் சக்கரவர்த்தி திருதராட்டிரனும் அவனுடைய அமைச்சனும் இருந்தனர். திருதராட்டிரன் குருடனானதால் விதுரனும், சஞ்சயனும் அவனுக்கு இருமருங்கும் அமர்ந்திருந்தனர். குருவின்வருகையை முன்னிட்டு எல்லோரும் எழுந்து நின்றனர். பிறகு எல்லோரும் தங்களுக்குரிய இடங்களில் அமர்ந்தனர்.

துரோணர் பேசினார்: "குருவம்சத்தின் புகழ் வானளாவப் பரவும் என்ற நம்பிக்கை என்உளத்தில் துளிர்விடுகிறது. அர்ஜுனன் உலகிலேயே சிறந்த வில்லாளியாவான்!"

"அர்ஜுனன் இளமையிலிருந்தே திறமைசாலி. திறமைக்கு அவன் இலக்கியமாயிற்றே!" விதுரன் துரோணருக்கு ஒத்து ஊதினன்.

"ஆனல் சில சமயம் பயிற்சி செய்யும்போது அர்ஜுனனின் இளகிய மனம் கல் மனமாகிவிடுகிறது"– துரோணர் அர்ஜுனனின் குறையைச் சொன்னர்.

"துரியோதனன் ஆயுதப் பயிற்சியில் முன்னேறியிருக்கிருனு ?" அமைதியாக இருந்த திருதராட்டிரன் துரோணரை இன்னும் என்னென்னவோ கேட்டான்.

துரோணர் எல்லாவற்றிற்கும் பதில் சொன்னர். அவர் உள்ளத்திலிருந்த சந்தோஷத்தை வெளிப்படுத்தினர். "வேந்தே! சௌரசேனம், அங்கம் முதலிய இடங்களில் குழப்பமாமே; உங்களுக்குத் தெரியாதா? இதனை அடக்குவதற்கு முன்னெச்சரிக்கை எடுத்துக்கொள்ளவில்லையா?"

"முன்னெச்சரிக்கையா?" திருதராட்டிரன் வினு எழுப்பினன்.

சஞ்சயன் பதில் கூறினன். "சௌரசேன அரசன் உக்கிரசேனனை அவன் மகன் சிறையில் அடைத்துவிட்டான். அவன் வருணசிரமத்தை ஒத்துக் கொள்ளவில்லை. மேற்குப் பிரதேசத்தை ஆளும் ஜராசந்தன் ஆரியர் விரோதியாகிவிட்டான். அவன் சூத்திரர்களுக்கும், தாசர்களுக்கும் புதிய சலுகைகள் கொடுத்துக்கொண்டிருக்கிறன். இந்தப் புதிய செய்தியை நேற்று ஒரு பிராமணன் கொண்டு வந்தான்."

துரோணர் கம்பீரமாய்ப் பார்த்தார். அவர் மூளையில் சிந்தனை ரேகைகள் படர்ந்தன. திருதராட்டிரன் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

சஞ்சயன் மீண்டும் சொன்னன், "இந்த இடங்களில் சூத்திரர்களும் தாசர்களும் ஆயுதப் பயிற்சி கற்றுக் கொள்ள ஆசைப்படுகிறுர்களாம்!"

துரோணர் சிறிது அழுத்தமாகப் பேசினர்: "ஆயுதப் பயிற்சிமட்டுமல்ல. ஆகமங்கள் படித்து மனப்பாடம் செய்யவும் ஆரம்பித்துவிடுவார்கள் சூத்திரர்கள். வருணசிரமத்தைக் காக்க வேண்டிய ஆரிய வீரர்கள் வாளாயிருக்கும்போது, ஆரியத்திற்கு வீழ்ச்சி ஏற்படத்தான் செய்யும். சம்புகன் தலைமையில் எழுச்சி கொண்ட சூத்திரர்களை அடக்கினன் இராமன். அது ஒரு காலம். அந்த நாள் இன்று வராதா?"

கோட்டையெங்கும் இந்தக் கேள்வி எதிரொலித்தது. திருதராட்டிரன்,சஞ்




சயன், விதுரன் இவர்கள் நடுங்கிவிட்டார்கள். அவசியம் இதைத் தடுக்க வேண்டும்! சூத்திரன் தொண்டு செய்ய மாட்டான். தாசன், இட்ட கட்டளைக்குக் கீழ்ப்படியமாட்டான். என்ன நடைபெறும்? ஆரியக் கோட்டையின் அடித்தளம் அசைந்துவிடும். சமுதாய நிலை மாறிவிடுமா? பிராமணர்களின் பெருமையை எப்படிக் காப்பாற்றுவது? துரோணருக்கு இது சாதாரண விஷயம்; என்ருலும் அவரே நடுங்கி விட்டார்.

அவர் சொன்ஞர்: "வேந்தே! காந்தாரம், மத்தரம், கோசலம்ஆகிய அரசர்களுக்கு செய்தியைச் சொல்லுங்கள். அமைதியாக இருப்பதால் ஆரியத்தின் ஆணிவேர் பிடுங்கி எறியப்பட்டுவிடும். சூத்திரர்களின் எழுச்சி, ஆரியத்தின் தோல்விக்கு அடிப்படையாகும்!"

வில் வித்தை கற்றுக் கொடுப்பதோடு வேதத்தின் பெருமையையும் விளக்கி வந்தார் துரோணர். இதன் ஒரே நோக்கம் வருணுசிரமத்தை வளர்ப்பதுதான்.

துரோணர் ஆணித்தரமாக எடுத்துரைத்தார்: "அரச குமாரர்களே! கவனியுங்கள்! ஆரிய வேதங்களை சூத்திரர்கள் படித்தால் தங்கள் கடமையிலிருந்து நழுவிவிடுவார்கள். அவர்களின் கடமை ஆரியரின் சேவையாகும்."

துரோணரின் முகத்தில் உணர்ச்சி ரேகைகள் பரவின. சௌரசேனம், அங்கம் இவைகளில் நடக்கும் சூத்திரர்களின் கிளர்ச்சி துரோணரின் முகத்தில் கலக்கமாகக் காட்சியளித்தது. குருவின் வீரவுரை அரசகுமாரர்களின் உள்ளங்களில் பசுமரத்தாணி போல பதிந்தது.

"செய்மையிலும் அண்மையிலும் சூத்திரர்கள் கிளர்ச்சி செய்தால் அதை அடக்க யார் முன் வருவீர்கள்?"—அரசகுமாரர்களின் உள்ளங்களை அறிய, துரோணர்கேள்வி கேட்டார்.

குருவின் நீண்ட பேருரையைச் செவிமடுத்த அரசகுமாரர்கள் "நான் நான்" என்று ஒரே குரலில் விருப்பம் தெரிவித்தனர்.

துரோணரின் முகத்தில் புன்னகைப் பொன்ளெளி படர்ந்தது. தன்னுரை அரசகுமாரர்கள் மனதில் ஆழப் பதிந்துவிட்டது என்பதை அவர் உணர்ந்துகொண்டார்.

"அரசகுமாரர்களே!" அவர் மீண்டும் உரையைத் துவக்கினர். அதற்குள் கறுநிறங் கொண்ட காவலாளி ஒருவன் உள்ளே வந்து சொன்னன்: "குருவே! ஒரு சூத்திரன் தங்களைக் காண விரும்புகிருன்!"

"சூத்திரனு?" துரோணரின் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன.

''ஆமாம் குருவே!'' வந்தவன் வணங்கி யுரைத்தான்.

''சரி, உள்ளே அனுப்பு,'' துரோணர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

வந்தவன் ஏகலைவன் தான்!

அவரை வணங்கி அவன் வில் வித்தை கற்றுத்தர வேண்டினன். துரோணர் மறுத்ததோடுமட்டுமல்லாமல், திட்டியும் அனுப்பி வைத்தார் அவனை.



மறு நாள் ஏகலைவன் கிராமத்திற்குச் சிறிது தொலைவில் ஒரு சிறு குடிசையமைத்து, அங்கே துரோணரின் உருவச்சிலை வைத்து வில் வித்தை கற்க முயன்றான். வில் வித்தையில் தேர்ச்சி பெற வேண்டும் என்ற தீவிர விருப்பம் அவன் உள்ளத்தில் முளைவிட்டது. குடும்பத்தாரிடம் துரோணர் மறுத்துவிட்டதைப் பற்றிக் கூறவில்லை.

பயிற்சி தொடங்கியது. குரு இல்லாமல் அவருடைய வெறும் சிலையை வைத்துக்கொண்டே கற்றான். குல வித்தையான அது, அவனுக்குக் கை வந்துவிட்டது.

ஒரு நாள் யுத்தி அவனைப் பார்த்தாள். அவனுடைய வில்தேர்ச்சி பற்றி ஆச்சரியப்பட்டாள். ஏகலைவன் அவளிடம்'' துரோணர் எனக்கு வில் வித்தை கற்றுத் தராவிட்டாலும், அவர்தான் எனக்கு குரு. அது கிடக்கட்டும் யுத்தி, நான் குறி வைப்பதைப் பாரேன்,'' என்று கூறி மரத்தில் அமர்ந்திருந்த ஒருபுறாவைக் குறி வைத்தான். மறு நொடியில் அது கீழே விழுந்தது.

''நன்றாகக் குறி வைக்கின்றாயே!''

சிறிது தொலைவில் நாயொன்று குரைக்கவே யுத்தியின் கவனம் அங்கே திரும்பியது. உடனே அம்பு எய்து, காயம் உண்டாக்காமல் நாயின் வாயைக் கட்டிவிட்டான் ஏகலைவன்.

நின்றிருந்த நாய் காட்டில் ஓடியது. வாலை ஆட்டிக்கொண்டு தலைவனைச் சுற்றிச் சுற்றி வந்தது. நாயின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. நிலையை உணர்ந்தான் தலைவன்.

அதன் தலைவன் அர்ஜுனன்தான்!

அர்ஜுனன் ஏகலைவனிடம் வந்து, அவனிடம் ஆத்திரத்துடன் கேட்டான்:

''என் நாயை இந்நிலைக்கு ஆளாக்கியவன் நீதானே?''

''ஆம், நான்தான்!'' நாயைப் பார்த்த ஏகலைவன் பதில் கூறினான்.

அர்ஜுனன் தோள்கள் துடித்தன. ''சூத்திரனே! குரு துரோணரின் சீடனோடு உரையாடுகிறோம் என்பதை மறந்துவிட்டாயா?'' கடு சொற்கள் வீசினான் அர்ஜுனன்.

ஏகலைவன் சிரித்தான். யுத்தியும் நகைத்தாள். ''அரச குமாரனே! உனக்கு முன்னும் துரோணரின்சீடன் தான் நின்றுகொண்டு இருக்கிறான்.''

''என் குருவின் சீடனா நீ? துரோணரின் சீடனா?'' கோபம் அர்ஜுனன் கண்களை மறைத்தது. தலை சுற்றியது. நின்றிருந்த உருவங்கள் ஒவ்வொன்றும் இரண்டாகத் தெரிந்தன அவன் கண்களுக்கு.

தன் கணவன் மாற்றாளுடன் கொஞ்சுவதைக் கண்ட மனைவி அவமானத்தால் தலை குனிந்து செல்வதைப்போல, அர்ஜுனன் அஸ்தினாபுரத்தை நோக்கி அமைதியாக நடந்தான். உள்ளம் அலை மோதியது.

துரோணரின் இருப்பிடம் அடைந்த அர்ஜுனன் அவரது கால்களில் விழுந்து முறையிட்டான். ''குருவே! இதுதான் நீதியா? நீங்கள் ஏன் இவ்வாறு செய்தீர்கள்? ஏன் செய்தீர்கள் குருவே?''

ஆசிரியர் கேள்விக்கு பதில் தெரியாத மாணவன்போல விழித்தார் துரோணர். ''அர்ஜுனா ஏன் இந்த ஆவேசம்? எழுந்திரு!'' என்று கூறி அவனை மார்போடணைத்துக்கொண்டார்.

''குருவே! வையகத்தில் சிறந்த வில்லாளி. அருளும் திறனும் பெற்றவன். நீங்கள்தான் அவனுக்குக் கற்றுக்கொடுத்திருக்கிறீர்கள். நான்

அவன் முன்னுல் நிற்கக்கூடத் தகுதியற்றவன்.'' மனவருத்தத்திற்கு வார்த்தை வடிவம் கொடுத்தான்.

துரோணரின் ஆச்சரியம் அணுவளவும் குறையவில்லை. ''அர்ஜுனு! உங்கள் எல்லோருடைய முன்னிலையிலும் நான்தான் அவனை அரண்மனையைவிட்டு அகற்றிவிட்டேனே! அவன் வில்லாளியாகிவிட்டானு? உன் கூற்றின் மர்மம் எனக்கு விளங்கவில்லையே?''

அர்ஜுனன் குரு முகத்தைப் பார்த்தான். வியப்பின் கோடுகள் அவர் முகத்தில் விளையாடிக்கொண்டிருந்தன. அவன் சொன்னுன்: ''நீங்கள்தான் அவனுக்கு குரு என்று ஏகலைவன் கூறினுன். நாயைப் பாருங்கள் குருவே! பன்னுட்கள் முயன்றும் செய்யமுடியாத பணியை ஏகலைவன் ஒரு நொடியில் செய்துவிட்டான்.''

கொலைக்களம் சென்ற ஆடு கத்திபடுமுன் நடுங்குவதைப்போல் துரோணர் நடுங்கினுர். ''சூத்திரனுடைய மகன் சிறந்த வில்லாளி! இறைவா! என்ன நடக்குமோ இனி? ஆரியருக்குப் போட்டியாகச் சூத்திரர்கள் கிளம்பிவிடுவார்களா? அகிலத்தில் ஆரியம் அழிந்துவிடுமா? இல்லை! இல்லை!!'' உள்ளக்குமுறலை அடக்கியவாறு துரோணர் சொன்னுர்: ''மகனே அரண்மனைக்குப் போ. நாளை காலையில் ஏகலைவன் கிராமத்திற்குச் செல்வோம். அர்ஜுனு! என்னை நம்பு! ஏகலைவனுக்குநான் வில்வித்தை கற்றுக்கொடுக்கவில்லை!''



காலைநேரம். தங்கத்தேரேறி கதிரவன் பவனிவரும் வேளை.காலைப் பண் பாடியவண்ணம் பறவையினம் வானத்தில் பறந்தன. யுத்தியும் ஏகலைவனும் தாயிடம் விடைபெற்றுக் கொண்டு பயிற்சி சாலை நோக்கி நடந்தனர். சிறிது தொலைவுகூடச் சென்றிருக்கமாட்டார்கள், இளவரசர்களும் துரோணரும் வருவதை இருவரும் கண்டனர். ஆச்சரியத்தால் ஏகலைவன் உடல் புல்லரித்தது.ஓடிச் சென்று துரோணரின் பொற்பாதங்களில் தலைவைத்து வணங்கினுன்.

அரசகுமாரர்கள் கிராமத்திற்குவந்த சேதி காட்டுத்தீபோல் பரவியது. இரணியவதனும் அவன் மனைவியும் ஊர்மக்களும் ஏகலைவன் குடிலுக்கு வந்தனர்.இறைவனைப்பார்த்த பக்தன் போல மக்கள் துரோணரைப் பார்த்த வண்ணம் நின்றிருந்தனர். இடுகாட்டு அமைதி நிலவியது. விலங்கினங்கள் மாநாடுபோல காட்சியளித்தது அது. அமைதியைக் கலைத்த வண்ணம் துரோணர் கேட்டார், ''ஏகலைவா உன்னுடைய குரு யார்?''

''நீங்கள்தான் குருவே!''

துரோணருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''நானு? நான் எப்போது உனக்கு சொல்லிக்கொடுத்தேன். புல்லனே பொய் பேசாதே.''

ஏகலைவன் நடுங்கிவிட்டான். அர்ஜுனன் முகத்தில் மகிழ்ச்சிதாண்டவமாடியது. ''சூத்திரப் பயலே! உன்னுடைய குரு யார்? சொல்.''

ஏகலைவன் கம்பீரமாகப் பதிலளித்தான்: ''துரோணர்தான் என் ஆசான்! எனக்கு அவர் கற்றுத்தரவில்லையே தவிர, அவர்தான் என் ஆசான். அவரை குருவாக மனதில் எண்ணி நான் வில்வித்தை கற்றுக்கொண்டேன். கிராமத்தில் நான் கற்றுக்கொள்ளுவது யாருக்கும் தெரியாது.''

''அந்தப் பெண்ணுக்குக்கூடவா?'' அர்ஜுனன் கேட்டான்.

''யுத்திக்கு மட்டும் தெரியும். நான் குறி வைக்கும்பொழுது அவள் மட்டும்தான் இருப்பாள்!''

ஊர்மக்கள் திடுக்கிட்டார்கள். இரணியவதனும் அவன் மனைவியும் தீயை மிதித்தவர்கள்போல் ஆனுர்கள். சான்றோனைப் பெற்ற தாய் மகிழாமலும் இருக்கமுடியவில்லை. யுத்திக்கு மட்டும் உள்ளூரப் பயம் இருந்துவந்தது.

துரோணர் சிந்தித்தார். சூத்திரன் மகன் வெறும் பயிற்சியால் இவ்வளவு முன்னேறிவிட்டானே! அர்ஜுனனைவிட திறமைசாலி. சூத்திரர்களும் அடிமைகளும் வில்வித்தை

யில் தேர்ச்சி பெற்றுவிட்டால் உயர் குல மக்கள் நிலை என்னுகும்? பிராமணர்களின் பெருமையை யார் அறிவார்கள்? மனதில் சூழ்ச்சி உருவாகியது. புன்னகையால் பொன் முகம் பொலிவுற்றது.

"அப்படியானுல், ஏகலைவா! என்னை உன் குருவாகக் கருதுகிருயா?"

"ஆமாம் குருவே!" ஏகலைவன் மனம் புல்லரித்தது.

அர்ஜுனன் பூகம்பத்தில் சிக்கியவன்போல் நடுங்கிக்கொண்டிருந்தான். துரோணரின் முகத்தில்புன்னகை மலர்ந்தது. அவர் கூறினர். "குரு காணிக்கை கொடுப்பாயா?"

"உடல், பொருள் ஆவி உங்களுக்கே சொந்தம் குருவே!"

எரியிடையிட்ட ஈட்டி தன்மேல் பாய்வதுபோல் உணர்ந்தாள் யுத்தி.

முதல் இரவில் மணமகன் மணமகளை எதிர்பார்ப்பதுபோல் அர்ஜுனன், குரு என்ன கேட்பாரோ என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

"ஏகலைவா! சிந்தித்து முடிவுக்கு வா! எதை வேண்டுமானுலும் நான் கேட்பேன்!"

"குருவே! சொன்ன சொல் தவற மாட்டேன் நான்."

கிராமத்து மக்கள் சிலையாக நின்றிருந்தனர். துரோணர் தயக்கத்துடன் கேட்டார்: "வலதுகை கட்டைவிரல் வேண்டும் எனக்கு!"

சொற்கள் குடிசையில் எதிரொலித்தன. அவை சுட்டெரிக்கும் மின்னலாகத்தாக்கின ஏகலைவனை.

இரணியவதன் வெட்டப்பட்ட மரம் போல சாய்ந்தான். தாயன்பு தணியாத அன்பன்ருே? "வேண்டாம்" என்று கெஞ்சினுள் துரோணரிடம். வருணுசிரமப் பாதுகாவலன் மறுத்துவிட்டான்.

கோடலி எடுத்து கட்டைவிரலை நறுக்க ஆயத்தமானுன் ஏகலைவன். யுத்தி தடுத்தாள்: 'வேண்டாம்; என்னை வேண்டுமானுலும் பலி கொடுத்துவிடு. கட்டைவிரலை வெட்டாதே!"

"ஏகலைவா! தயாரா?" அவசரப்படுத்தினர் துரோணர்.

கட்டைவிரலோடு கோடலி மோதியது. வெட்டப்பட்ட கட்டைவிரல் துரோணரின் கால்களில் போய் விழுந்தது. இரத்தம் அவர் கால்களை நனைத்தது.

ஏகலைவனின் கட்டைவிரல் ஆரிய மதத்தை, வருணுசிரம முறையைக் காப்பாற்றியது. ஆரியத்தின் வெற்றிக்கு ஏகலைவனின் கட்டைவிரல் காணிக்கையாயிற்று! ★

---

'சரிதா' (இந்தி) சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற கதையின் மொழிபெயர்ப்பு.

---

## ஓரே தடவை!

*எப்பொழுதும் தனது மனைவியோடு சண்டைபிடித்துக் கொண்டிருந்த ஒருவரை, அவருடைய நண்பர் கேட்டார்:*

*"நீங்களும் உங்களுடைய மனைவியும் எப்போதாவது ஒத்துப் போனதுண்டா?"*

*"உண்டு; ஒரே தடவை! எங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டபோது, இருவரும் கதவைத் திறந்துகொண்டு ஒன்ருக வெளியே ஓடிவந்தோம்!"*

நாகாம்பிகா விஜயநகர பேரரசனின் மூன்ருவது தேவி. புகழ்மிக்க கிருஷ்ணதேவராயனைப் பெற்றெடுத்த இவள்,ராஜபரம்பரையைச் சார்ந்தவளல்ல. இந்த குலமுறை வேறுபாட்டை வைத்துக்கொண்டு அப்போதைய உலகம் ராயரின் பெருமைக்கு அழியாத களங்கத்தைக் கற்பித்தது. தோழிப்பெண் ஒருத்தி அரசியான சேதிக்கு பல கதைகள் வழங்கப்படுகின்றன. அந்தக் குவியலில் இப்படியும் ஒன்று...

# அவதாரம்

இன்றைக்கு ஏறத்தாழ ஐநூறு ஆண்டுகளுக்குமுன் நடந்தது இது.

அந்த நாளில் வான மண்டலத்திலே தேஜோ மயமாகப் பொலிந்த சொர்க்கத்தில் தேவ மைந்தர்கள் வாழ்ந்து வந்தார்கள். நிலவின் அமுதக் குழம்பைக் குடித்து கோல வெறி படைத்த அவர்கள் அற்ப மனிதர்களை அதிகமாக சோதிக்காமல், சுரா பானம் நிரம்பி வழிந்த கோப்பைகளில் தங்களுடைய திருமுக விலாசங்களைப் பார்ப்பதிலே திருப்தியடைந்திருந்தார்கள்!

ஏனென்ருல், அப்போது அவர்களுக்கே போதாத காலம்...இரக்கமற்ற பல பாப ஜென்மங்கள் புகை உமிழும் இரும்புக் குழாய்களையும், பயங்கர வெடி மருந்துகளையும் இந்த புண்ணிய பூமிக்கு கொண்டு வந்து அமளி படுத்தினர்கள்! அந்தக் கொடுமை கண்டு பயந்து குமுறிய தெய்வ பரம்பரையினர் தங்களிடமிருந்த வாள், வேல், ஈட்டி, கதாயுதம், வில்லம்பு, பரிசை சூலம்போன்ற அழி வாயுதங்களை மகாசமுத்திரத்தில் விட்டெறிந்து அப்ஸரசுகளின் செழித்து மணக்கும் கூந்தலுக்குள் போய் மறைந்து கொண்டார்கள்!

இது இவ்வாறு நிற்க, போர்க்களங்களில் உயிரிழந்த வீரர்கள் பிசாசுகளாக மாறி உலக நியதிகளைக் காத்து வருவதாக மந்திரவாதிகள் பலர் உடுக்கை முழக்கி பிரசாரம் செய்து வந்தார்கள்! அவர்கள் மேலும் தெரிவித்தது என்னவென்ருல்...

"ராசாக்களே! மந்திரிகளே! தானுதிபதிகளே! தோளிலேதினவு பசித்ததால் அசுவனி, பரணி, கிருத்திகை, ரோகிணி போன்ற நட்சத்திரங்களையும், மேக மண்டலத்தின் பல கிரகங்களையும் பிசாசுகள் உருட்டிவிட்டு விளையாடிக்கொண்டிருக்கின்றன! அந்த சதுரங்கத்திலே நாம் அத்தனை பேரும் சொக்கட்டான் காய்கள் என்னும் சேதியை அ[illegible]வோமாக!"

பூவுலகம் அப்படி இயங்கி வரும் பொற்காலத்தில், விசய நகர சாம்ராஜ்யம் குபேர புரியாகப் பொலிந்தது. ஐந்து ரக செல்வங்களும் அங்கே நிரம்பி வழிந்தன. 'போதும் போதும்' என்னுமளவிற்கு பொன்னையும், மணியையும் மக்கள் சின்னஞ்சிறு குன்றுகளாகக் குவித்துப் போட்டிருந்தார்கள். தங்க அணிகள் எடுப்பாரற்று வீதிகளிலே இறைந்து கிடந்தன.

இரா.இளஞ்சேரன்

நரசராயலு மண்டலீக மேக மாராண்டன் எனும் திருவுடை வேந்தன் அங்கே செலுத்திய அரசு திசையெல்லாம் பரந்தது! மந்திரிப் பிரதானியரும் தந்திரத் தலைவரும் மற்றுமுள்ள நல்லாசிரியர்களும் புடை சூழ, வான் பொய்க்கினும் தான் பொய்க்காமல் நடத்திய ஆட்சியிலே நாடு செழிப்பாயிருந்தது. மக்கள் அமராவதிபுரி வாசிகளாக வாழ்ந்தார்கள். வயலிலே செந்நெல் உதிர வாவியிலே தாமரை மலர, களத்திலே முரசம் ஆர்ப்ப, சோலையிலும் சாலையிலும் சுந்தர நல் தோகையர் உலவிட ராயபுரம் இன்பத் திளைப்பிலே அமிழ்ந்து, செருக்கிலே தோய்ந்து கிடந்தது!

அங்கே வளர்ந்தது வில்தான்; செங்கோலல்ல! புலம்பியவை சிலம்புகளே தவிர, மக்களல்ல. பெண்களின் விழிகள் மட்டும்தான் அங்கே மெய்நெறிவிட்டு விலகின.

அந்த நாளில் நரசராயலு திப்பாம்பாதேவி, உமாம்பிகாதேவி என்ற கரும்பென இனித்திடும் இரு கன்னியரை பாணிக்கிரணம் செய்து கொண்டான். பகை மன்னரும், பட்டாள வீரரும், வாழ வகையற்றுப்போன பிரபுக்களும் இப்படி பற்பலரிடமிருந்து பெற்ற ஆயிரத்தி முந்நூறு அழகிகள் அரசனின் 'அபிமான ஸ்திரீகளாக' அந்தப்புரத்திலே இருந்துவந்தார்கள்.

மலர் தொடுக்கவும், மஞ்சத்திலே முகை பரப்பவும், மதனவிகாரம் எரிய இசை எழுப்பவுமே இவர்கள் பயன்பட்டார்கள்! இவர்களது மேனியிலே சிவப்புரத்தம் இருந்ததே தவிர அரச பரம்பரைக்கே உரித்தான நீலநிறம் இல்லை!

இரு தேவியரிலே உமாம்பிகா வைத்தான் மன்னன் அதிகமாக ...ழைத்தான்! அவள் அழகி, மாலை ...தியம் போன்ற மனோகரவல்லி. சேலான விழி சுழல, ச...யிலே தணல் வைத்து, வேலான விற்புருவத்தால் வீழ்த்துகின்ற பேரழகி! இன்னும், சோலையின் பூக்களிலே அவள் புன்னகை இருந்தது. சலசலக்கும் அருவியில் அவளது பேச்சொலி நிழலிட்டது. குரலின் இனிமை கொம்புத்தேனிலும், முகத்தின் வசீகரம் முழு நிலவிலும், முற்றுக இளமை நலம் கனியிலும் இனி...! இத்தனை ஏன்? பஞ்சபாணன் மலர்க்கணைகளை எங்கோ விட்டெறிந்துவிட்டு அவளிடம் பாடல் பயில வந்திருந்தான்! சுவைத்து, சுவைத்து சொன்னாலும் திகட்டாத தேவபானம்...அழகிற்கே அழகு செய்யும் அழகு...

உமாம்பிகாதேவியின் மேனிப் பொலிவை ஏட்டிலே தேக்கிக் காட்ட இயலாத மனக்குழப்பத்தால் புலவர் இருவர் சித்தம் பேதலித்து திறந்த வரலாற்றை 'கவிராயலு சரித்திரமு' எனும் தெலுங்கு ஏடு தருகிறது.

அரசியரோடு மண்டலீக மேக மாராண்டனான நரசராயலு வாழ்ந்திருந்த காலையிலே போனநாள் பாபத்தால், புத்தெனும் நரகத்தில் விழ இருந்த மன்னனைக் காப்பாற்றுவதற்காக திப்பாம்பாதேவியின் திருவயிற்றிலே சூரியன் சுவடு நிகர்த்த பாலகன் அவதரித்தான்.

பிறந்ததுமே அந்த மழலைக்கு 'பேச்சுமூச்சு' இல்லை...பிறகு விழித்தது; அவ்வளவுதான்! எல்லாக் குழந்தைகளையும்போல அரசமைந்தன் அழுவானா என்ன? ராயலு மன்னனோ துடியாகத் துடித்தான். அப்பாஜியான சாளுவ திம்மராசுவுக்குக்கூட எதுவுமே புரியவில்லை!

மருத்துவ சிகாமணிகள் நாடி பார்த்தார்கள். பண்டிதர்கள் கிரகங்களைக் கணித்தார்கள்! கோயில்களிலே புதிய ஆராதனைகள் நிகழ்ந்தன! குழந்தை மட்... ...னு அழவில்லை. அதன் வலது முதுகிலிருந்த சின்னஞ்சிறு புள்ளி ஜோதிடர்களை எங்கெல்லாமோ விரட்டியடித்தது!

கடைசியாக ஒரு யவன வைத்தியன் மன்னனிடம் பேசினுன்:

"ராசாவே! இந்தப் பிள்ளைக்கு இப்போது பேச வராது! வளர்ந்த பிறகு நிலை மாறலாம்!"

மன்னனின் கண்கள் கலங்கின.

"இன்னும் ஒரு சந்தேகம்..." —மருத்துவனுக்கு ஏனே தயக்கம்.

"என்ன? அஞ்சாமல் சொல்லும்!" சாளுவ திம்மராசு கலகலத்த குரலில் கட்டளையிட்டான்.

"அது அதிசயமான குறை! குழந்தைக்கு முதுகெலும்பு இல்லை பிரபு!"—மருத்துவனின் குரல் நடுங்கியது.

"உண்மையாகவா?" அப்பாஜி அலறியதை மன்னன் கேட்கவில்லை! ஏனென்ருல்...மண்டலீக மேகமாராண்டன் அங்கே மயக்கமுற்றுக் கிடந்தான்!

அதோடு, பிறகு அந்த யவன வைத்தியனை விஜயநகர மக்கள் பார்க்கவேயில்லை!



திருக்கோயிலின் மணிகள் ஒலித்தன. நிமித்திகன் எங்கிருந்தோ ஓடி வந்தான். "மண்டலீகா! நல்ல சகுனம்!" அவனது படபடப்பில் சொற்கள் குழைந்து புரண்டன.

"என்ன பண்டிதரே!" பேரரசன் நரசராயலுவின் விழுப்புண்கள் பட்ட முகம் விளக்கொளியில் பயங்கரத்தை சித்தரித்தது.

மதுவின் வாடை அந்த அலங்காரக்கூடத்தை நனைத்திருந்தது.

"அற்புதமான முகூர்த்தம் மன்னவா! வானத்திலே வெள்ளி ஜொலிக்கிறது. பாருங்கள் அந்தக் காட்சியை!"

"வழக்கமாகத் தோன்றும் நட்சத்திரம்தானே, நிமித்திகரே!"

"இல்லை வேந்தே! இது கருமை பெற்று உதிர்வதற்குள் கருவிலே உருக்கொள்ளும் உயிர் புவனத்தையே கட்டியாளும்! ராய பரம்பரைக்கு அழிவேயில்லை அரசே, அப்படிப்பட்ட சுபவேளை இது!"

மன்னன் வியந்தான்; நெஞ்சின் ஆர்வத்திரட்சியை நெருடிவிட்ட உணர்ச்சி அவனுக்கு!

"உண்மையாகவா?"

"நான் சொல்லவில்லை. சாஸ்திரம் சொல்கிறது. கிரகங்களின் கணிதம் சொல்கிறது? இன்னும் என்ன? இந்த இரவை வீணுக்கி விடாதீர்கள்! தேவியாரை அழைத்து இதனை வசந்த விழாவாகக் கொண்டாடுங்கள்!"

மன்னனின் விழிகளில் சிவப்பு கனிந்தது. போதை உதடுகள் சொற்களை உதிர்த்தன.

"ஆமாம்! அரசுபுரிய ஒரு வீர மைந்தன் வேண்டும்! இப்போது பிறந்த பேசாத கோழையா கொடி தாங்கி களம் செல்லப் போகிருன்?"

"கூழாங்கற்களைக்கூட வைரமாக்கும் சித்திமிக்க இந்த முகூர்த்தத்தின் கிரகம் இரண்டாம் சாமத்திற்குப்பின் திசை மாறிவிடுகிறது... புத்திரன் அவதரித்தால் பேரரசு பொலிவுறும்! பெண் பிறந்தால் வீராங்கனையாக வாழ்வாள்! தாமதித்தால் பெரும் இழப்பு! தேவியார் இப்போதே வர வேண்டும் அரசே!"

மலர்களின் மகரந்தம் சிதறிய வசந்த மாளிகையில் அம்சதூளிகா மஞ்சத்தில் சிங்காரத் தாதியர்கள் சாமரம் வீச உமாம்பிகாதேவி சயனித்திருந்தாள். மகரயாழின் தந்திகள் அமைதியில் நாத ஒலியை இழைத்துக்கொண்டிருந்தன. அவளது கொதிப்புற்ற மன உணர்ச்சிகள்போல அங்கே எண்ணற்ற தீபங்கள் சுடர்விட்டுப் பிரகாசித்தன.

"மன்னர் அழைக்கிருர் தேவி..." அடிக்களைத்தவர்கள்போல வந்திருந்த தோழியர்கள் ஒரே குரலில் சேதி தெரிவித்தார்கள்.



உமாம்பிகாதேவி மஞ்சத்திலே புரண்டு படுத்தாள். மார்பிலே இழைந்த வெண்துகில் சரிந்து விழுந்தது.

"மன்னர் அழைக்கிறார் தேவி!" திரும்பவும் அதே கூட்டுக்குரல், தேவியின் எண்ணத்தைக் கலைக்கும் தொல்லை... பட்டத்திற்குரியவனைப் பெற்றெடுத்த திப்பாம்பாவை நினைத்தபோது அவளது கச்சிருக்கை விம்மித்தணிந்தது. ரத்தின கங்கணங்கள் கலகலத்து சிரித்தன.

வந்தவர்கள் நின்றார்கள். ஒருத்தியிடம் அவள் கேட்டாள்:

"அழாத குழந்தை எங்கேயாவது சிரிக்குமா, என்ன?"

"சிரிக்காது தேவி!"

"சிரிக்காத பிள்ளை வாழவா போகிறது?"

"வாழமுடியாது தாயே!"

தீபங்கள் எரிந்தன. தேவி சயனித்திருந்தாள். யாழின் தந்திகள் அப்போதும் புலம்பிக்கொண்டு தானிருந்தன.

அங்கே நிமித்திகன் துடித்தான்.

"அரசே, தேவியார் இன்னும் வரவில்லை!"

"ஆமாம். இன்னும் வரவில்லை!" மன்னன் இழந்த உணர்வைத் தேடிக்கொண்டிருந்தான். வெளியே ரதத்தின் சக்கரங்கள் தெருவிலே உருளும் தொனி கேட்டது. தூதுவன் ஓடோடி வந்தான்.

"தேவியார் வரவில்லை, மன்னா!"

வரிப்புலிபோல நரசராயலு உலவினான்.

"வேந்தே! சுபவேளை அழிந்துகொண்டிருக்கிறது!" காலத்தை கணக்கிட்ட நிமித்திகன் உணர்ச்சி வேகத்தோடு பேசினான். அதுவரையில்லாத மலர்களின் புதுமணம் அங்கே வீசியது.

"நாகாம்பிகா!" மன்னன் முணுமுணுத்தான். நிமித்திகனின் முகத்திலே விசித்திரமான கோடுகள் பிறந்து அழிந்தன.

நிலா முற்றத்திலே அவள் நின்றாள். தொடுக்கப்பட்ட நீண்ட பூச்சரம் அவளது தோளிலே குழைந்து கிடந்தது.

நாகாம்பிகா காத்திருந்தாள். மன்னனும் தேவியும் சப்ரமஞ்சத்திலே துயில் கொள்ளும் போது சாமரம் வீசுவதற்காக அவள் காத்திருந்தாள்.

சித்திர யாழிகள் தாங்கியிருந்த சிமிழிலிருந்து வெண்ணிற நறும் புகை வளையங்கள் நெளிந்து மன்னனின் எண்ணத்தில் புதுமணத்தைக் கவித்தன. வானம் இருளின் பெருங்கடலாய் விரிந்து கிடந்தது.



"நிலவுகூட இல்லையே பண்டிதரே!"

"தாரகைகள் பளிச்சிடுகின்றன மன்னு!"

அந்த மங்கியவெளிச்சத்தில் நாகாம்பிகா நிழல்வடிவாகத்தெரிந்தாள். நரசராயலுவின் கண்களில் விசித்திரமான பசி நிரம்பியிருந்தது.

"சாஸ்திரத்தில் இதற்கு தடையில்லை மண்டலீகா!" மன்னன் எதையோ சொல்லவந்தபோது நிமித்திகன் பேசிவிட்டு மெதுவாகச் சிரித்தான்.

நிலா மாடத்திலே விரிக்கப்பட்டிருந்த ரத்தினக்கம்பளத்தில் மன்னனின் பாதங்கள் பட்டன.

அந்தப் பணிப்பெண் விளக்கின் சுடரைத் தூண்டிவிட்டாள். சிவந்த வெளிச்சத்திலே அவளது முகத்தின் அழகுக்கோலம் திளைத்தது. நீண்ட விழிகளில் செவ்வரி படர்ந்திருந்தது. நரசராயலுவின் மனதிலே தாபத்தைக் கனிவித்த அவை கடலோ, கணையோ?

மலர் முடித்த கூந்தல் தோளிலே புரண்டு பளபளத்தது. மகராசனின் நினைப்பைக் கொள்ளையிட்ட அந்த மகரந்த இருள் முகிலோ, கருநாகமோ?

சிருங்காரத்தின் ஏடு தொடாத சிவந்த அதரங்களின் சோபிதம் மண்டலீகனின் ஆசைக்குவெறியை வார்த்தது. சந்திரனின் அமுதெடுத்து சாதிப் பவளத்தைக் குழைத்துச் சேர்த்த சுவை கனியோ, இதழோ?

துகில மறைந்து இளமைத்திணைப்பில் இறுமாந்து நின்ற அந்த மார்பழகில் சாம்ராஜ்யாதிபதிதன்னையே இழந்தான். கண் கருத்த இரு தாமரைகளென விம்மிப் பூரித்த அவை சிமிழோ, முகையோ?

"நாகாம்பிகா!" பார்த்து ரசித்து தீராத அவனது குரலில் ஆசையின்

உயிர்ப்பு பிரவகித்தது. மன்னனின் கொடூர முகத்தைக் கண்டதும் அவள்அயர்ந்தேவிட்டாள். அவளது உதடுகள் மெதுவாக நடுங்கின. அது புன்சிரிப்போ, அழுகையோ ?

நரசராயலு பேசினுன்: "பெண்களின் நாயகமே! பெரிய எழிலுடையவளே! 'ராஜ கர்ப்பம்' பெற போன ஜென்மத்தில் நீ என்ன தவம் செய்தாயோ?"

இடியொலி கேட்ட நாகமென நடுங்கிய அவள், நெற்றியிலே முத்தார்க்க, நெடு விழிகள் கண்ணீர் சோர வேண்டினுள்:

"மகா பிரபு! நான் தாழ்ந்த குலம். என் கற்பைக் கெடுத்துவிடாதீர்கள், ராசவே!"

"மகிழ வேண்டிய இடத்தில் அழலாமா பேதையே! இப்போது என்ன வந்துவிட்டது? இந்த சாம்ராஜ்யத்தின் வாரிசை நீதானே தவழ விடப் போகிருய்?"

"வேண்டாம் பிரபு! தேவியாருக்குத் தெரிந்தால் விபரீதம் வரும்!" நடுக்கத்தோடு நாகாம்பிகா புலம்பினுள்.

"கனிந்த உன் அழகு கண்டு என் ஆசையும் கனிகிறது பெண்ணே!" கையிருக்க, காம நெறியிருக்க, கட்டழகு மெய்யிருக்க மழை காணுத இளம் பயிரென மயங்கினுன் நரசராயன்!

"உன்னை என்னுடைய மூன்ருவது தேவியாக ஏற்றுக்கொள்கிறேன், நாகாம்பிகா!"

"வேண்டாம் பிரபு!" அவளது குரலின் நடுக்கம், சந்தனமேனியின் விதிர்ப்பு, விழியில் ஒளிவிட்ட கெஞ்சுதல் எல்லாமே மன்னுதி மன்னனின் மோகாந்தகாரத்தைப் புயலாக்கின. செம்மையிலே பூரித்த அவளது கன்னக் கதுப்புகளை, அவ்னது ரசனை வெறி தளிர்த்த விரல்கள் வருடின.

கரிய இமைகளும், புரண்டு தவித்த கடை விழியும், செம்பருத்தி வண்ண சிங்கார உதட்டழகும்... நரசராயலுவின் விம்மிய நெஞ்சம் பெருமூச்செரிந்தது. அது அக்கினிப் பிழம்பின் தழுவலோ? கருநாகத்தின் சீற்றம்தானே?

மூன்ரும் சாமத்து மணி ஒலித்த போது நாகாம்பிகா நிலாமாடத்தின் மஞ்சத்திலே துகில் நெகிழ்ந்து பூந்தண்டாகத் துவண்டு கிடந்தாள். விழிகளின் அஞ்சனம் முகத்தில் கலைந்திருந்தது. துயிலிலும் அவள் முணுமுணுத்தாள்.

"வேண்டாம் பிரபு!"

மன்னன் ஒளி தழுவாத வானத்தை உப்பரிகையில் நின்றபடி பார்த்து நின்ருன். சுபவேளையின் சாட்சியான அந்த நட்சத்திரம் உதிராமல் அப்போது மேக முகட்டிலேதான் ஒட்டிக்கொண்டிருந்தது!

அதே நேரத்தில் நாகம்பிகாவின் வீட்டில் களிப்பில் மூழ்கிய இருவரின் குரலொலி கேட்டது.

லட்சுமிபுத்திரர்களின் பள்ளியறையை அலங்கரித்து, வாசுதேவ கவியின் 'மதன மகாத்மிய'த்தின் காவியத்தலைவியாகிப் புகழ்பெற்ற ரத்தினமஞ்சரியிடம், விஜயநகரப் பேரரசனுக்கு நல்ல முகூர்த்தம் கணித்துக் கொடுத்துவிட்டு வந்த வேங்கிட நிமித்திகன் பேசிக்கொண்டிருந்தான்:

"சபலம் பெண்ணே, சபலம்! என்னை மட்டுமா, மன்னனையும் அது என்ன பாடுபடுத்திவிட்டது!"

"பண்டிதரே, நாகாம்பிகா என் தங்கை; அதையும் மறந்துவிடாதீர்கள்!"

"என் புள்ளிகள் எப்போதுமே தப்பியதில்லை, ரத்தினமஞ்சரி! வெறும் பெண் இப்போது நரசராயலுவின் ஆசைக்குரியவள்!"

அவர்கள் பேசினுர்கள், மகிழ்ந்தார்கள், திரும்பவும் பேசினுர்கள். எல்லையில் தேக்கும் களிப்பா அது?

கிழக்கில் மெல்ல மெல்ல சிவப்பு தழைத்தது. ★

# தகழி

பசியும், காமமும் மனித வாழ்வின் அடிப்படையான இரண்டு பிரச்சினைகள். இந்த பிரச்சினைகளின் சரித்திரம் தான் இலக்கியம். இதில் பயங்கரமான போர் முதல், ரம்மியமான காதல் வரையில்எல்லாமே இடம் பெறுகின்றன. ஆதிநாளில் இலக்கியம் எனப்படுவது பொழுதுபோக்கிற்காக உருவாக்கப்பட்ட கலைவழியாக இருந்தது. அதில் உண்மைகளைவிட மிகைக் கூற்றே அதிகமாக இருக்கும். அதாவது கற்பனைகள், கட்டுக் கதைகள் ! இலக்கியத்தின் ஆரம்பம் பண்டு,-மாளிகையும் மனோகர வாழ்வும் அமைவதற்கெல்லாம் முன்னால்-காட்டில் மிருகங்களுடன் இணங்கி வாழ்ந்த மனிதக் கூட்டத்தில் ஒரு காட்டு மிராண்டிக் கிழவி, தன் பேரக் குழந்தைக்கு அவள் வாழ்ந்து கடத்திய கதையை சுவையாக பிரதாபங்கள் கலந்து சொல்லிக் காட்டியதிலிருந்து ஆரம்பமாகியிருக்கலாம். அதிலிருந்து பறவைகளின் பாட்டைக் கேட்டு தானும் பாட நினைத்துப் பாடி கவிஞனாகியவனும், தங்கள் முன்னோர்கள் பிரதாபங்களை வளமையோடு அளந்தவன் சரித சிருஷ்டியாளனாகவும் வளர்ந்திருக்கலாம். அந்த நிலை ஒழுக்கில், புராணக்கதைகள், ஆதர்ச கதைகள், பக்திமார்க்க பாராயணங்கள், இதிகாசங்கள் எல்லாம் வழிவழியாகத் தோன்றியிருக்கலாம்.

கடந்துவந்த இந்த பழமையான பாதைகளைவிட்டு, இன்று எழுச்சி பெற்ற, பகுத்தறிவு பெற்ற மனிதன் புதிது புதிதாக 'சரிதம்' எழுத ஆரம்பித்திருக்கிறான். வளைத்துக் கட்டி எழுதும் இலக்கியத்திற்கு, கண்ணில் கண்டதெல்லாமேஆதாரம்தான். எதையும் எப்படியும் எழுதி இலக்கியமாக்கிவிடலாம்!

உலகின் எல்லா இலக்கியக் கிளைகளையும் ஆராய்ந்து பார்த்து விட்டு, மனிதன் பூர்த்தியாகி விட்டான் என்ற நிறைவோடு, இன்று நிமிர்ந்து நிற்க முடிகிறது. இந்த நிறைவு தந்த சரித்திர புருஷர்களில், மலையாள இலக்கியத்தில் முன்னணியில் நிற்பவர், தகழி என்று சுருக்கி அழைக்கப்படும், **தகழி-சிவசங்கரன்.**

வாழ்க்கையின் முக்கிய இரண்டு பிரச்சினைகள் பசியும் காமமுமல்லவா ? இதில், எழுத்தாளனுக்கு கதை சொல்ல, எல்லா வழியிலும் வளைந்து கொடுப்பது காமம். காதலாகவும், காவியமாகவும் அவன் அதை இழுப்பிற்கெல்லாம் இசைந்து கொடுக்கும் ரப்பர் துண்டைப்போலப் பயன்படுத்துகிறான். சிருங்காரத்தை நன்றாகச் சொல்லும் 'திறமைசாலி' தான்,இலக்கிய மேதை என்னும் நிலைகூட உண்டு. ஆனால், நேர் எதிரிடையான இந்த பசியும் அதன் பிரச்சினைகளும் எல்லோராலும் எளிதில் கையாளலாமென்ற விவகாரமல்ல. எவருக்கும் அதையும் அதன் விளைவுகளையும் நினைக்கையில் கசப்பு !

ஆ. மாதவன்



தகழி-சிவசங்கரன்

இந்தக் கசப்பில் கொஞ்சம் உண்மையோடியைந்த சிருங்காரத்தையும் கலந்து இலக்கிய சிருஷ்டி செய்து மாபெரும் வெற்றி கண்ட மேதை, தகழி.

தகழிக்கு, இந்த புனிதமான காதலில் நம்பிக்கையில்லை. பசிக்கும் போது புனிதம் செத்து விடுகிறது. புனிதம் என்பது வெறும் கனவு. அந்தக் கனவைச் சொல்லிமக்களை 'ரசனைப்படுத்த' அவர் முயலவில்லை. தகழி மனித வாழ்வை நன்ருக அறிந்து கொண்டவர். அந்த வாழ்வின் கோணல்களைப் புரிந்துக்கொண்டவர். ஆதிநாளில் கொடி கட்டி வாழ்ந்த மனிதனல்ல, இன்றைய சமுதாயப் பூச்சி. இன்று, அவனுக்கு சமாளித்தாக வேண்டிய பிரச்சினைகள் ஏராளம். அந்த பிரச்சினைகளிடையே வாழ்க்கையைப் போராட்டமாகக் கொண்டவன் இன்றைய மனிதன். இந்த உண்மைகளை தகழி நன்ருக அறிந்திருந்தார். விலகியிருந்து வேடிக்கை பார்க்கும் பிறவியாக அல்ல; 'படாதபாடு' படும் அவர்களில் ஒருவராகவே இருந்து தகழி எல்லாவற்றையும் தரிசித்தார். அந்த 'தரிசனம்' அவரது எழுதும் ஆவலில் கலந்தபோது, கழிசடை வாழ்வின் படப்பிடிப்பு இலக்கியமாயிற்று. பிரஞ்சில் மாப்பஸான்போல, ரஷ்யாவில் கார்க்கிபோல மலையாள இலக்கியத்தில் தகழி ஆனுர்!

பகுத்தறிவாளனுகிய மனிதனின் கழிவுச் சாதனங்களைச் சுத்தி செய்துவாழும் தோட்டிகளை 'நாயகர்'களாகக் கொண்டு இவர் எழுதிய **தோட்டியின் மகன்**, விவசாயத் தொழிலின் மகிமையை விளக்கும் **இரண்டு இடங்கழி**, இளமையின் வளமையை விலையாக்கி வயிறு வளர்க்கும் வனிதையரின் கதைகள் சொல்லும் **வேதனைகள்** போன்ற ஏடுகள், இவரது இலக்கிய சாதனையின் பொன்னேடுகளாகப் போற்றப்படுகின்றன. சமீப காலத்தில் எழுதி வெளியாகி 'தகழி' என்ற இலக்கிய முத்திரையை உலகெங்கும் பரவச்செய்த இவரது பெரும் உருவாக்கம், **செம்மீன்** நவீனம்.

'செம்மீன்' மனிதனின் நம்பிக்கையை 'ஆதர்சங்களை' கொண்டு எழுதப்பட்டது. மனிதன் என்று சொல்லுகையில், தகழியின் சிருஷ்டிகளைப் பொறுத்தவரையில் இல்லாதவர்கள் என்ற பொருள் தான். தகழிக்கு அவர்களைப் பற்றித்தான் தெரியும்! 'செம்மீ'னில் கேரளத்தின் மத்திய பகுதியின் கடற்கரை வாசிகளான மீனவர்களின் வாழ்க்கையையும், அவர்களின் முக்கிய

தொழிலாகிய செம்மீன் விவசாயத்தையும் படம் பிடித்துக் காட்டுகிறார். இந்த நவீனத்தில் ஒரு விசேஷம் என்னவென்றால், தகழி கோணல் வாழ்வின் சித்தரிப்பினிடையே அழகான ஒரு காதல் கதையையும் நடத்திச் செல்கிறார். இனி நவீனத்தைப் பார்ப்போம்:

**கறுத்தம்மா** தனக்குக் கூலியாகக் கிடைக்கும் மீன்களை **பரீதுகுட்டி**யிடம் தான் விற்க வருவாள். அவனுக்கு, கூலி மீன் வாங்கிச் சேகரித்து அனுப்பும் தொழில். இளைஞன். கறுத்தம்மைக்கும் கனவுகளின் காலம். அந்த வியாபார உடன்பாடும், பக்கத்துவீட்டு வாசமும் இருவருக்கும் பிணைப்பை ஏற்படுத்தி வைக்கின்றன.

கறுத்தம்மையின் தந்தையும் மற்ற எண்ணற்றவர்களைப்போல கூலிக்கு, கடலுக்குப் போவான். அதில் அன்றாடம் கிடைக்கும் கூலியைவிட தொல்லையும் துயரமும் தான் அதிகம். சொந்தமாக படகொன்று வாங்கிவிட்டால், வாழ்வை வளமாக்கி விடலாம், பெண்ணுக்கு மணம் செய்து விடலாம், பெரிய செல்வந்தனாகி விடலாமென்பதெல்லாம் அவனது மனக்கோட்டைகள். தினக்கூலி அன்றாட சிலவுகளுக்கே போதவில்லை. இவ்வளவிற்கும் கறுத்தம்மையும் அவள் தாயும் வேலை செய்யத்தான் செய்தனர்.

கறுத்தம்மா, பரீதுகுட்டியைச் சந்திக்கும்போதெல்லாம் குடும்பத்தின் இந்த துயர நிலையையும் தந்தையின் ஆசைகளையும் அவனிடம் சொல்லுவாள். அவள் குடும்பத்துக்கு உதவி செய்ய வேண்டுமென்று பரீதுகுட்டிக்கும் ஆசைதான். ஆனால் அவனுக்கும் ஆத்திரக்காரனான ஒரு தந்தை இருந்தான். கனவெல்லாம் பாழ்!

பரீதுகுட்டிக்கும் கறுத்தம்மையின் தகப்பனுக்கும் உடன்பாடு ஏற்பட்டது. அவன் சிறுகச் சிறுக கறுத்தம்மையின் தந்தைக்கு உதவினான். அவன் சொந்தமாக படகு வாங்கி சமுத்திர வேட்டைக்குப் போகும் நாளும் வந்தது. இதில், கறுத்தம்மைக்கும், அவள் தாய்க்கும், சின்னஞ்சிறு தங்கை பஞ்சமிக்கும் கொண்டாட்டம்; பரீதுகுட்டிக்கும்தான்!

பயல், பெண்ணைக் காட்டி, துலுக்கப் பையனை மயக்கி, படகு வாங்கி விட்டான் என்று கறுத்தம்மையின் தந்தையுடன் கூலி வேலை செய்த மற்றவர்களுக்குப் பொறாமை!

கறுத்தம்மையின் தந்தை ஒப்பந்தப்படி முதல் அறுவடையை பரீதுகுட்டிக்கே விற்றான். பரீதுகுட்டிக்கும் அதில் நல்ல லாபம். இந்த லாபத்தின் மகிழ்ச்சியை கறுத்தம்மையுடன் கடற்கரையிலே, நிலவின் ஒளி அலைநுரையை முத்தாக்கிய இரவிலே பகிர்ந்துக் கொண்டபோது பரீதுக்கு கனவெல்லாம் நினைவானது போல நிம்மதி!

நிலவின் அந்தக் குளிரான நாட்கள் நீண்டு போயின. கறுத்தம்மையின் தந்தை, புதிய காசின் கலகலப்பில் ஒப்பந்தத்தை மீறி நடக்கலானார். அத்துடன் கறுத்தம்மைக்கும் வேறு இடத்தில் திருமண ஆலோசனை நடந்தது!

**பழனி**—கறுத்தம்மையின் தந்தையின் படகில் துடுப்பு தள்ள வந்த ஊரும் யாருமற்ற இளை

ஞன். நல்ல உழைப்பாளி. வம்பு தும்பற்றவன். 'கடல்பிள்ளை'களின் சூதும்,வாதும்,குடிப்பழக்கமும் அவனுக்கில்லை! கறுத்தம்மைக்கு அவன் எல்லா வகையிலும் ஏற்றவன் என்ற அவளது தந்தையின் அபிப்பிராயத்தை- 'கடற்பிரமுகர்'களும் — அவள் தாயும், தந்தையும், எல்லோரும் ஒப்புக் கொண்டனர்.

கறுத்தம்மையும் பரீதுகுட்டியும் கடைசியாகச் சந்தித்த இரவு விடிந்த பகற்பொழுதில், பழனி அவள் கழுத்தில் மாலையிட்டான். கடல் பூமியின் தலை மூத்த செல்வர்களெல்லாம் வந்திருந்து ஆசி கூறினர்.

கடலின் மக்களுக்கு கடல் தாயிடம் புனிதமான பக்தியிருந்தது. அவள் மடியிலிருந்து பொன் வாரியெடுக்கும் எவருமே களங்கமற்றவர்களாக இருக்கவேண்டும். கடலுக்குப் போகும் ஆண் மகன் பரிசுத்தவானாக இருப்பது, வீட்டிலிருக்கும் அவன் மனைவியைப் பொறுத்தது. அவள் ஒரு களங்க விசாரங் கூட தீண்டப்படாதவளாக இருக்க வேண்டும். மனதில் தீட்டு விழுந்துவிட்டதென்றால் கடலில் போனவன் திரும்ப மாட்டான் என்பதற்கு எத்தனையோ அனுபவ சாட்சியங்கள் உண்டு!

கட்டிவைத்த நியதிகளுக்குப் புறம்பாக நடக்கவேண்டுமென்று கனவில்கூடக் கருதியவளல்ல, கறுத்தம்மா. ஆனால், நிலவு இரவுகளில், அலைகளின் ஓசை மட்டுமான அமைதியில் பரீது குட்டியின் பழைய பாடல்களின் அடிகள் மிதந்துவருகையில்,கறுத்தம்மா தன்னை மறந்துபோவாள்.

...கடல்தரை நியதி மீறிய அந்தப் பெண்ணைப் பற்றி எல்லாரும் பேசிக்கொண்டனர். பரீதுகுட்டியும், அவளும் கள்ளக் காதலர்கள் என்று யாரோ பழனியின் காதிலும் முணு முணுத்தனர்!

...பழனி கறுத்தம்மையை நம்பினான். பிறந்த குழந்தையின் கள்ளமற்ற முகத்தில் தன் பிரதிபிம்பத்தைக் கண்டு,பழனி கறுத்தம்மையை நம்பினான். அவளும் பரீதை மறந்த காலம். ஏனெனில், வாழ்வின் ஏமாற்றம், வியாபார நஷ்டம் காரணமாக அவன் தொலைவில் எங்கோ போய்விட்டிருந்தான்.

காலம் பின்னும் போயிற்று. படகுவைத்து வியாபாரம் செய்த கறுத்தம்மையின் தந்தை எவ்வளவோ மாறிப்போனார். புதிதாகக் குலுங்கிய பணத்தின் கலகலப்பில் மனைவியை மறந்து மற்றொருத்தியோடு தொடர்பு கொண்டான். சந்தைக்கு மீன் சுமந்து விற்றும், கூலி மீன் வாங்கியும் எவ்வளவோ கஷ்டப்பட்ட பின்னர், அவரது அந்த மனைவி, சின்னஞ்சிறு பெண்

## அப்படியானால்...?

முடிவெட்டிக் கொள்ள சலூனுக்கு வந்தவர் சொன்னார்:

'சென்ற முறை இந்தக் கடையில்தான் நான் வெட்டிக்கொண்டேன் என்று நினைக்கிறேன்!'

சலூன்காரன் ஆத்திரத்தோடு சொன்னான்:

'இருக்கமுடியாது; என் கடை திறந்து இரண்டு ஆண்டுகள் தான் ஆகிறது!'

பஞ்சமியைத் தனியாக விட்டு விட்டு கடல் அன்னைமடியில் போய்ச் சேர்ந்தாள்!

...ஆதரவற்ற பஞ்சமி தொலை வில் அக்காள் கறுத்தம்மையுடன் வந்து சேருகிறாள். பஞ்சமி வந்த இரவிலே, பழைய தொடர்பின் சோகத்தையும் சுமந்து கொண்டு பரீதுகுட்டியும் வரு கிறான். பழனி கடலுக்குப் போய் விட்ட அந்தத் தனிமையிலேகதை கள் பரிமாறப்பட்ட இதயங்கள் கண்ணீரில் நனைகின்றன. பழனி யுடன் நடத்திய வாழ்வின் இன் பம் பஞ்சமியின் தாலாட்டிலே நிம்மதியாக உறங்கிக்கொண் டிருந்தது!

கறுத்தம்மைக்குப் பயமாகஇருந் தது.மழையும் புயலுமாக கடலில் கொந்தளிக்கும் நாள் அது.பழனி அன்றும் சிரித்துப் பேசி, குழந் தையை முத்தமிட்டு, அவளிடம் பிரியா விடைபெற்றுத்தான் கட லுக்குப் போனான். செய்துவிட்ட தவறு கறுத்தம்மை மனதில் உறுத்தியது. கடலின் பெண் தவறிவிட்டால், கடல் கொந் தளித்து, கரையைப் புரட்டி நரக மாக்கிவிடும் என்பது நீதி! அன்று ஏனோ கறுத்தம்மையின் மனம் கொந்தளிக்கும் கடலாக இருந்தது.

கரிய இரவு. பஞ்சமியும் குழந் தையும் உறங்கிய பின்பு பரீது குட்டி வந்தான். வந்தவன் தான் பெரு மழையையும் கொண்டு வந்தானோ என்னமோ? பெரிய மழை. மின்னல்கள் அலைகளின் ஓசை பேரிரைச்சலாகக் குமு றின. மின்னல்கள் கடலையே புரட்டி மறிப்பதுபோல இடி வெட்டு...பழனி படகோடு கடலுக்குப் போயிருந்தான்.....

நியதி மறந்து கறுத்தம்மா பரீதின் அணைப்பில் மயங்கினாள்.

...பழனி கடலின் கொந் தளித்த இதயத்தோடு போரா டிக்கொண்டிருந்தான். படகு போயிற்று. பற்றிய துடுப்புக் கோல் போயிற்று....கைகளின் வேகம் குறையுமட்டும் சுழற்றும் அலைகளோடு போராடிப் பார்த் தான்...தவிப்பு தளர்வாகிய போது, சீறிய அலைகள் அவனை விழுங்கி ஆழத்தில் அழுத்தின. பழனி அமிழ்ந்து அமிழ்ந்து போகிறான்....குமிழிகள்....நுரை கள்...

...கரையை, கடல் விழுங்கி விட்டது.எங்கும் வெள்ளக்காடு. சிற்றலைகள் தெளிந்த அமைதி யில் ஆட்டம் போடுகின்றன. அலைகள் ஒதுக்கிய மேட்டில் ஒரு வரையொருவர் தழுவியவாறு பரீதுகுட்டியும் கறுத்தம்மையும் இறந்துகிடந்தனர்!



'செம்மீன்' கதை முடிகிறது. வருத்த சமுதாய நியதிகளைக் கேலி செய்யும் ஆசிரியர், இந்தக் கதையின் முடிவில் சிறிதளவு தவறிவிடுகிறார். நம்பிக்கையை நம்பிக்கையாகவேஇருப்பதற்கே அவர் முடிவு உதவுகிறது.இந்தத் தவறு ஏன் தான், தகழியென்ற புரட்சிக்காரனுக்கு ஏற்பட்டதோ? குறையை மறந்து சிருஷ்டியின் பொலிவைப் பார்க்குமிடத்து, ஷேக்ஸ்பியரின் ரோமியோ ஜூலியட் முடிவு தந்த சோகக்குமிழிகள்போல தகழியின்'செம்மீன்' முடிவும் படிப்போர்மனதைஅழவைக்கின்றன. இந்த நவீனத்தில் மீனவர்களின் அன்றாடப் பிரச்சினைகள், பேச்சு வழக்கங்கள், சச்சரவுகள், துயரங்கள், நம்பிக்கைகள், ஆசாரங்கள்,செயல்முறைகள் எல்லாவற்றையும் நாம் அறியமுடிகிறது. பழனி-முடிவில் கடலோடு நடத்தும்போராட்டம், மேதைப்பரிசு வாங்கிய 'ஹெமிங்வே'யின் 'கிழவனும் கடலும்' சம்பவங்களை நினைவூட்டுகிறது. கறுத்தம்மா, பரீதுகுட்டி இவர்களின் இதயம் தொட்ட காதலை சித்தரிக்குமிடத்தில்,தகழி தனித்தன்மை பெற்றுவிடுகிறார். பஞ்சமி மறக்கமுடியாத சின்ன அமைப்பு !

பொழுதுபோக்கு ரசனைக்கென உருவாக்கப்பட்ட இலக்கியத்தில் வாழ்வுப் பிரச்சினைகளைக் கதையாகக் காட்டிய வாழும் கலைஞர்கள் வரிசையில் -மலையாள இலக்கியத்தில் தகழி மறக்கமுடியாத ஒருவர் ! ★

## நல்வாழ்க்கைத் தேவைகள்

நல்வாழ்க்கை அல்லது தகுதியான வாழ்க்கை என்று சொல்லக்கூடிய ஒரு வாழ்க்கையை ஒவ்வொரு மனிதனும் நடத்த வேண்டுமானால், அவனுக்கு முதலாவது, ஆரோக்கியமுள்ள தேகம் வேண்டும்; இரண்டாவது, சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் இவைகளோடு ஒட்டிச் செல்லக்கூடிய மனம் வேண்டும்; மூன்றாவது, ஆரோக்கியமுள்ள தேகத்திற்கும், சுறுசுறுப்பான மனத்திற்கும் இயைந்த தொழில் இருக்கவேண்டும்; நான்காவது, வசிப்பதற்கேற்ற அழகான உலகம், அதாவது அழகான சூழ்நிலை இருக்கவேண்டும்.

இந்த மாதிரியான வாழ்க்கை நிலையைத்தான் ஒவ்வொரு நாகரிக மனிதனும், எல்லாக் காலங்களிலும் தன்னுடைய இலட்சியமாக வைத்துக்கொண்டிருந்தான். இந்த நிலைமையை மனிதன் அடையக்கூடாதபடி ஒரு நாகரிகம் தடுக்குமேயானால் அந்த நாகரிகம் மனிதனை மகிழ்ச்சியாக இருக்கக்கூடாதென்று தடுப்பதாகத் தான் அர்த்தம். ஆனால் நாம் அப்படி விடக்கூடாது !

**—வில்லியம் மாரிஸ்.**

[இலக்கு இன்றி இயங்கிக்கொண்டிருந்த காலத்தின் ஓட்டத்தில்தான் எத்தனை எத்தனை மாறுதல்கள்! அணுவைச் சிதைக்கமுடியாது என்ற கருத்தை வலியுறுத்தி நிறுவிச் சென்ற டால்டன், ஐன்ஸ்டீனிடம் தோற்றுப் போனார். அணு சிதைந்தது. விளைவு, இலக்கியம் பல புதுமைகளைக் காணத் தொடங்கியது.

அறிவியல் கலந்த இலக்கியங்களை உருவாக்கிய பெருமை, மேல்நாட்டு அறிஞர்களைச் சாரும். வால்டேர் புனைந்த 'Micromegas', அட்டர்லியின் 'புவியிலிருந்து திங்களுக்கு' (From earth to the Moon) பேகனின் 'நியூ அட்லாண்டிஸ்' (New Atlantis) ஆகியவை குறிப்பிடத்தக்கன. இவர்களிலும், இவைகளிலும் முதலிடம் பெறத்தக்கவரும், தக்கதுவும், எச். ஜி. வெல்சும், அவர் எழுதிய 'திங்களில் முதல் மனிதன்' (First man in the Moon) என்ற நூலும் ஆகும்.

அறிவியல் ஊடாடும் வெல்சின் சிறந்த கற்பனையில் உருவாகிய ஒன்றுதான் 'இழந்த எடை' (Truth about the Pyecraft) என்ற இச்சிறு கதை. கனவுகளும், கற்பனைகளும், நனவில், நடைமுறையில் செயல்படுத்தும் நிலைக்கு அறிவியல், அணுவியற்படியில் நிற்கும்போது, தன் கற்பனையில் கண்ட பைகிராப்ட்டின் நிலையை, நினைவிலும் காணமுடியும் என்பது வெல்சின் நம்பிக்கைபோலும்!

இக்கதை, பொறிகளின் துணையின்றி மனிதன் தானே பரவெளியில் புவியீர்ப்பு (Gravitational force) ஆற்றலைவென்று மிதக்கமுடியும் என்ற நம்பிக்கையை மையமாகக்கொண்டு சுழல்கிறது.]

# இழந்த எடை

அவனுக்கும் எனக்கும் நடுவில் சில அடி தூரம்தான் இடைவெளி இருந்தது. என்னையறியாமல் என் தோள்ப்பட்டையைத் திரும்பிப் பார்க்கும்போதெல்லாம், அவன் என்னையே பரிதாபமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். 'தயவுசெய்து உண்மையை ஒருவரிடமும் சொல்லி விடாதே, பார்மலின்' என்று என்முன் மண்டியிட்டுக் கெஞ்சுவதுபோலிருந்தது அவன் பார்வை. வேறு எதைப் பற்றியாவது யாரிடமாவது பேசிக் கொண்டிருந்தால்கூட, அவன் உள்ளம் என்மீது சந்தேகப்பட்டுக்கொண்டிருந்தது.

அதற்காக அந்த உண்மையை மூடிமறைத்து ஒளித்துவைக்க நான் விரும்பவில்லை. உண்மையைக் கூறப்போய் அவனுக்குச் சங்கடத்தைக் கொடுக்கவும் என் உள்ளம் இடந்தரவில்லை. அதைவிட எழுதி விடுகிறேன்; அவனுக்குத் தெரியாமல் படித்துக்கொள்ளுங்கள். ஆனால் ஒன்று; அந்த உண்மையின் பின்னணியில் இருக்கும் நிகழ்ச்சி நம்பக்கூடியதாக இல்லாவிட்டாலும், அறிவியல் உலகில் நடக்க நேர்ந்தால்...



அந்த உண்மையில் ஒளிந்திருக்கும் நிகழ்ச்சியை எழுதுவதற்குமுன் பைகிராப்டை உங்களுக்கு அறிமுகப்படுத்தியாக வேண்டும். சதையும், தசையும் சேர்ந்து உருவான ஒரு பகுத்தறிவு விலங்குதான் பைகிராப்ட். உண்டதிலோ, பருத்துக் கொழுத்துப் பெருத்த உருவத்திலோ அவனை வென்றவர் லண்டனிலேயே ஒருவரும் இல்லையென்று துணிந்து சொல்லலாம்.

மூலம் :
எச். ஜி. வெல்ஸ்

தமிழில் :
இரா. கோதண்டராமன்

சில நாட்களுக்கு முன்புதான் அவன் இருந்த அந்த சங்கத்தில் நானும் ஓர் அங்கத்தினனுகச் சேர்ந்தேன். அப்பொழுதுதான் அவனுடன் தொடர்பு கொள்ளும் வாய்ப்பும் ஏற்பட்டது எனக்கு. தொல்லை கொடுப்பதற்கென்றே வாழும் சில மனிதப் பிறவிகளுள் அவனும் ஒருவன் என்பதைப் பிறகுதான் உணர்ந்தேன். நல்ல காலமாக அவன் பேச்சில்தான் நான் தொல்லையைக் கண்டேன்.

என்னைச் சந்திக்கும்போதெல்லாம் தன்னைப்பற்றி ஒரு முழு விளக்கம் கொடுக்கும்வரை அவன் உள்ளம் அமைதியடைவதில்லை. தன்னுடைய உருவ அமைப்பைப் பெருக்கிக் கொள்ள அவன் எடுத்துக்கொள்ளும் முயற்சிகள், அதற்காகப் பிறரிடம் தான் கேட்ட யோசனைகள், பிறர் தன்னிடம் சொன்ன யோசனைகள் இவற்றைப்பற்றி மணிக் கணக்கில் சுவை குன்றுமல் விவரிப்பதில் ஒரு தனி விருப்பம் அவனுக்கு. எப்படியோ ஒரு நாள் பைகிராப்ட்டுக்குத் தன்னுடைய உருவ அமைப்பின் மீதே வெறுப்பு ஏற்பட்டுவிட்டது எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

அன்று எதைப்பற்றியோ பேச வந்த பைகிராப்ட், மேலைநாட்டு மருத்துவ நூல்களுக்கு மதிப்பீடு கொடுக்கும் முறையில் அவற்றைப்பற்றி ஒரு குறை புராணமே பாடிவிட்டான். கீழைநாட்டு மருத்துவ நூல்களைப் பற்றி மதிப்புரை வழங்க அவனுக்கு அவ்வளவு அனுபவமும் துணிச்சலும் இல்லை! ஏன் அவன் அப்படிப் பேசினுன் என்பதைப் பிறகுதான் நான் புரிந்துகொண்டேன். தன்னுடைய பருத்துப் பெருத்த உடலமைப்பை இளைக்கச் செய்யும் வழி வகைகள் எதுவும், மேலைநாட்டு மருத்துவ நூல்களில் காணப்படவில்லை என்ற குறை தென்பட்டது அவன் பேச்சில். ஆனல் அதை வெளிப்படையாகச் சொல்லிக்கொள்ள விரும்பாமல், எடைகுறைப்பைப்பற்றித்தான்என்னுடன் பேசிக்கொண்டிருந்தான். எடை குறைந்துவிட்டால் பெருத்த உடலும் சுருங்கிவிடும் என்ற எண்ணம் போலிருக்கிறது அவனுக்கு. உருவ மாற்றத்துக்கும், உள்ள எடை குறைவதற்கும் தொடர்பில்லை என்பதை பைகிராப்ட் இன்னும் புரிந்து கொள்ளவில்லை.

இதற்கிடையில் கீழை நாட்டைச் சேர்ந்த என் தாயின் தாயைப்பற்றியும், மருத்துவத் துறையில் அவளுக்கிருந்த அனுபவத்தைப்பற்றியும், அவள் விட்டுச் சென்ற மருத்துவக் குறிப்புகள் என்னிடம் இருப்பதைப் பற்றியும் அவன் எப்படியோ தெரிந்து கொண்டான். அதிலிருந்து அவன் என்னையே வளைய வளைய சுற்றி வந்தான். குறிப்புகள் தாம் என்னிடம் இருந்தனவே தவிர, எனக்கு அவற்றைப் பயன்படுத்தும் நெறியோ முறையோ ஒன்றுமே தெரியாது. ஆனல் அவற்றின் விளைவுகள் எத்தகையவை என்பதுமட்டும்எனக்குத் தெரியும். விளைவு எத்தகையதாக இருந்தாலும் எதிர்பார்க்கும் பலனைக் கொடுக்கக்கூடியதாக இருந்தால்,

அதற்குத் தன்னைக் கருவியாக்கிக் கொள்ளவும் தயாராக இருந்தான் பைகிராப்ட். எனக்கும் எடையைக் குறைக்கும் அந்தக் குறிப்பைக் கொடுப்பதில் தடையில்லை. ஆனால் அதன் விளைவு விபரீதமாகி விட்டால்... ?

"இதோ பார் பைகிராப்ட்! குறிப்பைக் கொடுப்பதில் எனக்கொன்றும் தடையில்லை; ஆனால் அதை நான் உன்னிடம் கொடுத்ததைப் பற்றியோ, அதன் விளைவைப் பற்றியோ எனக்கும் அதற்கும் இருக்கும் தொடர்பைப் பற்றியோ ஒருவரிடமும் சொல்லமாட்டேன் என்று நீ உறுதி கொடுக்கும்வரை..."

"நிச்சயமாக ஒருவரிடமும் சொல்ல மாட்டேன். என்னை நீ உறுதியுடன் நம்பலாம், பார்மல்!"

அதற்குப் பிறகுதான் குறிப்பை அவனிடம் கொடுத்தேன். குறிப்பை அவன் பிரித்துப் பார்த்தபொழுது, அதைப் படிக்க முடியாமல் திணறினன். எனக்கே சரியாகத் தெரியாதது அந்தக் கீழைநாட்டு மொழி. அவனுக்குப் புரிந்தவரை அந்தக் குறிப்பை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கொடுத்தேன்.

இரண்டுவாரம் கழித்து என்னிடம் வந்தபோது அந்தக் குறிப்பையும் தன்னுடன் கொண்டுவந்திருந்தான் பைகிராப்ட்.

"பார்மலின்! உன்னுடைய மொழி பெயர்ப்பில் ஏதோ தவறு இருக்கிறதென்று நினைக்கிறேன். குறிப்பில் கூறியிருந்தபடி மருந்தை முறையோடு உட்கொண்டேன்; ஆனால் இன்னும் ஒரு பவுண்டுகூடக் குறையாமலிருக்கிறேன்!" – இப்பொழுதும் அவன் உடற்பருமன் என்ற சொல்லைப் பயன்படுத்தாமல் எடை என்ற சொல்லைத்தான் பயன்படுத்தினன். அவன் என்னிடம் கொடுத்த அந்தப் பட்டியலை ஒருமுறை படித்துப் பார்த்தேன்.

"பைகிராப்ட்! நான் உன்னிடம் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன். என் பாட்டியின் குறிப்பில் இருக்கும் ஏதாவது ஒரு பொருளின் தன்மை குறிக்கப்படாமலிருந்தால், மிக மிக மோசமானதைத்தான் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று பொருள். முட்டை என்று இந்தக் குறிப்பில் இருக்கிறது. நீ அழுகி நாற்றமெடுத்த முட்டையைத்தான் பயன்படுத்தியிருப்பாய் என்று நினைக்கிறேன்!"



"மறந்துவிட்டேன் பார்மலின்! அப்படியானல் அழுகியதைத்தான் பயன்படுத்த வேண்டுமா?" – வியப்பும் வினவும் தேங்கியிருந்தது அவன் பேச்சில்.

"இதற்குமட்டுமல்ல; தன்மை கூறப்படாத அவ்வளவு பொருள்களையும் இப்படித்தான் எடுத்துக் கொள்ளவேண்டும்!"

பட்டியலில் சில மாற்றங்களைச் செய்துகொடுத்த பிறகு அவன் போய் விட்டான்.



ஒரு மாதம்வரை அவன் எடையிலோ உடற் பருமனிலோ ஒரு மாற்றமும் காணப்படவில்லை. எதிர்பார்க்காத நிலையில், ஒரு நாள் திடீரென்று அவனிடமிருந்து அவசரத் தந்தி ஒன்று வந்தது.

**"பார்மலின்! உடனே விரைந்து வரவும்!"**



தந்தியைப் பார்த்ததும் எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஏதோ எதிர்பாராத ஒன்று நடந்துவிட்டிருக்கிறது என்பதை மட்டும் யூகித்துக்கொண்டு, சங்கத்திலிருந்து அவன் முகவரியை வாங்கிக்கொண்டு உடனே புறப்பட்டேன்.

புளூம்ஸ்பரி என்ற இடத்தில் ஒரு வீட்டின் மேல் மாடியில் குடியிருந்தான் பைகிராப்ட். நான் அவன் இருப்பிடத்துக்குச் சென்றபோது, அவன் இருந்த அறைக் கதவு பூட்டிவிட்டிருந்தது. அருகில் வாட்டத்துடன் நின்றுகொண்டிருந்த வேலைக்காரியிடம் கதவைத் திறந்துவிடும்படி சொன்னேன்.

"நேற்றுக் காலையில் உள்ளே சென்று உள் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டவர், இன்னும் கதவைத் திறக்காமலிருக்கிறார்!"

வேலைக்காரி சொன்ன பதில், பைகிராப்ட் தற்கொலை செய்துகொண்டானோ என்று கூட என்னை நினைக்கத்

தூண்டியது. ஆனால் அடுத்து அவள் சொன்ன பதில் விந்தையாக இருந்தது எனக்கு.

"நேற்றிலிருந்து அவரைப் பார்க்காவிட்டாலும், அவர் உயிரோடு இருக்கிறார் என்பதை மட்டும் என்னால் கூறமுடியும். எப்பொழுதுமே மனித அளவைவிட அதிகமாகச் சாப்பிடுபவர் இரண்டு நாட்களாக இன்னும் அதிகமாகச் சாப்பிட விரும்புகிறார்!"

பேசிக் கொண்டிருக்கும்போதே உள்ளே இருந்து ஓர் ஒலி வந்தது. நான் வந்திருப்பதைப் பைகிராப்ட் தெரிந்துகொண்டான்.

"பைகிராப்ட்;நான்தான்! கதவைத் திற!"

"கதவைத்திறப்பது இருக்கட்டும்; முதலில் அந்த வேலைக்காரியை வெளியில் போகச் சொல்!"

எனக்கு அவன் பேச்சு புரியாத புதிராக இருந்தது. வேலைக்காரியை நான் பார்த்தபொழுது அவள் ஒன்றும் பேசாமல் அந்த இடத்தைவிட்டு அப்பால் சென்றுவிட்டாள்.

"அவள் போய்விட்டாள். கதவைத் திற, பைகிராப்ட்!"

அதற்குப் பிறகு வெகுநேரம் வரை அவன் கதவைத் திறக்கவேயில்லை. குருடன் இருட்டில் தடுமாறுவதைப் போல், அவன் கைகள் கதவைத் திறக்க அலைந்துகொண்டிருந்த ஒலி மட்டும் எனக்குக் கேட்டது. கொஞ்ச நேரம் கழித்து பைகிராப்டின் குரல் கேட்டது.

"திறந்துகொண்டு உள்ளே வா, பார்மலின்!"

உள்ளே சென்றதும் எதிரில் நின்று வரவேற்பான் என்றுதான் நான் எதிர்பார்த்தேன். உள்ளே இருந்த சாமான்கள் இருக்கவேண்டிய இடத்தில் இல்லாமல், அலங்கோலமாகக் கிடந்த காட்சிதான் முதலில் என் கண்களில் தென்பட்டது. அந்த சிறிய அறையில் விழிகளை அகல விரித்துக்கொண்டு அவனைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தேன். ஆனால் அவனை அந்த அறையிலேயே காணவேயில்லை.மாயமந்திர தந்திரங்களில் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஒருவேளை அவனுக்கு அவை தெரிந்திருக்குமோ!

யோசனையில் ஆழ்ந்துவிட்ட எனக்கு,மீண்டும் பைகிராப்டின்குரல் கேட்டது:

"என்ன பார்மலின், யோசிக்கிறாய்? முதலில் கதவை மூடு; அவள் வந்துவிடப்போகிறாள்!"

திடுக்கிட்டு மேல் கூரையைப் பார்த்தபொழுது, பைகிராப்ட் மேலே தொங்கிக்கொண்டிருந்தான்.இதைப் பார்த்தபோது முதலில் எனக்குச் சிரிப்புதான் வந்தது.

"இது என்ன விளையாட்டு, பைகிராப்ட்! ஏன் அங்கே தொங்க வேண்டும்? உன்னுடைய வயதுக்கும் ஒத்துவரக்கூடியதா இந்த தேகப்பயிற்சி?"–அப்பாவித்தனமாக நான் பேசியது அவனுக்கு இன்னும் வேதனையாக இருந்தது. ஆர்வமும் ஆத்திரமும் முகத்தில் வழிந்தோட என்னைப் பார்த்தான்.

"பார்மலின், உனக்கு ஒன்றும் தெரியாது. இப்பொழுது நான் விரும்பினால்கூட கீழே வரமுடியாது. ஆம், உன்னுடைய பாட்டியின் மருந்து புவியீர்ப்பு (Gravitational Force) ஆற்றலையும் வென்றுவிட்டது!"

பைகிராப்ட் சொன்னது முதலில் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அவன் தொங்கிக்கொண்டிருந்த இடத்தை மீண்டும் உற்றுப் பார்த்தேன். பைகிராப்ட், இவ்வளவு நேரமும் எதையோ பிடித்துக்கொண்டிருந்தான் என்றுதான் நான் நினைத்தேன். ஆனால் எந்தப் பிடிப்புமில்லாமல் அவனுடைய கைகள் கூறையின் மேல்தளத்தில் அடிப்பகுதியில் முட்டிக்கொள்ள, இலவம் பஞ்சு நிலையில் அவன் இருப்பதைப் பிறகுதான் புரிந்துகொண்டேன்.

கீழே வருவதற்கு, பிறந்த குழந்தை கைகால்களை உதறிக் கொள்வதைப்போல, அந்தரத்தில் நீச்சல் போட்டுக் கொண்டிருந்தான் பைகிராப்ட். கடைசியாகக் கீழே வர

ஒரு தெருவில், ஒன்றன்பின் ஒன்ருக இரண்டு மோட்டார் வண்டிகள் போய்க்கொண்டிருந்தன. முன் வண்டியை பெண் ஓட்டினுள்; பின் வண்டியை ஓட்டியவன் ஆண்.

சிறிது தூரம் கடந்ததும் பின் வண்டிக்கு எந்தச் ஸைகையும் காட்டாமல் அந்தப் பெண் ஒரு சந்திற்குள் வண்டியைத் திருப்பினுள். பின்னல் வந்தவன், மிகவும் சாமர்த்தியமாக ஆபத்து ஒன்றும் இல்லாமல் சமாளித்துக்கொண்டான். பிறகு மிகவும் கோபமாக அவளிடம் சென்று,'ஏன் நீ வண்டியைத் திருப்பும் போது எனக்கு அறிவிக்கவில்லை?' என்று கேட்டான்.

அவனை அலட்சியமாகப் பார்த்துவிட்டு, அந்தப் பெண் சொன்னுள் :

'இது என்ன அசட்டுக் கேள்வி! எத்தனையோ காலமாக நான் அந்தச் சந்தில்தான் திருப்புவது வழக்கம்!'

முடியாமல் அவன் அயர்ந்துவிட்ட நிலையைக் கண்டபோது எனக்கே பரிதாபமாக இருந்தது.

'எடையைக் குறைத்துக்கொள்ள விரும்பினேன்; இப்பொழுது முழு எடையும் குறைந்துவிட்டது' என்று கூறியபோது, அவன் பேச்சில் ஒரு வித் சலிப்பும் வெறுப்பும் காணப் பட்டது. இப்பொழுதும் அவன் எடை என்ற சொல்லைத்தான் குறிப் பிட்டான். உண்மையில் அவன் விரும்பியது தன்னுடைய உடற் பருமன் குறையவேண்டும் என்பது தான். ஏனே அதை வெளிப்படை யாகச் சொல்ல அவன் வெட்கப் பட்டான்.

மெல்ல கால்களைப் பிடித்து இழுத் துக் கீழே கொண்டு வந்தேன் அவனை. அவனுடைய உடையெல் லாம் ஒரே சுண்ணும்பு மயமாக இருந்தது. அதைக்கூடக் கவனிக் காமல் எங்கே மறுபடியும் மேலே போய்விடுவோமோ என்று பயந்தான் அவன்.

''பார்மல்! அதோ அந்த மேசை என்னைவிட அதிக பளுவாக இருக்கும். அதன் கீழே என்னை விட்டுவிடு!''

அவன் சொன்னதைப் போலவே மேசையின் அடியில் அவனை இருக் கச் செய்தேன். காற்றடித்த பலூனைக் கயிற்ருல் கட்டி வைத்திருப் பதைப்போல, மேசையில் முட்டிக் கொண்டிருந்தான், பைகிராப்ட்.

பிறகு தன்னுடைய அனுபவத்தைக் கூறத் தொடங்கினுன் :

''உன்னுடைய பாட்டியின் குறிப் பில் இருந்தபடி மருந்தைச் செய்து உட்கொண்டேன். அழுகி நாற்ற மெடுத்த பொருள்களின் பிழிவில் உருவான அந்த மருந்தை, இப் பொழுது நினைத்துக் கொண்டாலும் எனக்கு மயக்கம் வருகிறது. முதலில் ஒரு முணர் சுவைத்தேன். கொஞ் சம் எடை குறைவதுபோலிருந்தது. அதிக எடை குறைந்தால், பருமனும் குறைந்துவிடும் என்று எண்ணி அந்த மருந்து முழுவதையும் ஒரே தடவை யில் குடித்துவிட்டேன். அதன் விளைவுதான் இப்பொழுது காற்றில் மிதந்து கொண்டிருக்கிறேன்!''

''ஆம், பைகிராப்ட்! வெளியில் கூட போகமுடியாத நிலையில் நீ இருக்கிருய். தவறி வெளியில் வந்து விட்டால், பிறகு உன்னைக் கண்டு பிடிக்கவே முடியாது!''-நான்சொல் லிக் கொண்டிருக்கும் போதே பை கிராப்ட் ஒரு பக்கமாகச் சாய்ந்தான்.

அவ்வளவுதான்; அடுத்த கணம் மேசை ஒரு பக்கம் சாய்ந்தது. பக்கத்திலிருந்த நாற்காலி ஒரு பக்கம் விழுந்தது. அவனுடைய கால்கள் என் முகத்தில் விளையாட, நேராக தன்னுடைய 'மாளிகை'க்குச் சென்றுவிட்டான் பைகிராப்ட். இந்த முறை, என்னையும் என்னுடைய பாட்டியையும் வாயாரத் திட்டினுன்.

''பைகிராப்ட்! நான் பலமுறை எச்சரித்தேன். அப்பொழுதெல்லாம் **விளைவைக்** காதில் போட்டுக்கொள் ளாமல், இப்பொழுது என்னுடைய பாட்டியைத் திட்டமட்டும் உனக்கு என்ன உரிமை இருக்கிறது?''— ஆத்திரத்தை அடக்க முடியாமல் கூவினேன். ஆனால் அடுத்த கணம் ஆத்திரம் அனுதாபமாக மாறியது. அவன் நிலைக்கு ஏதாவது ஒரு வழி கூறியாக வேண்டிய நிலையில் இருந் தேன்.

''இருக்கும் நிலையை இனி மாற்ற முடியாது. இதற்கேற்ப எல்லா வற்றையும் மாற்றியமைத்துக்கொள் வதைத் தவிர எனக்கு ஒன்றும் வழி தோன்றவில்லை. கீழே இருந்தபோது கால்களால் நடந்ததைப் போலவே, இப்பொழுது மேலே கைகளால் நடப் பது ஒன்றும் கடினமில்லை, பை கிராப்ட்!''

''சரி, தூங்குவதற்கு...?''

''கீழே உன் உடலை எந்தெந்த இயக்கத்திற்கு உட்படுத்தினாயோ, அவ்வளவுக்கும் இப்பொழுதும் அது விருப்பம்போல் இணங்கி இயங்கும். ஆனால் படுக்கையை மட்டும் கீழே இருந்ததற்கு மாறாகத் தலைகீழாகப் பொருத்திக் கொள்ளவேண்டும்!''

''சுலபம்தான்; ஆனால் மேலே இருக்கும்போது எனக்குப் பொழுது போக வேண்டுமே! கீழே வருவ தற்கும் வழி ஒன்றும் இல்லையே?''

கொஞ்சநேரம் யோசித்த பிறகு அதற்கும் ஒரு வழி கிடைத்து விட்டது.

''நகரும் ஏணியின்மேல் புத்தக அடுக்கு ஒன்றை அமைத்துக்கொண் டால் தேவையானபோது புத்தகங் களைப் படிக்கலாம். கீழே வர விரும்பும்போது, பத்தாவது முறை யாகப் பதிப்பித்த இரண்டு பிரிட் டிஷ்-என்சைக்ளோபீடியா (கலைக் களஞ்சியம்) பிரதிகளைக் கையில் எடுத்துக்கொண்டால், பிறகு கீழே வருவதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. மீண்டும் நீ மேலே போய்விட்டபின், உன்னுடைய வேலைக்காரி அந்தப் பிரதிகளை உன் புத்தக அடுக்கில் வைத்துவிடுவாள்!''

பைகிராப்ட் நான் சொன்னதை யெல்லாம் ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டிருந்தான்.

''ஒன்று மட்டும் உனக்குச் சொல்லிவைக்கிறேன்; உன்னுடைய வேலைக்காரியின் துணையின்றி நீ எதையும் செய்யமுடியாது. உன் நிலை அவளுக்குத் தெரிந்தால்தானே, உன்னுடன் அவளும் ஒத்துழைக்க முடியும்! நானே உனக்கு எத்தனை நாளைக்குத் துணையாக இருக்க முடியும்?''

கடைசியில் அவன் ஒருவனோடு இருந்த இரகசியம், வேலைக்காரி யைச் சேர்த்து மூவருக்குத் தெரிந்த ரகசியமாயிற்று. இரண்டு நாட்கள்

## அவர்களின் கவனம்!

போக்குவரத்து நிறைந்த ஒரு பெரிய சாலையில் ஒரு மோட்டார் மிகவும் வேகமாக, அங்கு நின்றுகொண்டிருந்த இரண்டு போலீ சாரையும் லட்சியம் செய்யாமல் ஓடியது. அவர்களால் அதை நிறுத்தவும் முடியவில்லை.

ஒரு போலீஸ்காரர் மற்றொரு போலீஸ்காரரைக் கேட்டார்:

'வண்டி எண்ணை எழுதிக்கொண்டாயா?'

'இல்லையே; குறிப்பதற்குள் வேகமாக ஓடிவிட்டது!'

'ஒரு வேளை, அவன் பக்கத்திலிருந்த பெண்ணை திருடிக் கொண்டு போகிறானோ?'

'எனக்கும் அதுதான் சந்தேகம்; அந்தப் பெண்தான் எவ்வளவு அழகு!'

அவனுடனேயே இருந்து, தேவையான அமைப்புக்களைச் செய்து கொடுத்தேன்.

அன்றுமாலை தேனீரைச் சுவைத்த வண்ணம் அவனுடைய அறையில் நான் உட்கார்ந்துகொண்டிருந்த போது, பைகிராப்ட் மேலே தன்னுடைய படுக்கையில் உட்கார்ந்து கொண்டு எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தான்.

"பார்மல்! வெளியே போகாமல் எத்தனை நாளைக்கு நான் இப்படியே இருக்கமுடியும்?" - ஏக்கத்தோடு கேட்டான் பைகிராப்ட்.

★

"பைகிராப்ட்..."-உணர்ச்சியோடு கூவிக்கொண்டே அவனிடம் ஓடினேன்.

"என்ன பார்மலின், ஏதாவது வழி கிடைத்ததா?"

"கண்டுபிடித்து விட்டேன் பைகிராப்ட்! இனிமேல் இந்தப் படுக்கை, நூலகம் போன்ற அமைப்புகள் எதுவும் வேண்டாம் உனக்கு. வேண்டியதெல்லாம் இழந்த எடையை சமப்படுத்த வேண்டியதைத் தவிர வேறொன்றும் தேவையில்லை!" பெருமையும் பெருமிதமும் பொங்க நான் பேசியபோது, அவன் விழிகளில் வழிந்தோடிய வேதனைக் கண்ணீரை என்னால் கவனிக்காமலிருக்க முடியவில்லை.

"பைகிராப்ட்! என்னிடம் இருக்கும் குறிப்புகளில் ஏதாவது ஒன்றில் இழந்த எடையை மீட்க வழி இல்லாமலிருக்காது. ஆனால் நான் இதைக் கொடுத்ததைப்போல் எதையாவது கொடுக்கப் போய் இன்னும் மோசமாகிவிட்டால்..."

"வேண்டாம் பார்மல்! இப்பொழுது இருக்கும் இந்த நிலையே எவ்வளவோ மேல். நீ, முதலில் வெளியே போகும் வழியைச் சொல்!"

நெஞ்சை ஒருமுறை நீவிக் கொண்டு வழியைச் செல்ல ஆரம்பித்தேன்.

"ஈயத்தகடுகளை வாங்கி, தட்டு கள்போல் குழிவாக்கித் தேவையான அளவுக்குப் போர்க்கவசம் போல் உன்னுடைய மார்பில் பொருத்திக் கொள்ளவேண்டும். எப்பொழுதும் போல் உன்னுடைய சட்டை அவற்றை மறைத்துக்கொள்ளும். சட்டையின் பகுதியில் சில ஈயத்தகடுகளை அமைத்துக்கொள்வதுடன் உன் முழு கால் சட்டையிலும் கொஞ்சம் ஈயக்குண்டுகளை நிரப்பிக் கொள்ளலாம். மேலும் நீ அணியும் தோல் பூட்சுகளுக்குப் பதில், தோல் மறைத்த ஈயப்பூட்சுகளையே உபயோகித்தால், பிறகு நீ கைதியைப் போல் இங்கேயே அடைந்துகிடக்க வேண்டியதில்லை. கடலில் செல்லும் கப்பல் உடைந்துபோனாலுங்கூட நீ அஞ்சவேண்டியதில்லை. தேவையான அளவு எடையைக் குறைத்துக் கொண்டால் கடல் மட்டத்திலே மூழ்காமல் மிதந்துக்கொண்டே கரை சேரலாம்!"

இதை நான் சொல்லிமுடித்ததும் அளவுக்கு மீறிய மகிழ்ச்சியால் கூவினான் பைகிராப்ட்.

"பார்மல்! அப்படியானால் இனி வழக்கம்போல் நானும் எல்லோரையும்போல் சங்கத்துக்கு வந்து போகலாம்; இல்லையா?"

"ஆஹ......ஹா!" - ஏன் இந்த வழியை அவனுக்குச் சொன்னோம் என்றாகிவிட்டது எனக்கு.

"ஆம், பைகிராப்ட்! இனிமேல் நீயும் நிச்சயம் வரலாம்!"

★

இன்னும் அவன் அங்கேதான் உட்கார்ந்துகொண்டிருக்கான். ஆனால் இப்பொழுது எதையோ தீவிரமாக சாப்பிட்டுக் கொண்டிருந்தான். இழந்த எடையை ஈடு செய்ததற்குப் பரிசாக இனிமேல் அவன் கொடுக்கும் பேச்சுத் தொல்லைகளுக்கு நான் அடிமையாகித் தீரவேண்டும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம், அவனுள் புதைந்துகிடக்கும் அந்த இழந்த எடை உண்மை, எனக்கும், வேலைக்காரிக்கும், உங்களுக்கும் தவிர இன்னும் வேறு யாருக்கும் தெரியாது; தெரியக்கூடாது! ★

# அராபியவீரன்

காா. அப்பாதுரையார்

— சென்ற இதழ் தொடர்ச்சி —

"ஒரே பகலில் பாரசிக அரசனையும் யவனப் பேரரசன் ஹெராக்ளிஸையும் பணியவைத்த இஸ்லாத்தின் சோதியே! டமாஸ்கஸ் வீரனே! அராபிய உலகின் மாசிலா வைர மணியாகிய உம் அருமையை எம்முன்னோர் அபுபக்கர் நன்கறிந்திருந்தார். நான் அறியாததற்கு வருந்துகிறேன். நிலைமை அதை அறியச் செய்துவிட்டது. நீர் இஸ்லாமியக் கொடியைப் பறக்கவிட்ட வெல்லப்படாத டமாஸ்கஸ் கோட்டையை, உம்மைக் குறை கூறிய தளபதிகளே கோட்டை விட்டு, இப்போது அதை மீட்கவல்லவர் தாமே என்று மனமார எனக்கு அவசரச் செய்தி தெரிவித்துள்ளனர். ஆகவேதான் உம் பாரசிகப் பயணத்தை ஒதுக்கிவிட்டு, டமாஸ்கஸ் விரைக என்று இத்திருமுகமூலம் உமக்கு அறிவிக்கிறேன்.

'இஸ்லாத்தின் புகழும் அராபியாவின் பெருமையுமே உயிராகக் கொண்ட தமக்கு, நான் அளிக்கத்தகும் பரிசு எதுவுமே இருக்கமுடியாது. ஆயினும் அராபியாவின் வைர மணிக்குப் பரிசாக, ஒரு அராபிய மாணிக்கத்தையே பரிசாக உமக்கு அனுப்பியுள்ளேன். அதுதான் இத்திருமுகம் கொணரும் தூதன். உம் அருமையை நான் அறியும்படி செய்தவனும் அவன்தான். பணம், பெருமை அவனை விலைக்கு வாங்காது-இதை அறிந்து கொண்டேன். ஒப்பற்ற வீரராகிய தாமே அவனை இஸ்லாத்தின் பணியில் உம்முடன் பங்கு கொள்ளச் செய்துகொள்ள வேண்டும்-தாமே அதைச் செய்யமுடியும்.

'வாழ்க இஸ்லாம்!'

'வெல்க அராபியா!'

'நீடுக தோலா வெற்றி வீரன் தளபதி காலேத் புகழ்!'

—நபிநாயகத்தின் முதல் அடிமை
ஓமார்."

தளபதி காலேதின் படை வீரர்களில் இளைஞர்கள் பாதி, முதியவர்கள் மற்றொரு பாதி. படைத் தலைவர்களிலோ பெரும்பாலோர் முதியவர்கள், தழும்பேறிய உடலும் முறுக்கேறிய மீசையும், உடற் கட்டும் உடையவர்கள். ஓமாரின் ஆட்சித் தொடக்கத்தில் காலேதுக்கு ஏற்பட்ட புறக்கணிப்புக்களால் அவர்கள் உடலும் உளமும் குன்றிப் போயிருந்தன. தோலா வீரன் காலேதைப் புறக்கணிக்கும் இஸ்லாம் உலகில் புறக்கணிக்கப்பட்டு விடுமென்று அவர்கள் ஓயாது கவலைப்பட்டுக் கிடந்தனர். ஆனால் இந்த ஓர் இரவில் அவர்கள் புத்துயிர் பெற்றனர். கலீபாவின் திருமுகத்தின் விவரங்கள் யாருக்கும் தெரியாவிட்டாலும், திருமுகம் வந்தவகை, கொணர்ந்த இளைஞ

**கனை! ஒரு காலத்தில் பேனிசாத் குழுவினரால் எள்ளி நகையாடப்பட்ட இளைஞன்; அவனுக்குத்தான் பின்னல் எவ்வளவு பெயரும் புகழும் கிடைத்தது! இஸ்லாத்திற்கே அல்லவா அவனுடைய பணி தேவைப்பட்டது!**

னின் புத்தார்வத் துணிச்சல் ஆகியவை குன்றின்மேலிட்ட ஒளியாக எங்கும், எப்படியோ அலை பாய்ந்து வீரர் நாடி நரம்புகளில் அதிர்ந்தன. தளபதியின் கட்டளை புறப்படு முன்பே, கூடாரம் சிரியாப் பயணத்தை எதிர் நோக்கி எழுந்தாடிற்று.

தளபதியின் கட்டளை நாலு மணிக்கே தரப்பட்டது. ஐந்தடிக்கு முன் பாலைவனமே படை முழக்கத்துடன் அதிர்ந்தது. கலீபாவின் தனிக் கட்டளைக்குக் காத்திராமலே சோலைவனத் தீவங்களிலிருந்து வீர ஆறுகள் வந்து, காளுருகப் பாஸ்ராவிலிருந்து புறப்பட்ட படையணிகளுடன் கலந்துகொண்டன.

முரசொலி இடியென எங்கும் முழங்கிற்று. அதனை எழுப்பும் மண் முகிலோ என்னும்படி படைகள் எழுப்பிய பாலைவனப் புழுதி வானளாவ எழுந்து பரவிற்று!

ஆயுதமேந்திய குதிரை வீரர் பதினாயிரவர் கொடிப் படையாக முன்னே வீறுடன் சென்றனர். அதன் பின்னே பழம்பெரும்படைத் தலைவர்கள் முன்னும் பின்னும் அணிவகுத்துவர, நடுவே யானை போன்ற பாரிய ஓர் ஒட்டகைமீது, அரண்மனை மாடமோ எனும்படி பொன் வெள்ளி தந்தங்களால் ஆக்கப்பட்டு, பட்டு சரிகைத் திரைகளிட்ட அம்பாரிமீது அமர்ந்து சென்றார் தளபதி காலேத். அவருக்குப்பின், அவர் ஒட்டகையின் ஆடம்பரத்தில் குறையாத இரண்டு ஒட்டகங்கள் தம்மிடையே, அரசியர் ஏறிச் செல்வதற்குரிய சிவிகை போன்ற ஒரு தாங்குப் பல்லக்கைச் சுமந்துகொண்டு சென்றன. இன்னும் உடல் முற்றிலும் தேறாது உணர்வற்றுக்கிடந்த கனுவையே அச்சிவிகை சுமந்து சென்றது. படைத்தலைவர்கள் புடைசூழ, ஈட்டி வீரர்களால், கொடிசாமர மதிப்புக்களுடன், தளபதிக்கடுத்துத் துணைத் தளபதிபோல அவன் படையணியில் இடம்பெற்றான். அவன்பின், பாலைவனத்தில் உணவு நீரின்றி அவனைச் சுமந்து இஸ்லாத்தின் திருப்பணிக்குக் கிட்டத்தட்டத் தன் உயிரையே பலியிட இருந்த பட்டத்து ஒட்டகை, ஒட்டகத்துக்குரிய பழு ஏதும் இல்லாமல், ஒட்டகமாக ஒரு மாமன்னர்போல அணிமணி ஆதரவுடன் மெல்ல நடந்து வந்தது. அதன்மீது வெயில் படாதிருக்கக் குடைகள் இருபுறமும் ஏந்தப்பட்டன. அதற்குரிய உணவு நீர்க்கலங்கள் ஏந்தி இருபுறமும் அடிமைகள் அதன்மீதே கண்ணாக நின்று ஆதரவுடன் சென்றனர்.

படையணியின் முகப்புப் பகுதியே இது. அதன் பின்னால், பலநாள், பல இரவுப்பயண நீளத்தில், ஈட்டி கேடயங்களின் அணிகள், வரிசை வரிசையாக, சாரிசாரியாக, இடையறு ஆறுபோல் மெல்ல அசைந்து சென்றன. உலகத்திலுள்ள ஆறுகளெல்லாம் யூப்பிரட்டிஸ், டைகிரிஸ் ஆகிய பேராறுகளில்விழுந்து, அவ்இணையாறு கீழ்திசை செல்லாமல் திரும்பி மேல்திசையில் ஈஜியன் கடலைத் தாக்கச்சென்றால் எப்படியிருக்குமோ, அப்படியிருந்தது அப்படைப் போக்கில் அமைந்த ஆரவாரக் கட்சி!

இடைத்தங்கல்களிலே தளபதி காலேத் படைத்தலைவர்களிடையே தன் அருகில் கனுவை வைத்துக்கொண்டேதான் உணவருந்தினார். அச்சமயங்களில் படைத்தலைவர்கள் கேட்க, அவர் கனுவிடம் பலபடியாகப் பேச்சுக் கொடுத்து, அவன் ஹார்மலையில் கண்டகாட்சி, கலீபாவைக் கண்ட செய்தி, வெள்ளை ஒட்டகைப் பயணம், பட்டத்து ஒட்டகையுடன் பட்டபாடு ஆகியவற்றைப் பற்றிப் பலதடவை விரிவாகப் பேசவைத்தார். சிலம்பு மேகலைகள் கேட்ட தமிழர், பாரத இராமாயணம் கேட்ட கீழைநாட்டார், ஷாநமா கேட்ட பாரசிகர் அடையும் கிளர்ச்சிகளை மங்கவைத்தது, அராபியர் அவ்வுயிர்க்காட்சிகளைக் கேட்டபோது அடைந்த

மயிர்ச்சிலிர்ப்பு. பழய அராபிய வீரர் புதிய அராபியாவின் புது முறுக்கில் அக்கதைகள் மூலம் குளித்தனர்!

கஞை வுக்கு இந்த ஆடம்பரங்கள் பிடிக்கவில்லை. இரு தடவை கலீபா பணியில் ஈடுபட்டாய்விட்டது. இனி வீட்டுக்குச் சென்று வெள்ளை ஒட்டகையை மனமார அணைத்துக்கொள்ள வேண்டும். தந்தை நல்லாசியைக் காதாரக் கேட்டு, நேருக்கு நேராகப் பெற்று அவர் காலைக் கட்டிக்கொள்ள வேண்டும். பாலைவனத்தில் தன் கடமையிடையே தொலைவிலிருந்து தன்னைக் கண்டஞ்சிய மூத்த தமயனை, குற்றுயிருடன் வீடடைந்த இளைய தமயனை மார்புறத் தழுவிப் புத்துறவாட வேண்டும்-இவையே அவன் உள்ளத்தில் எழுந்த அவாக்கள். தன் குடியிருப்புக்கு நேராக அருகலாகப் படையணிகள் வரும் சமயம் பார்த்து, இராத்தங்கலின் போது ஓடிவிடவே அவன் தனக்குள் இரகசியத் திட்டமிட்டிருந்தான்.

கலீபா அனுப்பிய மாணிக்கத்தின் அருமையைத் தளபதி காலேத் இதற்குள் முற்றிலும் நன்கறிந்து கொண்டார். அதுமட்டுமோ? பாம்பின் கால் பாம்பறியும் என்றபடி, அந்த ஆர்வ வீரனின் முழு இயல்பையும் ஆர்வ வீரராகிய அவர் நன்கறிந்து கொண்டார். அவன் உள்ளத்தில் உலவிய சிந்தனைகள் கூட அவர் அறியாதவையல்ல. கலீபாவின் உரைப்படி, கலீபா வழியைப் பின்பற்றியே, அவனுக்குத் தக்க பண்பார்ந்த வீரப் பணியில் அவனை ஈடுபடுத்தி, தன் படைத் துறையுடனே அவனை இணைத்துக்கொள்ள வேண்டுமென்று அவரும் திட்டமிட்டார். திறமை வாய்ந்த தளபதி என்ற முறையில், அவன் உள்ளத்தின் மறை திட்டத்தின்மீதே அவர் தன் அருந் திட்டத்தை எழுப்பினர்.

பேனிசாத்களின் குடியிருப்புக்கு நேருகாமையில் படை முகப்பு வந்த சமயம், இராத்தங்கலின் போது, கஞை வையே மனத்துட்கொண்டு, தளபதி காலேத் நயமாகப் படைத் தலைவரிடம் பேச்சுத் தொடங்கினர்.

‘தோழர்களே! நமக்கு இப்போது ஒரு புதிய எதிர்பாரா இக்கட்டுத் தோன்றியுள்ளது. அது சிறு தடங்கல்தான். ஆனால் நம் பெரிய முயற்சிகளையெல்லாம் அது செயலற்றதாக்கிவிடும் போலிருக்கிறது. படைகள் எதிர்பாராவண்ணம் கடல்களாகப் பெருகிவிட்டன. ஆனால் அதற்கேற்றபடி உணவு வளம் பெருகவில்லை. நம் உணவுத் தானியங்கள் இன்னும் மூன்று நாட்களுக்குமேல் தாக்குப்பிடிக்க மாட்டா என்று உணவதிகாரி கூறுகிறார். உணவுத்தானியங்கள் நாள்தோறும் புதிது புதிதாக வருவதற்கு ஏற்பாடில்லாமல் படைகள் முன்னேறுவது எப்படி? அத்துடன் முன்னணிப்படைத் தளங்களுக்கே, போர்க்களத்துக்கே, உணவுத் தானியம் செல்லும் வசதிகளை ஏற்படுத்தாமல், நாம் எப்படி நீடித்து போராட்டத்துக்கு வழிசெய்ய முடியும்? அனுபவமிக்க படைத்தலைவர்களாகிய நீங்களே இதற்குவழிவகைகள் செய்யவேண்டும்’ என்றார்.

மலை எதிர்த்தாலும் மலைக்காத வீரர்கள் தான் அவர்கள். ஆனால் உணவுப்பிரச்சினையின் முன் அவர்கள் இன்னது செய்வதன்றறியாது திகைப்புற்றனர்.

கஞை இப்போது தன் திட்டம் மறந்தான்; எழுந்து பேசினன்:

‘தந்தைமாரே, தமையன்மாரே! என் தந்தை குடியிருப்பிலேயே ஏராளமான தானியங்கள் இருக்கின்றன. தேவைப்பட்டால் என் குடியினர் அராபிய உலக முழுவதிலுமிருந்தே தானியங்களை வரவழைத்துத் தருவிக்கவும் முடியும். போதிய சாக்குகளுடன் படைத் துறை அதிகாரம் பெற்ற பணியாளர்களுடனும் என்னை என்

ஒருவன் எப்பொழுதும் வீரனுகவே வாழ முடியாது; ஆனுல் மனிதனுக வாழமுடியும்.

—கதே.

தந்தை இல்லத்துக்கு அனுப்புவதானுல், இக்குறை தளர்க்க உறுதி கூறுகிறேன்.'

படைத்தலேவர்கள் இந்த ஆலோசனேயை – ஆர்வ உதவியை – ஆரவாரத்துடன் வரவேற்றனர். தளபதியின் கண்களில் புத்தொளி படர்ந்தது.

'புதிய அராபியாவின் புத்திளேஞனே! கலீபா கண்டெடுத்த அராபிய மாணிக்கமே! நீ இதுவரை செய்த சேவை பெரிது. ஆனுல் இனி நீ செய்யவேண்டியவை இன்னும் பெரியனவாயிருக்கப் போகின்றன என்பதை நான் அறிவேன். இந்தப் படைத் தலேவர்களும் அறிவார்கள். நம் படைகளின் பயணத்தங்கலுக்கு மட்டுமல்ல, போர்கள் முன்னணித் தளங்களுக்கே வேண்டிய எல்லா உணவுத்தானிய ஏற்பாடுகளேயும் செய்துமுடிக்கும்பெரும்பொறுப்பை உன்னிடமே விடுகிருேம். இப்போது அதன் முதற்படியாக, இப்போதே பேனிசாத் குடியிருப்புக்குப் புறப்படு. அது முடிந்தபின், அப்படைகளுக்கு முன்னேசென்று, தக்க ஏற்பாடுகளே நீயே முன்னணியில் செய்வாயாக!' என்ருர்.

படைத்தலேவர்கள் 'தளபதி காலேத் வாழ்க! வெல்க வீர இளேஞன் கனுவின் புகழ்!' என்று இம்முடிவைப் பாராட்டி வரவேற்றனர். தளபதி காலேத் தம் திட்டம் எதிர்பாரா வெற்றியுற்றது கண்டு அகமகிழ்வுற்ருர்.

மறுநாள் மாலேயே கனு நூறு குதிரைவீரர் தலேமையில் புறப்பட்டான். உணவுத் தானியங்களுக்குரிய விலேயின் முதல் தவணே முன்பணமாக பத்து ஒட்டகைகள் சுமந்தபொன், உணவுச்சரக்குகள் சுமந்து இருபது ஒட்டகைகள், பாலேவனப்புயலுக்குத் தளபதி காலேத் வழங்கிய பரிசுகள் சுமந்த ஒட்டகை ஒன்றும் அவனேப் பின் தொடர்ந்தன.

தளபதி காட்டிய இந்த ஆர்வ மதிப்பின்முன், கனுவின் பணிவும் எளிமையும்கூடச் சிறிது விலகின. புகழின் உச்சியில் இறுமாந்திருப்பவன் போல அவன் பட்டத்து ஒட்டகை பின்வர, அதன் முன்னுல் குதிரைமீது அமர்ந்து சென்ருன். பட்டத்து ஒட்டகை உண்மையில் பேனிசாத் குடியிருப்பு வழியாகக் கலீபாவின் தனி மதிப்பையும் பாராட்டையும் பெறும் பயணத்திலேயே ஈடுபட்டிருந்தது. அராபிய வைரம், அராபிய மாணிக்கம் ஆகிய தளபதி, கனு ஆகியோருக்குப் பிற்படாத அராபிய மரகத மணியாக, முத்து பவளமாக அது மதிக்கப் பெற இருந்தது.

பேனிசாத்களின் குடியிருப்பு அச்சமயம் ஒரு மணற்கேணியிலிருந்து ஊறிச் சிறிது தொலேவே ஓடிய ஒரு சிற்ருேடையருகே இருந்தது. இரவு நெடு நேரமானதால் மக்கள் கண்ணயர்ந்துவிட்டனர். தணலடுப்பின் கனல்கூடச் சாம்பல் பூத்த நிலேயிலேயே தொலேவில் மினுங்கின. தந்தையின் மாளிகைக்குச் சென்று அவரைத் தட்டி எழுப்பும் நோக்கத்துடன் கனு ஐந்து வீரருடன், விரைந்தான். ஆனுல் முதலில் இருளில் நிழலாக, பின் இருளில் ஒளியாக ஒரு வெள்ளே வடிவம் அவனருகே விரைந்து வந்தது. கனு குதிரையிலிருந்து சரேலென்று இறங்கி அதைக் கட்டிக் கொண்டான். ஆனுல் அது ஓர் உறுமலால் வணக்கம் தெரிவித்து

விட்டு, எப்படியோ விரைந்து சென்று பாலைவனப் புயலையே எழுப்பிக்கொண்டு வந்துவிட்டது.

அதுவே பாலைவனப் புயலில் வெள்ளை ஒட்டகை.

தந்தையைக் கண்டதும் கனுை ஆர்வத்துடன் பாய்ந்து சென்று அவர்முன் மண்டியிட்டு முழங் தாளைக் கட்டிக்கொண்டான். 'உங்கள் நல்லாசியை நேரில் பெறும் ஆசையுடன் வந்திருக்கிறேன், தந்தையே! வெள்ளை ஒட்டகையை ஏற்கனவே கண்டு அணைத்துக் கொண்டுவிட்டேன். எங்கே அண்ணன்மார்கள் ?' என்ருன்.

மைந்தனைத் தூக்கி அணைத்துக் கொண்டார் தந்தை. 'என் ஆசி மட்டுமல்ல, மைந்தனே! தந்தையரின் தந்தையான அல்லாவின் ஆசி, அராபியாவின் தந்தையான கலீபாவின் ஆசி, இஸ்லாத்தின் ஆசியே உன்மீது பரிபூரணமாகப் பொழிகிறது, கனுன்! உன் வருகையைத்தான் பேனிசாத்குடி இச்சமயம் எதிர்பார்க்கவில்லை; அது கண்டால்கூட நம்பாது கனுன்! உன் புகழ் இங்கே அந்த அளவு எல்லார் உள்ளத்திலும் புத்துயிரும் புதுப் பெருமையும் தந்துள்ளது! வாழ்க உன் வீரம், வளர்க நம் குடிப் பெருமை!' என்று மகன் புகழே பாடிற்று பாலைவனப்புயல்.

புயல் பெற்ற தென்றல், புயலின் அமைதிக் கால வாழ்விலும் தென்றலாயிற்று.

கனுை வந்துவிட்டான்—பேனிசாத்குடிக்கு மாளாப் பெருமையளித்துள்ள கனுை குடியிருப்பின் எல்லைக்குள்ளேயே வந்துவிட்டான் என்ற செய்தி, தூங்கும் குடியிருப்பிலே கண நேரத்தில் பரந்துவிட்டது. ஆடவர், பெண்டிர், முதியவர், இளைஞர், சிறுவர் சிறுமியர், குழந்தைகள்—ஒட்டகைகள், குதிரைகள் முதலாக எங்கும் பரபரப்புடன் எழுந்தோடி வந்தன.

வெள்ளை ஒட்டகையையும் மூத்த மகனையும் குடியிருப்பில் கண்ட அன்றே பாலைவனப்புயல் புதிய மனிதனுய்விட்டார். குற்றுயிராய்க் கிடந்த இரண்டாம் புதல்வன் தம்பி புகழ் கேட்டதுமே புத்துயிர் பெற்றெழுந்தான். ஆனுல் இதனையடுத்துக் கலீபாவிடமிருந்து பாலைவனப் புயலுக்கு அவன் மகன் வீரம்பற்றிய பாராட்டும் பரிசு விருந்துகளும் வந்தன. கனுை வேண்டாமென்று மறுத்த பொன்னிறைந்த பையுடன் வெறும் மூன்று பைகள், கலீபா கைப்பட எழுதிய பாராட்டுக் கடிதம் ஆகியவற்றுடன் குடியிருப்பு இதுவரை கண்டிராத ஒரு சிறு படைப் பிரிவே பாலைவனப்புயலை வந்தணுகியிருந்தது. குடியிருப்பு இவற்ருல் பெற்ற புகழை அது பல தலைமுறைகளாக மறப்பதற்கில்லை. ஆனுல் தளபதி காலேத் அளித்த மதிப்பு இத்தனையையும் தூக்கிப் போட்டதுபோலாயிற்று! அது பரிசுகளுடன் பரிசாக, வீரனின் காட்சியையே அவர்கட்கு அளித்தது!

பாலை வனப்புயல் மட்டுமல்ல, பேனிசாத் குடி முழுவதுமே தம் வீரனுக்கு விருந்தளிப்பதில் முழு மும்முரமாக ஈடுபட்டது. மன்னர் மாமன்னர் அந்த எளிய குடியிருப்புக்கு வந்திருந்தால்கூட அவ்வளவு எழுச்சியிராது - அவ்வளவு கிளர்ச்சியுடன், தலைமுறைகள் பல கண்டிராத அளவில் விழா விருந்து ஏற்பாடுகள் நடந்தன.

ஆயர்கோலை, ஆடையை நீக்கி வீர ஆடையே புனைவிக்க இச்சமயமும் பாலைவனப்புயல் மகனைக் கெஞ்சினுர். ஆனுல் இப்போது

மற்ற மனிதர்கள் சாப்பிடுவதற்காக வாழ்கிருர்கள். நான் வாழ்வதற்காகச் சாப்பிடுகிறேன்.
—சாக்ரடீஸ்.

மறுப்புக் கேட்டு அவர் சீற்றமடைய வில்லை; வருந்தவில்லை. பெருமையே கொண்டார்.

'தந்தையே! அல்லா என்னைப் படைத்தபடியே நான் இருக்க விரும்புகிறேன். இந்த ஆயர்கோல், ஆயர் உடையுடன் தானே கலீபா வின் பாராட்டு, தளபதியின் ஆர்வ மதிப்பு எனக்கு ஏற்பட்டது. அத னுடனேயே நான் வாழட்டும்! உங்கள் கனிவு வற்புறுத்தலுக்காக ஒரு மேலாடை, ஒரு மோதிரம் அணிந்து கொள்கிறேன். உங் களுக்கு மட்டுமல்ல, கலீபாவுக்குக் கூட நான் காட்டும் மதிப்பு இதுவே!' என்ருன் அவன்.

அவனுடன் முன்பு பேசத்துணி யாத, திரும்பிப் பார்க்க விரும்பாத பெண்டிர் இப்போது அராபியாவின் பழம்பாடல்களில் பழய வீரர் பெயரை எடுத்துவிட்டு அவன் பெயரில் பாடல்களை மாற்றிப் பாடி னர். முன் ஈட்டி ஏந்தாதற்காக அவனைப் பழித்து இழித்துக்கூறிய குடியினர் நடனங்களிலும், நடிப்புக் களிலும் ஈட்டிக்குப் பதிலாக ஆயர் கோலேந்தி அவனுக்கு புதுமதிப்புக் காட்டினர்.

தளபதி காலேதின் படைப்பெருங் கடல்கள் டமாஸ்கஸை நோக்கி முன்னேறி, பாலஸ்தீன எல்லை யிலுள்ள எர்மோங்க் என்ற இடத் தில் தாவளமிட்டன. கனுவின் முயற்சியால் படைத்துறைக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் பரி பூரணமாக நிறைவேறியிருந்தன. ஆனல் அவற்றிலே ஈடுபட்டிருந்த அவன், தளபதி கூடாரத்துக்கே வர வில்லை. தளபதியும் இன்னும் போர் நடவடிக்கைகளுக்கான உத் தரவு பிறப்பிக்கவில்லை. வீரர் அதற்கே துடிதுடிப்புடன் காத்துக் கிடந்தனர்.

'தோலாவீரர், அஞ்சாநெஞ்சர் காலேத் போர் ஆணை பிறப்பிக்கக் காலந்தாழ்த்துவானேன்? இதில் ஏதோ மர்மம் இருக்கிறது!' என்ற பேச்சு எங்கும் அடங்கிய குரலில் பரவிற்று.

போர் ஆலோசனைக் கூட்டம் கூட்டப்பட்டது. அதற்கு வரும்படி காலேத் அழைப்புப் பெற்ருன் கனு. 'ஈட்டி ஏந்தாத எனக்கும் போர் ஆலோசனைக் கூட்டத்துக் கும் என்ன தொடர்பு' என்று வியந்தவாறே சென்ருன் அவன்.

போர் நடவடிக்கை பற்றிய பொதுப் பேச்சுக்குப்பின், அவற் றின்மீது எத்தகைய முடிவும் எடுக்குமுன், காலேத் திடுமெனக் கனு பக்கம் திரும்பினர்.

'பாலைவனப்புயலின் மைந்தனே! டமாஸ்கஸ் இஸ்லாமியர் கொடியை யும், இஸ்லாமிய வீரத்தையும் அறி யாததல்ல. யவனப் பேரரசனைப் பணியவைத்து அதன்மீது நானே கொடியேற்றி வைத்திருக்கிறேன். ஆனல் போர் என்பது வீரம் மட்டு மல்ல. அதன் விளைவுகளும் அர சியல் வெற்றி தோல்விகளுடன் நிற்பதில்லை. இப்போது தொடங்கி யுள்ள போராட்டம் புதிய சூழலை உண்டுபண்ணியுள்ளது. இது இஸ் லாத்துக்கும் கிறிஸ்தவ உலகுக்கும் இடையேயுள்ள போராட்டம் மட்டு மல்ல; பழய ஆசியாவின் வீரத் துக்கும் புதிதாக மேலையுலகில் எழுந்துவரும் புதிய போர் முறை களுக்கும் இடையேயுள்ள போராட் டம். இதில் அராபியாவின் வாழ்வு, மாள்வு, இஸ்லாமியக் கொடியின் புகழ் வளர்ச்சி, தளர்ச்சிகள் போராட்டப் பிரச்சினைகளாகியுள் ளன. இவ்வுயிர்ப் போராட்டத்தில் காலெடுத்து வைக்குமுன் என் முழுப் பொறுப்பையும் பலத்தையும் நான் அளவிட்டாக வேண்டும். அராபியர் குருதி முன்போல் வீண க்கூடாது.

'எதிரிகளின் பலம்பற்றிய பல தகவல்கள் என்னிடம் வந்துள் ளன. அவை ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன. வீரத்தில் அரா பியா பின்னடைந்துவிடவில்லை. அல்லாவின் அருளால் போர்

முறையிலும் என் நாளில் பின்னடையப் போவதில்லை. ஆனால் தகவல் சேகரத்தில் நம் வலிமை தளர்ந்துள்ளது.

'இப்பொறுப்பை உன்னிடம் தர எண்ணுகிறேன். ஏனெனில் எனக்கு உண்மை நிலை உள்ளபடி தெரிய வேண்டும். இதைச் சரிவரச் செய்ய உனக்கு என்ன வேண்டும்? என்னென்ன வாய்ப்புக்கள் வேண்டும்? கேள், யாவும் தரப்படும்!' என்றார்.

ஆலோசனைக் கூட்டத்தில் ஒரு அமைதி நிலவிற்று.

கனை மெல்ல எழுந்தான். எழுந்து நின்றான்.

அவன் வாய் திறக்கவில்லை. தலை கவிழ்ந்தபடியே இருந்தது.

காலேத் படபடக்கவில்லை. அவசரம் காட்டவில்லை. அவரும் அமைதியாகவே, பொறுமையே உருவாக இருந்தார். அவன் உள்ளத்தில் நடக்கும் போராட்டத்தை அவர் அறியாதவரல்ல.

திடீரெனக் கனை நிமிர்ந்தான். தளபதியை நோக்கினான், வாய் திறந்தான்.

'தந்தையே! தங்கள் வேகமிக்க குதிரை, தங்கள் ஆசி, தங்கள் அரையில் கட்டியுள்ள கச்சை இந்த மூன்றும் வேண்டும்' என்றான்.

மூன்றே பொருள்களைச் சுட்டி அவன் கேட்டதுபற்றி எல்லாருமே வியப்புற்றனர். ஆனால் மூன்றாவது பொருள் தளபதி உள்ளத்தையே சுட்டுப் பொசுக்குவதாயிருந்தது.

'முதலிரண்டும் தரத் தடையில்லை. இந்தக் கச்சை ஏன், எதற்குக் கொள்ளும். வேறு ஏதேனும்...''

'தந்தையே! ஊசி எதற்குக் கொள்ளும் என்று தையல்காரனுக்குத் தானே தெரியும். அது இல்லாமல் இந்தப் பெரும் பொறுப்பை என்னால் ஏற்கமுடியாது' என்றான்.

'எல்லா அராபியரையும்போல அராபியனல்லன் இவன். இவன் புது அராபியன்' என்று தளபதி அன்றுதான் கண்டார். அவர் பேசாது கச்சையைக் கழற்றிக் கொடுத்தார்.

'என் பரிபூரண ஆசி. என் குதிரைகளில் எது வேண்டுமானாலும் எடுத்துக்கொள். போய் வெற்றி நாடு. நீ இருக்க இஸ்லாத்துக்கு வெற்றி என்பதில் எனக்கு மாளா உறுதி உண்டு' என்றார்.

'மன்னிக்கவேண்டும் தந்தையே! என்னைப் புதிய ஆளாக்கியவர் தாங்கள்! வாழ்க தங்கள் புதுப் புகழ்!' என்று கூறி மறைந்தான் கனை!

கனை உடனே செல்லவில்லை. ஒரு குதிரையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். தளபதியைத் தனியாகப் பேட்டி கண்டான்.

'தந்தையே இந்தக் கச்சையைத் தங்களிடமிருந்து கோரியதற்கு மன்னிப்புக் கோருகிறேன். இதன் அருமை நான் அறியாததல்ல. பாபிலோன் அரண்மனையில் தாங்கள் கைப்பற்றிய திரையால் இது ஆக்கப்பட்டது. பாரசிகக் கலை வல்லுநர்களால் தனி முறையில் பாடம் செய்யப்பட்டு வண்ணம் தொய்விக்கப்பட்ட ஒட்டகத் தோளில் இது வனையப்பட்டது. தங்கள் வெற்றிப்படிகளின் சின்னம், தங்கள் உயிர் அவா இதில் அடங்கியுள்ளதென்பதையும் நான் அறிவேன். அதனால்தான் இப்பெரும் பொறுப்புக்கு இதனைக் கோரினேன். இதன்மூலம் தங்களுக்குப் புது வெற்றிப் புகழ் கிட்டப் போவது உறுதி. ஆனால் இது வகையில் என் ஏற்பாடு கூறிப் போகவே வந்தேன்.

'இதை நான் என் ஆடைக்குள் ஒளித்தே கட்டிக்கொள்ளப் போகிறேன். ஆனால் நான் போனபின் இது காணமற் போய்விட்டதென்றும், இதையோ, இதன் துண்டையோ மீட்டுத் தருபவர்களுக்கு,

மீட்டுத் தரும் பகுதியை நிலமீது படும்படி தொங்கவிட்டு அதனை முற்றிலும் மறைத்து மூடும் அளவு தங்க நாணயக் குவியல் பரிசாயளிக்கப்படும் என்று பறைசாற்சாற்றுங்கள். இதேமாதிரி விளம்பரங்கள் எங்கும் தொங்கட்டும்' என்று கூறிவிட்டு மறைந்தான்.

கச்சை கோரியதன் முழுப் பொருளும் இன்னும் தளபதிக்குப் புலப்படவில்லை. ஆனால் அதில் ஆழ்ந்த பொருள், பயன் உண்டு என்பது அவருக்கு இப்போது முன்னிலும் உறுதியாயிற்று. அவன் கேட்டுக் கொண்டபடியே கச்சைபற்றிய அறிவிப்பு பெரும் பறை சாற்றப்பட்டது. அது வகையான விளம்பரங்கள் எல்லாக் கண்களிலும்—எதிரிகள் முகாமிலிருந்து பார்ப்பவர் கண்களில்கூடக் காணும்படி எங்கும் ஒட்டப்பட்டன. தங்கக் குவியலுக்கும், புகழுக்கும் ஆசைப்பட்ட பலர் அவ்விசித்திரப் பொருளை மனக்கண்முன் உருவாக்கிக்கொண்டு புறக்கண்ணால் எங்கும் தேடினர்.

'போரில் முன் குடுமி பிடிப்பவன் வெல்வான். பின் குடுமியைத் தடவுபவன் தோல்வியையே தடவவேண்டி வரும்'—இது போர்பற்றிய காலேதின் சித்தாந்தம். இது யாவரும் அறிந்தது. ஆனால் அத்தகைய தளபதி இப்போது போர் ஆலோசனைக் கூட்டம் கூட்டியும் எத்தகைய முடிவும் தெரிவிக்காமல், போர் ஆணையும் பிறப்பிக்காமல் இருப்பானேன் என்று வீரர் முணு முணுத்துக் கொண்டனர். அவர் விளம்பரம் என்றதே போர் விளம்பரம்தான் என்று ஆவலாக நோக்கினர்; நோக்கி ஏமாந்தனர்.

காலேதும் இரவு பகல் உண்ணவில்லை, உறங்கவில்லை. கனவின் தகவல் ஒன்றே எண்ணி எண்ணி ஒவ்வொரு கணமும் கழித்து வந்தார். பாரசிக வேலைப்பாடமைந்த பட்டுக்கம்பளம் ஒன்றின்மீது அவர் வீற்றிருந்தார். பாபிலோனியக்கலைஞர் பூவேலை செய்தமைத்த வெண்கல விளக்குப் பக்கத்தில் சுடரிய வண்ணம் நின்றது. அராபியர் நறும்புகைக்கலங்கள் இனிய மணம் பரப்பிக்கொண்டிருந்தன.

வெளியே ஏதோ அரவம் கேட்டது. ஆனால் காலேதின் கருத்து அதில் இல்லை. அவர் முன்னே ஒரு முரட்டு வீரன் வந்து நின்றான். அவன் அவர் கச்சையின் துண்டொன்றைக் கையில் வைத்திருந்தான்.

பொன்னாசையாலேயே அவன் வந்தான் என்பதில் ஐயமில்லை.

முதலில் தளபதி அவன் கையிலிருந்து அதைப் பறித்தார். பின் இம் முதல் செயலுக்கு வெட்கி, அவன்முன் ஒரு பை நிறைய வெள்ளிக்காசுகளை எடுத்துவீசினார். ஆனால் துண்டின் ஒரு நுனி நிலம் பட அதை உயரத்தூக்கி, அது மறையுமளவு பொன்காசுகளை அவன் கொட்டிக் குவித்தபோதுதான் அவருக்குக் கனா கேட்டுக் கொண்ட விளம்பர நினைவு வந்தது. குவித்த பொன்னுடன் போக இருந்த வீரனை அவர் திரும்ப அழைத்து, 'பையிலுள்ள பொன் முழுவதையும் பையோடு எடுத்துக் கொள்' என்றார்.

---

மலர் ஏன் வாடிவிட்டது ?
ஏனெனில், நான் அதை அவியாத காதலுடன் என் இதயத்தில் அரவணைத்தேன்; ஆகவே அது வாடிவிட்டது !
வீணையின் தந்தி ஏன் அறுந்து போயிற்று ?
ஏனெனில், நான் அதன் முழு நாதத்தையும் கேட்கவேண்டும் என்று, அதை மேலும் மேலும் முடுக்கினேன்; ஆகவே அது அறுந்துவிட்டது !

—தாகூர்.

அவன் மகிழ்வுடன் நன்றி தெரிவித்துப்போக எழுந்த சமயம், அவர் மீண்டும் அவனிடம் பேசினர்.

'இது உனக்கு எப்படி கிடைத்தது? எங்கே கிடைத்தது?' என்று கேட்டார்.

எதிரிகளின் நடமாட்டம் பற்றிப் பிரயாணிகளிடம் விசாரிப்பதற்காக நாங்கள் நெடுந் தொலை வடக்கே சென்றிருந்தோம். நான்கு சிரியர்களுடன் ஒரு ஆயச் சிறுவனும் சென்றனர். ஆயச் சிறுவன் மார்பில் இதைக் கண்டேன். அவர்களை நான் தாக்க முயன்றபோது மற்றவர்கள் ஓடிவிட்டனர். சிறுவனும் ஓடிவிடுவான் என்றுஈட்டியை எறிந்தேன். அது...'

'அவனைக் கொன்றுவிட்டாயா?' என்று கோபத்துடன் கேட்டார், தளபதி.

'இல்லை. அவன் ஆட்டுத் தோல் சட்டையில்தான் அது மாட்டிக் கொண்டது. இத்துண்டுதான் என் தாக்குதலுக்குக் காரணம் என்று நினைத்தவன்போல் ஈட்டியுடன் இதை எறிந்துவிட்டு அவன் ஓடினன்' என்றுன் வீரன்.

அவனுக்கு மீண்டும் [illegible] பொன் கொடுத்து அனுப்பிவிட்டு, தளபதி கச்சைத் துண்டைத் திருப்பித் திருப்பிப் பார்த்தார்.

அதன் மடிப்புக்குள் [illegible] இருந்தது.

"எர்போங்குகரு இரண்டு நாள் தொலைவில், [illegible] துரோகி ஜபாபல் தலைமையில், அன்டியோக்கிலிருந்தும் அலெப்போவிலிருந்தும் அறுபதினயிரம் வீரர் வந்து தாவளமடித்துள்ளனர்.

வடக்கே ஆறு நாள் பயணத்துக்கு அப்பால் வந்துகொண்டிருக்கும் மானுவெல் தலைமையிலுள்ள கிரேக்க, சிரியப் படைகள் எண்பதினயிரத்தை எதிர்பார்த்தே அவர்கள் காத்திருக்கின்றனர்.

'இன்னும் பின்னல் வெறும் படைகள் குவிந்துகொண்டிருக்கின்றன.'

'இது மானுவல் கூடாரத்துக்குச் செல்லும் வழியில் அனுப்பப்படும் செய்தி!''

'அல்லா வெல்க! ஆட்டுத்தோல் சட்டை வாழ்க!' என்று தம்மையறியாமல் கனவின் ஆட்டுத்தோல் சட்டையை வாழ்த்தினர் தளபதி.

மறுநாள் முதல் போர் [illegible] பிக்கப்பட்டது.

ஜபாபலுடன் மானுவல் [illegible] சேருமுன், முன்னணிப் படையை [illegible] ஒரு படைப்பிரிவு அனுப்பப்பட்டது. பதினயிரம் குதிரைப்படைகள், பதினையாயிரம் ஒட்டகைப் படைகள் ஜபாபலைத் தாக்க எழுந்தன. ஒரு நாளைக்குள் துரோகியின் படை சின்னபின்னமாயிற்று. ஆனைப்பசிக்குப் பூனை உணவு பெற்றது போல, எர்போங்குக் கூடாரம் மீண்டும் பலநாள் இனவெடுத்த தோள்களுடன் காத்திருந்தது.

கச்சையின் இரண்டாவது துண்டு இன்னும் விசித்திரமான முறையில் [illegible] தியிடம் வந்து சேர்ந்தது.

> ### மோட்சம்!
>
> ''அப்பா, சிங்கம் மோட்சத்துக்குப் போகுமோ?'
>
> 'போகாது!'
>
> 'அத்தை மோட்சத்துக்குப் போவாளோ?'
>
> 'கட்டாயம் போவாள்!'
>
> 'அத்தையைச் சிங்கம் விழுங்கி விட்டால், அப்போது?'

அதைக் கொண்டுவந்தவன் ஓர் ஒட்டகை ஓட்டி. ஆயிரம்பெண்களு டன் மானுவெலின் படைத்தளத் துக்கு உணவுகொண்டு செல்லும் ஒட்டகக்குழுவுக்கு அவன் வழி காட்டி. ஆனால் வழியில் ஒரு ஆயச் சிறுவன் அவனை அணுகி, மேலே செல்லாதபடி எச்சரிக்கை தந்தான். 'மானுவலிடமா போகிறாய்? ஐயோ, நான் அங்கிருந்து தான் என் ஆடு கள் முழுவதும் இழந்துவிட்டு வரு கிறேன். அவனுக்கு உணவு மிக மிகத் தேவை; ஆனால் கையில் பணம் கிடையாது. உன்னிடம் இருப்பதெல்லாம் பறிபோய்விடும். ஆனால் அவ்வளவு தொலை போவா னேன்! தளபதி காலேதிடம் போ. அவரிடம் தங்கம் நிறைய இருக் கிறது. எடைக்கு எடை தங்கம் தருவார். அத்துடன் உனக்குத்தனிப் பட ஒரு பொன் நாணயப் பையே கிடைக்க வழி செய்கிறேன். இது ஒரு தாயித்து. இதை அணிந்து கொண்டுபோய் அவரிடமே கொடு' என்று அனுப்பினான்.

தளபதி காலேத் இந்தக் கதை கேட்டு உள்ளூரக் குலுங்கிக்குலுங்கி நகைத்தார். 'அம்பால் மூன்று பறவைகளை வீழ்த்தியிருக்கிறான். கனான்! மானுவெலுக்குச் செல் லும் உணவுப் பொருளைத் தடுத்து அதை நமக்கனுப்பி, அது கொண்டு வரும் ஆட்களையே தூதரும் ஆக்கி யுள்ளான்' என்று தனக்குள் கூறி மகிழ்ந்தார்.

''மானுவெலின் படை வீரர் உணவில்லாமல் பேரவதிக்காளா கியுள்ளனர். உணவு கொண்டு வரும் படைப் பிரிவொன்று ஐந் தாறு நாள் பயணத்துக்கப்பால் தான் வந்துகொண்டிருக்கிறது.''

தளபதி நகைப்பு இன்னும் பொருளுடையதாயிற்று.

கனானின் செய்தி தளபதி காலேதுக்குப் பெரு வலு அளித் தது. ஆனால் அச்செய்தியை மற்றப் படைத் தலைவர்களுக்கு அவர் தெரி விக்க முடியவில்லை. அவர்கள் எதிரிகளின் சூழ்ச்சி முறைகளில் மயங்கினர். மானுவெல் தன் கிரேக்க படைத்தளங்களைத் திறம் பட அணிவகுத்து நிறுத்தி, இஸ்லா மியர் உள்ளத்தில் அச்சமூட்டினான். அதே சமயம் அவன் தாராள மன துடன் சமரசப் பேச்சும் பேசிக் காலம் தாழ்த்தமுற்பட்டான். படை கள் பின்வாங்கி விடுவதானால், அவர்களைத் தாக்காமல் போகவிடு வதாக ஆசை காட்டினான். எதிரி யின் வலுபற்றிய தப்பான எண் ணத்தால், தலைவர்கள் இதை ஆர் வமாக ஏற்க விரும்பினர். ஆனால் காலேத் உடனடித் தாக்குதல் வேண்டுமென்று கூறி, அத்தகைய கட்டளையும் தந்தார்.

இரண்டு நாள் அராபியரும் கிரேக்கரும் தம் முழு வீரமும் போர் முனையில் காட்டினர். இருபுறமும் பேரழிவு ஏற்பட்டது. ஆனால் இரு வரும் முன் வைத்த கால் பின் வைக்கவில்லை. ஆனால் கிரேக்கப் படையில் முன் வரிசையன்றிப் பின் வரிசையில் ஆளில்லை என்பதை அராபியர் அறியாமல், மேன்மேலும் தாக்கத் தயங்கினர்.

படைத் தலைவர் பெரும்பாலோர் விருப்பம் எதிரி தளம் வரை எட்டி யிருந்தது. இது ஐபாபல் போன்ற அராபிய இனத்துரோகிகளின் வேலை. ஆனால் பெரும்பாலோர் எதிர்த்தும் தாக்குதல் தொடர்ந் தது பற்றிக் கிரேக்கப் படைத்தலை வன் நிலை கலங்கினான். தன் பக்க மிருந்து உண்மை நிலையை யாரோ எப்படியோ அனுப்பிவருகின்றனர் என்று கருதினான்.

கனான் கிரேக்கப் படைவீர ரிடையே தங்குதடையின்றி உலவி வந்தான். எதிரிகள் ஐபாபலுடன் வந்த அராபிய இனத்துரோகி

களுள் ஒருவன் என்றே கருதி அவனிடம் அவநம்பிக்கை கொள்ளாதிருந்தனர். ஆனால் கிரேக்கரின் நம்பிக்கையே அராபியரின் அவநம்பிக்கையாயிற்று. கிரேக்கப்படைகளிலிருந்த அராபியக் கைதிகள் அவனை ஓர் இனத்துரோகி என்று கருதி, எதிரிகளிடம் காட்டிக் கொடுத்தனர். அவன் இனத்துரோகியல்ல, ஜபாபலின் ஆளல்ல என்று கூறினர்.

அவன் பிடிபட்டான். தான் ஒற்றன்தான் என்பதை அவன் மறுக்கவில்லை. ஆனால் மானுவெல் சிற்றத்துடன் அவனை வெட்ட வாளை ஓங்கியபோது அவன் இமையாடவில்லை. வீரத்தின் அருமையறிந்த மானுவல் அவனைக்கொல்ல விரும்பவில்லை. காவலில் வைக்கும்படி கூறினன்.

அடுத்த இரண்டு நாள்களும் போர் இன்னும் மும்முரமாய்ப் போய்விட்டது. அராபியர் பக்கம் வீரர் ஆயிரக்கணக்கில் காயமுற்றனர். மாண்டனர். நூற்றுக்கணக்கில் சிறைப்பட்டனர். காயமுற்றவர்களில் தளபதி காலேதே ஒருவரானர். அடுத்தநாள் போர் பற்றி அராபியர் எவருக்கும் - காலேதுக்குக்கூட - நம்பிக்கையில்லை. படைகளின் ஒரு பெரும்பகுதியைப் பின்னல் விலகிப்போக விட்டு, வீர முன்னணிப்படையுடனே நின்று போரிட்டு மாளத்தான் அந்தத் தோலாவீரன் திட்டமிட்டிருந்தான். ஆனல் அதே சமயம் கிரேக்கர் பக்கத்து நிலை இன்னும் பரிதாபமாயிருந்தது. இதை அராபியர் அறிந்திருந்தால் நிலைமை அவ்வளவு மோசமாயிராது. அவர்கள் குதிரை ஒட்டகைகளை முதல் கொன்று தின்ருகிவிட்டது.

- தொடரும் -

## திருமணப் பரிசு !

புதிதாக திருமணம் செய்துகொண்ட இளந்தம்பதிகள் நகரத்திலிருந்து சற்று தொலைவில் வசித்து வந்தார்கள்.

ஒரு நாள் அவர்களுக்கு தபாலில் ஒரு கவர் வந்தது. அதன் மேல் 'திருமணப் பரிசு' என்று குறிப்பிட்டிருந்தது. தம்பதிகள் ஆவலாய்ப் பிரித்தார்கள். உள்ளே இரண்டு உயர்ந்த வகுப்பு சினிமா டிக்கட்டுகளுடன் ஒரு துண்டில் இந்தக் குறிப்பு இருந்தது: "இதை அனுப்பியது யார் தெரியுமா? நன்ருக யோசித்துப் பாருங்கள்!"

நெடு நேரம் யோசித்துப் பார்த்தும் அனுப்பியவர் யார் என்று அவர்களுக்குத் தெரியவில்லை. ஆனல் டிக்கட்டுகளை வீணக்காமல், சினிமாவுக்குச் சென்று இரவு, நேரம் கழித்துத் திரும்பி வந்தார்கள்.

வீட்டின் கதவைத் திறந்ததும் அவர்களுக்குப் 'பகீர்' என்றது. காரணம், வீட்டிலிருந்த விலை உயர்ந்த பொருள் ஒன்றும் காணப்படவில்லை; யாவும் கொள்ளை போயிருந்தன. ஒரு மேசைமீது மட்டும் ஒரு கடிதம் இருந்தது. அதில் பின்கண்டவாறு எழுதப்பட்டிருந்தது:

"இப்பொழுது தெரிகிறதா நான் யார் என்று? மிக்க வந்தனம்!—பரிசளித்தவன்"

# தமிழ்த் திரைப் படங்கள்

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன்



தமிழ்ப்பட உலகின் நிலைமை இன்று பரிதாபப்படக்கூடிய அளவுக்கு இருக்கிறதே தவிர, பாராட்டும் அளவுக்கு இல்லை. காரணங்கள் குறித்துப் புத்தகமே எழுதலாம்; கட்டுரையில் சுருக்கித் தருகிறேன்.

கலையுலகில் பிரவேசிப்பவர்களின் எண்ணம், எப்போது பணத்தை மட்டுமே நாடிச் செயல்புரிகிறதோ, அப்போது கலை நிச்சயமாகப் பாதிக்கப்படுகிறது; இப்படித்தான் பாதிக்கப்பட்டு வருகிறது தமிழ்த் திரைப்படவுலகம்.

தமிழ்ப்படமெடுக்க வேண்டிய பெரியவர்கள் பிறமொழிகளில் எல்லாம் லட்சம் லட்சமாகப் பணத்தைக் கொட்டிப் படம் எடுக்கிறார்கள்; அப்போது தமிழ்க்கலை கவனிப்பாரற்றுச் சாய்கிறது. தமிழ் நலிகிறது – தமிழ்நாடு நலிகிறது – தொடர்ந்து தமிழர்களும் நலிய நேரிடுகிறது! முதலில் இந்த நிலை மாற வேண்டும்.

இரண்டாவதாக, கலையுலகில் உள்ளவர்கள் யாவரும் தங்களை ஒரே குடும்பத்தார் என்று எண்ணிப் பழகவேண்டும். அந்த நிலை இன்றைய தமிழ்ப்பட உல[illegible]ல்லவே இல்லை. ஒருவரை ஒருவர் வெறுப்பாலும், உதட[illegible]வில்தான் நேசிக்கிறார்கள். உள்ளமெல்லாம் பொறாமை-போட்டி இவை போன்றவை. இவ்வாறு உள்ளத்[illegible]திய சக்திகள் ஆட்கொண்டு விட்டால், அங்கே கலை மண[illegible]

மூன்றாவதாக, ந[illegible]டையில் நல்ல விமர்சகர்கள் இல்லை. ஓரிருவர் இருந்தாலும் ஒதுங்கி வாழ்கிறார்கள்; எவ[illegible] ஒரு சிலருக்காகப் பாராட்டி விமர்சனம் செய்ய முனைந்துவிடுகிறார்கள்; தனக்குப் பிடிக்காதவர்களின கலைப் படைப்புகளைத் தாக்கி மகிழ்கிறார்கள். நல்ல விமர்சகன், தானும் வாழ்வான்; நாட்டையும் வாழவைப்பான். பாரபட்ச விமர்சகன், தன்னுடன் நாட்டையும் நாளடைவில் வீழ்த்திக்கொள்வான்!

இந்தக் குறைகளெல்லாம் நீக்கப் பெற்றால், தமிழத் திரைப் படங்கள் உலக அரங்கத்தை அழகு செய்யும் என்பது என் நம்பிக்கை. அந்த அளவுக்கு, நமமிடம் ஆற்றல் இருக்கிறது. தமிழ்க்கலை வரலாற்றை மேலெழுந்த வாரியாகப் படித்தவன் கூட, இதை ஒப்புக்கொள்ளுவான்!

# அன்னைக்கு...



அம்மா!

எனக்கு ஆசையும், ஆர்வமும் அதிகம்; அது உனக்கு நன்றாகத் தெரியும்!

மாலை வேளையில் மகிழ்ச்சியோடு நீயும் நானும் சென்று வருவோமே பூந்தோட்டம்; அது என்னை மிகவும் கவர்ந்துவிட்டது. அந்தத் தோட்டம் முழுதும் நிரம்பிக் கிடக்கும் மலர்க் கூட்டத்துக்குத்தான் எத்தனை அழகு! கண்ணுக்கும், கருத்துக்கும் விருந்தாக, மென்மையின் உருவாக, அழகின் இருப்பிடமாக அமைந்துவிட்டிருக்கும் அந்தப் பூக்கள்...மனத்தைக் கிரங்க வைக்கும் அவற்றின் மணம்...

அம்மா! நான் மலரின் மணமாக வேண்டும் என்று ஆசைப்பட்டேன்; அப்படியே ஆனேன்!

உலகம் துயில் கொள்ளும்போது எங்கும் அமைதி அரசோச்சுகிறது. பயங்கரமான அந்த இருட்டு வேளையிலும் கம்பீரமாக, லாவண்யமாக எழுகிறதே வீணையின் ஒலி, அது எவ்வளவு மகிழ்ச்சியைத் தருகிறது! அற்புதமாக எழும் அந்த ஒலிக்குத்தான் எத்தனை இனிமை! அது எனக்கு மிகவும் பிடித்துவிட்டது.

தாயே! நான் அந்த வீணையின் ஒலியாக இருக்க விரும்பினேன்; அவ்வாறே ஆனேன்!

கரை தெரியாது விரிந்து நிற்கும் கடல்தான் எத்தனை அற்புதமாக இருக்கிறது! கண்ணுக்கெட்டிய தூரம்வரை ஒரேமாதிரியான காட்சியைத் தரும் கடல், என் உள்ளத்தில் தனக்கென ஒரு இடத்தைப் பிடித்துக்கொண்டது. கடலின் போர்வை போன்ற அதன் அலைகள்தான் எவ்வளவு பிரமாதமாக இருக்கின்றன தெரியுமா? வெகு தூரப் பயணத்தின் முடிவில் மகிழ்ச்சியோடு ஓய்வுகொள்ளும் வழிப்போக்கனைப்போல, கரைக்கு வந்ததும் ஓங்காரக் கூச்சலிடும் அந்த அலைகளின்மேல் மிதப்பது எவ்வளவு ஆனந்தமாக இருக்கும்!

அன்னையே! நான் அந்தக் கடல் அலையாக ஆக வேண்டும் என எண்ணினேன்; அலையாகவும் ஆனேன்!

நம்முடைய வீட்டு முற்றத்தில் செழித்து நிற்கும் செடி உனக்கு நினைவிருக்கிறதா? அந்தச் செடியில் காலையில் ஒரு அதிசயத்தைப் பார்த்தேன். அதனுடைய பச்சைப் பசேலென்ற இலையில், முன்பொரு நாள் நகை அலமாரியில் நீ காட்டியதைப்போன்ற வைர மணி ஒன்றைக் கண்டு வியந்து, அண்ணனிடம் காட்டினேன்; அது

பனித்துளி என்முன் அவன். அந்தப் பனித்துளிதான் எவ்வளவு அழகாகவும், கவர்ச்சியாகவும் இருக்கிறது! அதை எடுத்து நெற்றியில் பொட்டாக இட்டுக்கொண்டால் அது எழிலுக்கு எழில் சேர்த்ததுபோல் இருக்காதா? உண்மையைச் சொன்னுல் அம்மா, அது என் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது!

அம்மா! நான் அந்தச் செடியின் இலை மேலே தூங்கும் பனி நீராக வேண்டும் என்று முடிவு செய்தேன்; ஆனேன்!

அலுவலகத்திலிருந்து பணி முடிந்து அலுத்துப் போய் வந்த அப்பா, 'சேச்சே...என்ன புழுக்கம்!' என்று அலுத்துக்கொண்டார். எனக்குக்கூட அப்போதய வெப்பத்தைத் தாங்கமுடியவில்லை! கொஞ்ச நேரம் எதையோ யோசித்தார். பிறகு என்னைக் கையில் பிடித்துக்கொண்டு நடந்தார். ஏரிக்கரையில் ஏறி நின்றோம் நாங்கள்...அப்போது 'கிச்சு...கிச்சு' மூட்டுவதுபோல என்னைத் தொட்டும், பட்டும் போன அந்தத் தென்றல்...! அப்பாவும், நானும் அதை எவ்வளவு அனுபவித்தோம் தெரியுமா?

தாயே! எனக்குத்தென்றலை மிகவும் பிடித்துவிட்டது. நான் ஏன் தென்றலாகக் கூடாது என்று நினைத்தேன்; ஆனேன்!

இரவில், பயங்கரமான இருளின் ஆட்சி நடக்கிறதே அப்போது, ஒளிச் செல்வனுன நிலவு மன்னன் வருகிருன். அவனுடைய பவனியின்போது அவனியே புதுக்கோலம் கொள்கிறது. இருண்ட, அவலட்சணமான குடிசைகள்கூட அந்த அழகொளியில் எழிலின் இருப்பிடமாக உருமாறுகின்றன. புத்துலகையே தனது ஒளிமூலம் உண்டாக்கும் நிலவை யாருக்குத்தான் பிடிக்காது! 'இது வேண்டாம் குழந்தை!', 'அது கூடாது குழந்தை!' என்று எல்லாவற்றிற்கும் தடைபோடும் உனக்கே அது பிடித்திருக்கும் போது, எனக்கா பிடிக்காமல் போய்விடும்!

அன்னையே! நான் அந்த நிலவின் ஒளியாக இருக்கப் பிரியப்பட்டு, அப்படியே ஆகிவிட்டதில் தவறு என்ன?

அம்மா! நான் விரும்பிய இவ்வளவும், இன்னும் எத்தனையோ உருவும் பெற்றேன்; அடைந்தேன்.

ஆனுல் தாயே! இவற்றிலெல்லாம் உன்னுடைய குழந்தையாக இருப்பதைவிடவா இன்பம் இருக்கிறது?

அம்மா!

எல்லாக் கேள்விகளுக்கும் பதில் சொல்லும் உன்னுல், இதற்கு நிச்சயமாகப் பதில் சொல்ல முடியாது என்பது எனக்குத் தெரியும்! ஏன் தெரியுமா? நான்தானே உன்னுடைய குழந்தையாக இருக்கிறேன்; நீ இல்லையே!

—'கமலவல்லி'

# 'சம்ராமாநுஜம்'

– விசு. திருநாவுக்கரசு –

நாட்டுப்புறங்களில் வயலருகே காணும் மிகச் சாதாரணமான உருவம். ஆடம்பரத்திற்கும் அந்த உருவத்திற்கும் எவ்வளவோ தூரமுண்டு. இடையில் ஒரு நான்கு முழத்துணி. கழுத்தைச் சுற்றி ஒரு மூன்று முழத்துண்டு. வெயிலுக்கும் மழைக்கும் பாது காப்பறியாத உடல். வெற்றிலைக் காவி படிந்த மீசை. பண்ணை வேலை செய்யும் நாட்டுப்புறத் தானின் குடுமி. சில மாதங் களுக்குப் பிறகு ஒருநாள் நினைவு வந்தால் செய்துகொள்ளும் சவரம். இந்த எளிய உருவத்தில் தன் உன்னதமான அறிவை மறைத்துக்கொண்டு ஒதுக்கமாய் இருந்து வாழ்ந்தவர் **அரசன் சண்முகனார்.**

சண்முகனார் தமிழறிவு குண் டூசியினும் மிக்க கூர்மையானது என்று பல பெருந்தமிழ்ப் புலவர் கள் சொல்லியிருக்கிறார்கள்.

'பாண்டிய நாடே பழம்பதி' என்பது மாணிக்கவாசகர் வாக்கு. அப் பழம்பதிக்குத் தலை நகர் மதுரை. அதை நினைத்தால் மூவேந்தர் மடிவளர்ந்த தமி ழன்னை முச்சங்கப் புலவர்களின் நாவில் நின்று செய்த ஆட்சிதான் நம் நினைவுக்கு வரும்.

மதுரையில் பாண்டித்துரைத் தேவரால் நான்காம் சங்கம் தோன்றியதும் அதில் சண்முக னார் புலவர் ஏறாய் வீற்றிருந்து அறிவாட்சி செய்ததும் தமிழார்வ முடையவர்கள் அறியத்தகும் பெருஞ் சிறப்புடையனவே.

மதுரையை அடுத்த சோழ வந்தானில் சண்முகனார் பிறந் தார். சிறுவனாய்த் திண்ணையில் பயிலும் இளைஞனாய்க் கின்னி மடத்துத் தம்பிரானிடத்தில் இவர் இலக்கண இலக்கியப் பயிற்சிபெற்று வந்தார். அந்நாட் களிலேயே சண்முகனாரின் ஐயப் பாடுகள் ஆசிரியரது அறிவை எடைபோட்டு வந்தன. அதனால் இவர் குருவை மிஞ்சிய சிஷ்ய ரானார். ஆசிரியரின் உதவி சண்முகனாருக்குக் கிடைக்காமல் சண்முகனாரின் உதவி ஆசிரி யருக்கு வேண்டிய நிலை வந்த போதுதான் இவர் பெயர் தமிழ் நாட்டில் பரவத் தொடங்கியது.

மதுரைத் தமிழ்ச்சங்கம், சண் முகனாரைப் புலவர் அரங்கத் திற்குக் கொண்டுவந்தது. உழ வனை நினைவுபடுத்தும், எளிய அவரது உருவம். புலவர் அரங்கம் ஏறியபோது அந்த உருவத்தைக் கண்டு எள்ளி நகையாடியவர்

**புலவர்கள் தமிழை ஆட்சி செய்கிறார்கள்; நினைத்ததையெல் லாம் தமிழில் செய்து காட்டுகிறார்கள். பெரும்புலவர் அரசன் சண்முகனார் அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவம், இங்கே கட்டுரை உருப்பெற்றிருக்கிறது.**

களும் உண்டு. அவர் பேசத் தொடங்கி, தெளிவு குன்றிக் கிடக்கும் சில இலக்கணக் குறிப்புகளை எடுத்து மிக நுட்பமாக விளக்கியபோது, இவர் ஒரு வியத்தக்க அறிஞர் எனப் பிறர் எண்ணினர். அன்று தொட்டு சண்முகனார் புலவர்க்கு அரசரானார். புலவர் உலகம் அவரை அரசன் சண்முகனார் என அழைத்தது.

இசைப்புலவர்கள் உலகில் ஒன்று கூடுவதனால் திருவையாற்றுக்கு இசை உலகில் எவ்வளவு புகழ் உண்டோ, அவ்வளவு புகழ் புலவர் உலகில் மதுரைக்குண்டு.

தமிழ்நாட்டுப் புலவர்கள் எல்லோரும் ஆண்டுக்கு ஒருமுறை மதுரைத் தமிழ்ச்சங்கத்து விழாவில் வந்து ஒன்று கூடுவார்கள். அவர்கள் சூழலில் இருக்கக் கிடைத்த ஒருநாள் இன்பமயமான நன்னாள் என்றே சொல்லலாம். இந்த விழாவில் சண்முகனாருக்குத்தான் முதன்மை.

நாற்பது ஆண்டுகளுக்குமுன் மதுரைத் தமிழ்ச்சங்கத்து ஆண்டு விழா. புலமை விருந்து முடிந்தது. நடுப்பகல் ஒருமணிக்குப் புலவர்கள் எல்லோரும் உணவு விருந்துக்கு வந்து வரிசையாக அமர்ந்தனர். இலை போடடுக் கறிகள் பரிமாறப் பட்டன. பந்தியின் கோடியில் சண்முகனார் அமர்ந்திருக்கிறார். பேச்சற்றிருந்த நிம்மதியான சமயம்.ஒரு புலவர் ஆளுக்கொரு வெண்பாப் பாடலாமே என்று ஆரம்பித்துவைத்தார். அதை ஆதரிப்பதைப்போல மற்றொரு புலவர், அதற்கு ஈற்றடி சண்முகனார்தான் கொடுக்கவேண்டும் என்ற திருத்தத்தையும் புகுத்தினார்.

அந்தச் சமயத்தில் இராமானுஜம் என்பவர் அங்கே எல்லோருக்கும் உணவு பரிமாறிக்கொண்டிருந்தார்; சிறந்த தமிழறிவும், குணநலனும் வாய்க்கப்பெற்றவர். சண்முகனாரின் பாராட்டு இவருக்குண்டு. இவர் பெயர் சண்முகனாரின் நினைவுக்கு வந்தது. வரவே,

**'சம் ராமாநுஜம்'**

என்ற சொற்கள் பெருமிதமாய் வெளிவந்தன.

இதுதான் சண்முகனார் கொடுத்த வெண்பாவின் ஈற்றடி. புலமையில் குறைந்த சிலர் முதுகில், இது சவுக்கடியாய் விழுந்தது.

வெண்பாவிற்குரிய எஞ்சிய மூன்றடிகளைப் பிறர் பாடவேண்டும். அப்படிப் பாடுவதில் ஒரு நிபந்தனையுண்டு. அங்கு பரிமாறப் பெறும் உணவுப்பொருள்களையே வைத்துப் பாடவேண்டும். இராமாநுஜம் தங்களுக்குப் பரிமாற வரும் சமயத்தில் பாட்டும் வரவேண்டும். இதுதான் அந்த நிபந்தனை.

பந்தியின் முதலிலே இருந்தவருக்கு விழுந்தது அதிர்ஷ்டம். அங்குள்ள உணவுப் பொருள்களில், ஏதாவது ஒன்றை வைத்துப் பாடிவிடலாமல்லவா? அவர் சிந்தனைக் கருத்துக்கள் திரண்டு பாட்டுருவம் பெறப்போகின்றன. அதோ இராமாநுஜம் வந்து விட்டார்.

'...... ...... ...... ......
...... ...... ...... ......
...... ...... ...... ......ர
**சம் ராமாநுஜம்'**

பாட்டு எப்படி? அவருக்கு விருப்பான ரசம் பாட்டை எப்படி ரசப்படுத்துகிறது பாருங்கள்!

இந்தக் காரசாரமான ரசம் கவிதையில் பிறந்ததை நினைத்துக்கொண்டிருக்கின்ற போதே இராமாநுஜம் பக்கத்து இலைக்கு வந்துவிடுகிருர். அவர் பாட்டைப் பாருங்கள்:

**'...... ...... ...... ......**
**...... ...... ...... ......**
**...... ...... ...... ......பாய**
**சம் ராமாநு ஜம்'**

தித்திப்பான பாயசத்தின் நறுமணம் பாட்டில் உருவமாகிவிட்டது. எல்லோருக்கும் சொல்லவொண்ணு வியப்போடு கலந்த இன்பந்தான்.

காலத் தாழ்வின்றி இராமாநுஜம் அடுத்தவர் இலைக்கும் வந்துவிடுகிருர்.

**'...... ...... ...... ......**
**...... ...... ...... ......**
**...... ...... ...... ......அதிர**
**சம் ராமாநு ஜம்'**

என்று பாடி அதிரசம் கேட்டார். கதையை நீட்டுவானேன்! பாட்டுக்கள் ஒவ்வொன்றும் இப்படியே 'ஜம்,' 'ஜம்' என்று வந்து கொண்டிருந்தன. நிபந்தனைப்படி பாடுவதற்கு அங்கு வேறு பொருள்களும் இல்லை. பாட வேண்டியவர் ஒருவரே இருந்தார். அவர் சண்முகனார் தான்! எப்படிப் பாடப்போகிருர் என்று எல்லோரும் நினைத்துக் கொண்டிருந்த சமயத்தில் இராமாநுஜம் சண்முகனுருக்கு முன்னே வந்துவிட்டார். இப்பொழுது வல்லவனுக்குப் புல்லும் ஆயுதமாகிவிடுகிறது.

**'...... ...... ...... ......**
**...... ...... ...... ......**
**...... ...... ... இன்னுங்கொஞ்**
**சம் ராமாநு ஜம்'**

இதுதான் சண்முகனர் பாட்டு! கையில் இருக்கிற பொருளிலேயே 'இராமாநுஜம்' இன்னும் கொஞ்சம் போடு!' என்று பாட்டை முடித்தவுடன் எல்லோருக்கும் ஆச்சரியமாய்ப் போய்விட்டது. சமயத்தில் நுட்பமாய்ப் பாடிய அவர் திறமையை வியவாதவர்கள் அங்கு இல்லை. இம்மாதிரியான நிகழ்ச்சிகள் அவர் வாழ்வில் எத்தனையோ உண்டு.

## தூங்கும் பையன்!

பையன் தொட்டிலில் படுத்திருந்தான்.

அப்பொழுதுதான் வீட்டுக்கு வந்த அப்பா, அம்மாவிடம் சத்தம் போட்டுப் பேசினர். 'உஷ்...சத்தம் போடாதீர்கள்; குழந்தை தூங்குகிருன்!' என்று மெதுவாகச் சொன்னுள் அம்மா.

சிறிது நேரம் சென்றது.

அம்மாவின் எச்சரிக்கையை மறந்து, திரும்பவும் உரக்கப் பேசினர் அப்பா.

அப்பொழுது தொட்டிலிலிருந்து எழுந்த பையன் சொன்னன்:

'ஏன் அப்பா இன்னும் உரக்கப் பேசுகிருய்? நான் தூங்குகிறேன் என்று அம்மா சொன்னது தெரியவில்லை?'

# சிறை அநுபவம்



"கலையின் மர்மம், வாழ்வின் மர்மம், இயற்கையின் மர்மம், இவைகளையே நான் தேடி அலைகிறேன்.

"மகிழ்ச்சி, சிரிப்பு இவற்றினுள் கொடிய மனநிலைகள் பதுங்கி வளரலாம்; ஆனால் துக்கத்தினுள் துக்கம் தான் வளரும். சுகம், இன்பம், மூடித் திரையிட்டிருக்கலாம்; ஆனால் துன்பத்திற்குத் திரையில்லை, முகமூடியில்லை. கலையின் உண்மை வெளித் தோற்றத்தில் அவசரமாய் நிகழ்வதல்ல; ரூபத்தின் சாயைபோன்ற நிழலல்ல; கல்லில் உறையும் தோற்றமல்ல; ஒரு மலைக்குகையினின்று வருகின்ற எதிரொலியல்ல; சந்திரனைச் சந்திரனுக்குப் பிரதிபலிக்கும் வெள்ளிக் கிணறுமல்ல; பூவைப் பூவுக்குக் காட்டும் நீர் நிலையுமல்ல; ஆனால் தன்னுள் ஐக்கியமடையும் நிலையே, கலையின் உண்மை நிலை. ஆத்ம நிலையமாகவே துன்ப உடல் மாறிவிடுகிறது; கலையே குணத்தின் வசீகர வெளியீடு. சில சமயங்களில் துக்கம்தான் ஒரே ஒப்பற்ற உண்மையென்று உணர்கிறோம், மற்றவைகளெல்லாம் கண்ணிற்பட்டு மறையும் பொய்த் தோற்றங்களேயாம். பசியிலே தோன்றி மறையும் பொய்க் கூற்றுகள்.

"ஆனால் துக்க மேடையிலேதான் உலகம் கட்டப்பட்டிருக்கிறது; ஒரு குழந்தை பிறந்தாலும், ஒரு நட்சத்திரம் ஜனித்தாலும் அங்கே துக்கம் தீவிரமாக எழுகின்றதல்லவா?"

—ஆஸ்கார் ஒயில்டு.

சீனக் கதை

# சீமாட்டி என்

தென் சீனத் தலைநகரான ஹாங் சோவில் தீபத் திருவிழா ஆரம்பமாயிற்று. ஆண்டுக்கொரு முறை நடைபெறும் இவ்விழா சீன தேச முழுவதும் கோலாகலமாகக்கொண்டாடப்படும். அதிலும் தலைநகரில் நடைபெறும் விழாவென்றால் அதன் பெருமையை எழுதவாமுடியும்?

அன்றைய இரவு பகல்போலக் காட்சியளித்தது. நகரின் நடுவில் அமைந்துள்ள சதுக்கத்தில் மக்கள் வந்து கூடினார்கள். கண்ணைக் கவரும் வர்ண ஜால விளக்குகள் எங்கும் பிரகாசித்தன. ஆண்களும் பெண்களும் ஏற்றத்தாழ்வு இன்றி, புதிய உடைகளணிந்து அலங்காரங்களுடன் போய் வந்துகொண்டிருந்தனர்.

நகரின் மத்தியில் சக்கரவர்த்தியால் நிறுவப்பட்ட ஐம்பது அடி உயரமுள்ள கட்டடம் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதில் பல உப்பரிகைகள் இருந்தன. அந்த உப்பரிகைகளில் பல விதமான வர்ணத் திரைகள் தொங்கிக்கொண்டிருந்தன. விழாவைக் கண்டுகளிக்க, நகரின் முக்கிய அதிகாரிகளும் அவர்களுடைய குடும்பங்களும் அந்த உப்பரிகைகளில் வந்து கூடுவது வழக்கம். அவரவர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடத்தை, அவர்களே அலங்காரம் செய்து விளக்குகளை மாட்டியிருந்தார்கள். சிறிது நேரத்தில் சக்கரவர்த்தியின் உத்தரவுப்படி நடைபெறப்போகும் வாண வேடிக்கைகளைக் காண எல்லோரும் அங்கே கூடிவிட்டனர்.

உயர்தர அதிகாரிகளும், அவர்களுடைய குடும்பத்தினரும் ஒருவரையொருவர் சந்தித்து, வாழ்த்துக் கூறிக்கொண்டே அவரவர் இடங்களில் வந்து அமர்ந்தனர்.

அங்கே ஒரு பகுதிமட்டும் இன்னும் காலியாகவே இருந்தது. அது அரசாங்கத்தின் பிரதம தணிக்கையாளருக்காக ஒதுக்கப்பட்ட இடம். அவருடைய மனைவி சீனாவிலேயே சிறந்த அழகி என்று போற்றப்படுகிறவள். பெயர் "சீமாட்டி என்". பெண்களுக்குள் ஒருவரையொருவர் பொறாமையுடன் திட்டிக்கொள்ளும்போது "இவள் தன்னை 'சீமாட்டி என்' என்று நினைத்துக் கொண்டுவிட்டாள்" என்பார்கள். அந்தப் பேரழகியை நேரில் பார்க்க பல வாலிபர்கள் அந்த இடத்தில் வட்டமிட்டுக்கொண்டிருந்தனர்.

சீமாட்டி என் சிறிது நேரத்தில் அங்கே வந்தாள். அவளுடைய பத்து வயதுப் பெண்ணும், எட்டு வயதுப் பையனும் பின்னால் வந்தனர். அவர்களுக்குப் பின்னால் அவளுடைய வேலைக்காரி வந்தாள். எதிரே சந்தித்தவர்களுக்கு வணக்கம் கூறிக்கொண்டே சீமாட்டி என் தன் ஆசனத்தில் வந்து அமர்ந்தாள்.

---

மூலம் :
லின்-யூ-டாங்

தமிழில் :
க. நாராயணன்

அவளுக்கு வயது இருபத்தெட்டு இருக்கும். பளபளக்கும் கருப்பு உடையை அணிந்திருந்தாள். அவளுடைய கூந்தலில் சொருகப்பட்டிருந்த முத்துப் பிறையைத்தவிர வேறு ஆபரணங்களே அவள் உடலில் இல்லை. எளிமையும், கவர்ச்சியுமே அவளுடைய அழகை இன்னும் மிகைப்படுத்தின. அங்கே அமர்ந்திருந்த பெண்கள்பொறுமையுடன் அவளை உற்று நோக்கினர். ஆண்கள் இமையாது அவளுடைய அழகைப் பருகினர்.

சீமாட்டிஎன் தனக்குப் பக்கத்தில் காலியாக இருந்த ஆசனத்தைப் பார்த்தாள். அவளுடைய முகம் மாறுதலடைந்தது. தன்னைச் சுற்றியுள்ள பெண்கள் அவர்களுடைய துணைவர்களுடன் சல்லாபமாகப் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டாள். ஆயினும் மனதிலுள்ள குறையை வெளியே காட்டிக் கொள்ள அவள் விரும்பவில்லை. அவளுடைய கணவன் சிறிது நேரத்தில் அங்கே வந்து கலந்துகொள்வதாகச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறான். அவனுடைய வரவை அவள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தாள்.

அவள் அமர்ந்திருக்கும் இடத்தருகே மக்கள் நெருக்கியடித்துக் கொண்டு முன் வந்தனர். பருவக் காளைகள் சிரித்துக்கொண்டும், கேலியாகப் பேசிக்கொண்டும், ஒருவருக்கொருவர் கண்ணடித்துக் கொண்டும் கூட்டத்தை நெருக்கினார்கள். சாரணர்கள் கூட்டத்தை ஒதுக்கி, வழியை ஒழுங்குபடுத்தி சீமாட்டி என்னை தாங்களும் நன்றாகப் பார்த்து ரசிக்க வசதி செய்து கொண்டனர்.

அலங்கார விளக்குகளும், பௌர்ணமிச் சந்திரனும், வசந்தமும், அவளை வானுலகத் தேவதையாகக் காட்சியளிக்கச் செய்தன.

சிறிது தூரத்தில் அமர்ந்திருந்த ஒரு சீமாட்டி "உன் கணவர் எங்கே?" என்று கேட்டாள்.

"வந்துவிடுவார். வாண வேடிக்கை பார்ப்பதில் என் குழந்தைகளைவிட அவருக்குத்தான் அதிகப் பிரியம்" என்றாள் சீமாட்டி.

அப்போது கன்னி மாடத்துப் பெண் ஒருத்தி அங்கே வந்தாள். அவள் பெயர் யூசெங். சீமாட்டி என்னுக்கு அறிமுகமானவள். அவள் அணிந்திருக்கும் முத்துப் பிறையை யூசெங்தான் அன்பளிப்பாகக் கொடுத்திருந்தாள். அந்தக் காலத்தில் பெரிய குடும்பங்களுக்கும், அதிகாரிகளின் வீட்டுகளுக்கும் கன்னி மாடத்துப் பெண்கள் தாராளமாகப் போய் வருவதுண்டு. அந்த வீட்டுப் பெண்களைப்பற்றிய ரகசியங்களை எல்லாம், கன்னி மாடத்துப் பெண்கள் அடிக்கடி போய் வருவதால், அறிந்திருந்தார்கள்.

"வா, சகோதரி!" என்று வரவேற்றாள் சீமாட்டி. புன்முறுவலுடன் அங்கே வந்தாள் யூசெங்.

"ஒரு நிமிஷம் உட்காரு!" என்று தன்னுடைய கணவனின் ஆசனத்தைக் காட்டினாள் சீமாட்டிஎன்.

"வேண்டாம் வேண்டாம்" என்று சொல்லிக்கொண்டே, "முத்துப் பிறை உனக்கு எவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா?" என்றாள் யூசெங்.

சீமாட்டி அவளை மீண்டும் வற்புறுத்தவும், யூசெங் ஆசனத்தில் அமர்ந்து "உன் கணவன் இன்னும் வரவில்லையா?" என்று கேட்டாள். "இப்போது வந்துவிடுவார்" என்றாள் சீமாட்டி.

அதே சமயம் தெருவில் கூட்டத்தில் கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டது. சில கல்லூரி மாணவர்கள் கைது செய்யப்பட்டார்கள் என்றும், அதனால் மாணவர்கள் ஊர்வலம் நடத்தி, துண்டுப் பிரசுரம் வினி

யோகம் செய்து "துரோகிகளே! நாட்டைக் காட்டிக் கொடுக்கும் மந்திரிகளே! ராஜிஞமாச் செய்யுங்கள்" என்றும் கத்துவதாகவும் சொன்ஞர்கள்.

வட சீஞ எதிரிகளால் கைப்பற்றப்பட்டதால் தென் சீஞவில் உள்ள ஹாஸ்சோவுக்கு தலைநகரம் மாற்றப்பட்டிருந்த காலம் அது. வட சீனம் விடுதலை பெற வேண்டுமென்று நாட்டு மக்கள் விரும்பினர்கள். ஆட்சி நடத்துவோர் எதிரிகளைத் திருப்திப்படுத்த, யுத்தகளத்திலிருந்த உண்மையான தளகர்த்தர்களை வாபஸ் பெற்று, சிறையிலே கொன்று போட்டார்கள். அதஞல் நாடாள்வோர்மீது மக்களுக்கு அருவெறுப்பு அதிகமாகியது. பதவியிலுள்ளோர் தங்கள் பதவி நீடிக்கவும், நிலைக்கவும் துரோக வேலைகளுக்கு அஞ்சாது இணங்கினர். விடுதலை வேட்கைகொண்டவர்களைச் சுட்டுத் தள்ளினர். விடுதலைக் கோஷத்தை முன்னின்று முழங்கியவர்கள் கல்லூரி மாணவர்கள் தான்.



கல்லூரி மாணவர்களின் ஊர்வலம் நகர்ந்ததும் வாண வேடிக்கைகள் ஆரம்பமாகியது. "நான் வருகிறேன். உன் கணவர் வந்துவிடுவார்" என்று எழுந்தாள் கன்னி மாடத்துப் பெண் யூசெங். "ஒரு நல்ல நெக்லெஸ் கிடைத்தால் கொண்டு வருகிருயா?" என்று கேட்டாள் சீமாட்டி. யூசெங் தலையசைத்து விடை பெற்றுச் சென்ருள்.

வாண வேடிக்கை முடியும் சமயம் சீமாட்டியின் கணவர் வந்து விட்டார். நல்ல உயரம், மெலிந்த உருவம், பட்டதாரிகளைப்போல மீசை இருந்தது. விலையுயர்ந்த உடைகளை அணிந்து, பார்ப்பதற்கு சிறிது கவர்ச்சியுடன் விளங்கிஞர். ஆஞல் அழகி சீமாட்டியை மனைவியாக அடையும் தகுதி அவருக்கு இல்லை என்பதே எல்லோருடைய அபிப்பிராயமும்.

ஒரு காலத்தில் சீமாட்டி என்னை அவர் நேரில் சந்தித்தார். அவளுடைய அழகில் மயங்கிஞர். அவளை மணந்துகொள்ள ஆசைப் பட்டார். இருவருடைய குடும்பமும், செல்வமும், பழம் பெருமையும் படைத்தவை. அதஞல் திருமணப் பேச்சு சுலபத்தில் நடைபெற்றது. வாலிப வயதிலேயே அவர் பட்டதாரியாகி, அரசாங்க உத்தியோகமும் ஏற்றதால், அவருக்குப் பெண் கொடுக்க சீமாட்டியின் பெற்ருேர் சம்மதித்தனர். என்னுக்கு ஆரம்பத்திலேயே இந்தத் திருமணத்தில் விருப்பமில்லை. ஆயினும் பெற்ருேரை எதிர்க்க முடியாமல் இணங்கிஞள்.

தம்பதிகளான பின் சிறிது காலம் மனமொத்து வாழ்ந்தனர். இரண்டு குழந்தைகள் பிறந்தன. அவளுடைய கணவனின் போக்கு மாறுதல் அடைந்தது. சீமாட்டிக்கும் மனம் வெறுப்படைந்தது. கணவனின் உத்தியோக உயர்வையோ, அவளுடைய அழகையோ யாராவது புகழ்ந்து கூறிஞல், சீமாட்டி மகிழ்ச்சியுடன் நன்றி கூறஇயலாது

**இத்தனை பதில்களும் ?**

வேலைக்கு மனுப்போட்டிருந்த ஒரு இளைஞனை அதிகாரி சில கேள்விகள் கேட்டார்.

'நீ புகை பிடிப்பதுண்டா ?'

'இல்லை !'

'குடிப்பழக்கம் ?'

'கிடையாது !'

'பெண்களோடு சுற்றுவாயா ?'

'ஊஹூம்; மாட்டேன் !'

'எந்தக் கெட்ட பழக்கமும் உன்னிடம் இல்லை என்று சொல்லு கிறாய் ?'

'உண்டு; கொஞ்சம் பொய் சொல்லுவேன் !'

திணறினாள். அவளுடைய உள்ளத்தில் ஏதோ ஒரு குறை தென்பட்டது. தன் வாழ்க்கை பூரணத்துவம் பெற ஏதோ தேவையிருப்பதாக உணர்ந்தாள். அவளுடைய குறையை அதிகப்படுத்துவதுபோல் அவனும் வெளியே அடிக்கடி சுற்றித் திரிந்தான்.

இன்றுகூட அதுபோலவேசுற்றித் திரிந்து வந்திருக்கிறான் என்பதை சீமாட்டி உணர்ந்தாள். ஆனால் அந்தக் கூட்டத்திலே கணவனிடம் எதுவும் பேசவில்லை அவள். அவன் குழந்தைகளுடன் கொஞ்சினான். மீதமுள்ள வாண வேடிக்கைகளையும் கண்டு களித்தான்.

வீட்டுக்குத் திரும்பியதும் "நீங்கள் விழாவில் கலந்துகொள்ள வருவதற்கு முன்பு, சிலமாணவர்களைக் கைது செய்துவிட்டார்கள். மந்திரிகள் ராஜினாமாச் செய்ய வேண்டுமென்று அவர்கள் துண்டுப் பிரசுரம் வினியோகம் செய்ததுதான் காரணம்," என்றாள் சீமாட்டி.

"கைது செய்யப்பட்டது சரிதான். அவர்கள் சுத்த அயோக்கியர்கள்; காலிகள்" என்றான் அவன்.

அவனுடைய பதில் சீமாட்டியின் உள்ளத்தில்சுருக்கென்று தைத்தது. "உண்மைதான், அவர்கள் காலிகள்தான். யோக்கியர்களான நீங்கள் செய்யவேண்டிய வேலை அது. உங்களால் ஒன்றும் முடியவில்லை. அதனால் அந்தக் காலிகள் நாட்டை விடுதலை செய்யவேண்டுமென்று போராடுகிறார்கள். அதை எதிர்க்கும் பதவிப்பித்தர்களை ராஜினாமாச்செய்யும்படி வற்புறுத்துகிறார்கள்." சீமாட்டியின் உள்ளத்திலிருந்து சுதந்திரக்கனல் பொங்கி எழுந்தது.

"பெண்களுக்கு அரசியலைப்பற்றி என்ன தெரியும் ?" என்று எரிந்து விழுந்தான் அவன்.

கணவன் என்ற காரணத்துக்காக சீமாட்டி பொறுமையுடன் போய் விட்டாள். இருவரும் வழக்கப்படி தனித்தனியே படுத்து உறங்கினர். சுதந்திரத்திற்காகப் போராடிய பெருங்குடி வம்சத்தில் பிறந்தவள் சீமாட்டி. பதவிக்காக சுதந்திரத்தை எதிர்க்கும் கணவனின் போக்கு அவளுக்குச் சிறிதளவும் பிடிக்கவில்லை.

ஒருநாள் அரசாங்க அறிவிப்பு ஒன்றை சீமாட்டி படித்துக் கொண்டிருந்தாள். பிரதமந்திரியைக் கண்டித்து ஒரு அதிகாரி மனு தாக்கல் செய்தாராம். அந்த அதிகாரியை அரசாங்கம் நாடு கடத்தி விட்டதாம். மற்றொரு அதிகாரியும் அதே மாதிரி மனு ஒன்றை சக்கரவர்த்திக்கு அனுப்பிவிட்டு, தனக்குக் கிடைக்கப்போகும் தண்டனையை நினைத்து, தூக்குப் போட்டுக்கொண்டாராம். இதைப் படிக்கும்போது சீமாட்டி கண்ணீர்விட்டாள்.

"எதற்காக அழுகிறாய் ?" என்று கணவன் கேட்டான். விஷயம் அறிந்த பிறகு, "அந்த அதிகாரி ஒரு முட்டாள். பிரதமந்திரி அவனுக்கு ராணுவத்தில் ஒரு உயர்தரப் பதவியை அளிப்பதாக வாக்குறுதியளித்தும், அவன் அதை மறுத்து, அவரைக் கண்டிப்பதிலேயே கவனம் செலுத்தினான். அம்மாதிரிப் பதவி அவனுக்குக் கிடைப்பதே அரிது" என்றான் அவன்.

"தேவையுள்ளபோது, நாட்டிற்காகச் சிலர் தங்களையே தியாகம் செய்துகொள்வது ஏன் என்றே நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. இல்லையா?" என்று சீமாட்டி கேட்டாள்.

"எனக்கு அது புரியவில்லை!"

"ஆனால் நமது வேலைக்காரிக்குக் கூட அது புரியும்!"

அவன் அவளைக் கோபத்துடன் பார்த்துவிட்டு வெளியே போய் விட்டான்.

கணவனுக்குப் பிரதம தணிக்கையாளர் பதவி கிடைத்த பிறகு, அவனை அவள் வெறுக்க ஆரம்பித்து விட்டாள். கணவனிடம் தேசபக்தி இல்லை என்று உணர்ந்தாள். தேசபக்தர்களின் சொற்பொழிவுகளையும் அவர்களுடைய நடமாட்டங்களையும் அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்லும் பதவிதானே தணிக்கையாளர் பதவி!

"நான் பிரதம தணிக்கையாளராக அமர்த்தப்பட்டிருக்கிறேன்" என்றான் அவன்.

அவள் வெறுப்புடன் பேசாமலிருந்தாள்.

"உன்னிடம் உற்சாகமே காணப்படவில்லையே!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அவன்.

"துரோக வேலைக்கு உற்சாகம் வருமா?" என்று பதிலளித்தாள் அவள். "ஆனால் அரசாங்க அதிகாரிகள் அனைவரும் என்னைப் பாராட்டுகிறார்கள்" என்றான் அவன்.

அதன் பிறகுதான் தாம்பத்திய வாழ்க்கையிலிருந்துகூட அவள் ஒதுங்கி வாழ்ந்தாள். குழந்தைகளை வளர்ப்பதில் அக்கறை காட்டினாள். வெளியில் போய் வருவதை நிறுத்திக்கொண்டாள். ஆண்டுக்கு இரு முறை, தீபத்திருநாள் அன்றும், அன்னப்படகுப் போட்டியன்றும் குடும்பத்துடன் வெளியே போய் வருவாள்.

சில நாட்களுக்குப் பிறகு அவளுடைய கணவன் உத்தியோக வேலையாக வெளியூருக்குச் சென்றான். திரும்பிவர ஆறு மாதங்கள் ஆகும் என்று சொன்னான்.

அதன் பிறகு ஒருநாள் கன்னி மாடத்துப்பெண் யூசெங் அங்கே வந்தாள். அவளிடம் அருமையான நெக்லேஸ் இருந்தது. அதை ஆவலுடன் எடுத்துப் பார்த்து "என்ன விலை?" என்று கேட்டாள் சீமாட்டி.

"மூவாயிரம் டாலர்."

"கணவர் ஊரில் இல்லை. இப்போது என்னிடம் அவ்வளவு ரூபாய் இல்லை."

"அதில் பாதி விலைக்கே இது கிடைக்கும்."

"பணம் தானே?"

"இல்லை. உங்களுடைய உதவி."

"என்ன உதவி?"

"அவன் பதவியிலிருந்து நீக்கப்பட்டு விட்டான். உங்களுடைய கணவன் ஊரில் இல்லாததால், அவருக்கு வேண்டியவர்கள் இரண்டொரு வார்த்தை சிபாரிசு செய்ய வேண்டும். அதற்குச் சன்மானமாக இதை நீங்கள் வைத்துக்கொள்ளலாம்."

"நான் என்ன செய்யவேண்டும்?"

நிருபர் நடிகையைப் பேட்டி காண வந்திருந்தார். கேள்விகளுக்கெல்லாம் பதில் கிடைத்தது. முடிவில் ஒரு விருந்து நடைபெற்றது. நிருபரையும், நடிகையையும் தவிர வேறொரு வாலிபனும் அதில் கலந்துகொண்டான். நடிகை நிருபருக்கு அவனை அறிமுகப்படுத்து வைத்தாள்:

'இவன்தான் என் மகன்; பெயர் வசந்தன்!'

நிருபர் வசந்தனைக் கேட்டார்:

'உங்களுக்கு வயது என்ன?'

'இருபத்தி ஒன்று!'

சொல்லிவிட்டுத் திரும்பிய வாலிபன், திடுக்கிட்டுத் திரும்பச் சொன்னான்:

'இல்லை, இல்லை; என் அம்மாவுக்கு வயது இருபத்தைந்து!'

"சொல்லப் பயமாயிருக்கிறது. 'சமூகம்' அனுமதித்தால் சொல்லு கிறேன்."

அவள் தலையை அசைத்தாள்.

"உங்களை நேரில் சந்தித்து வாக்குறுதி பெற விரும்புகிறான் அந்த வாலிபன்."

"வாலிபனா ?"

"ஆம். இந்த நெக்லேசுக்குச் சொந்தக்காரன். ஆனால் கௌரவமுள்ள பெரிய குடும்பத்தில் பிறந்தவன் என்பதற்கு இந்த நெக்லேஸ் உதாரணம்."

"அது எப்படிமுடியும் ?"

"முடியும். நீங்கள் கோயிலுக்கு வரச் சம்மதித்தால் நீங்கள் இருவரும் அங்கே சந்திக்க ஏற்பாடு செய்கிறேன் நான்."

"அது முடியாது!"

"அப்படியானால் அவனுடைய வாழ்க்கையே முடிந்தமாதிரிதான்!"

சீமாட்டி நெக்லேசை ஒருமுறை பார்த்தாள். "நான் நாளை மறுதினம் எனது சகோதரரின் மூன்றாவது இறந்த நாளுக்காகக் கோயிலுக்கு வருகிறேன். அங்கே அவனை வரச் சொல். ஆனால் இரண்டு வார்த்தைகளுக்கு மேல் நான் பேசமுடியாது !"



யூசெங் சிரித்துக்கொண்டே சென்றாள்.

சீமாட்டி தன் வேலைக்காரியுடன் கோயிலுக்குச் சென்றாள். கோயிலில் நாலைந்து கிழவிகளைத்தவிர வேறு யாருமில்லை.

யூசெங் சீமாட்டியை எதிர் கொண்டு அழைத்தாள்.

"எங்கே அவன் ?"

"அழைத்துப் போகிறேன்!"

வேலைக்காரியை வேறு வேலையாக வெளியே அனுப்பிவிட்டாள் யூசெங். சீமாட்டியைத் தன்னுடன் அழைத்துச் சென்றாள் கன்னிமாடத்துப் பெண். இருவரும் கோயிலைத் தாண்டி ஒரு வீட்டிற்கு முன் வந்தனர்.

"இங்கேதான் இருக்கிறார். வாருங்கள்" என்று அழைத்தாள் யூசெங். சீமாட்டி முதலில் தயங்கினாள். பிறகு உள்ளே சென்றாள். இருவரும் கூடத்தைத் தாண்டி ஒரு அறைக்குள் நுழைந்தனர். அங்கே யாருமில்லை. குடி வகைகளும், பழ வகைகளும் மேஜைமீது வைக்கப்பட்டிருந்தன. யூசெங் ஒரு கோப்பையில் பானத்தை ஊற்றி அவள் முன்பு நீட்டினாள். சீமாட்டி திகைத்தாள். ஏதோ ஒரு பொறியில் வந்து அகப்பட்டுக்கொண்டதைப்போல ஒரு பிரமை ஏற்பட்டது.

"இதெல்லாம் என்ன ?" என்று கோபமாகக் கேட்டாள் சீமாட்டி.

"அமைதியோடு இருங்கள். ஒன்றும் உங்கள் எண்ணத்திற்கு மாறாக நடைபெறாது. இதை சாப்பிடுங்கள். இதோ அவரை அழைத்து வருகிறேன்" என்றுசொல்லிவிட்டு, பின்புறம் கதவைத்திறந்துகொண்டு சென்றாள் யூசெங்.

அங்கே தோட்டத்தில் ஒரு இளைஞனுடன் யூசெங் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டாள். பரந்த நெற்றியும், கூர்மையான கண்களும், நீண்ட மூக்கும், அகன்ற மார்பும் நல்ல உயரமும் உள்ள

அந்த வாலிபன் உள்ளே வந்தான். அவனைக் கண்டதும் சீமாட்டியின் இதயம் வேகமாக அடித்துக்கொண்டது. "நான் இங்கே ஏன் வந்தேன்?" என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். ஆனால் இருவருடைய கண்களும் சந்தித்த போது, அவனுடன் பேசவேண்டுமென்றே சீமாட்டியின் உள்ளம் விரும்பியது.

யூசெங் இருவரையும் அறிமுகப்படுத்தி வைத்தாள். இருவரும் ஒருவரையொருவர் வணங்கிக் கொண்டனர். "நீங்கள் இருவரும் பேசும்போது, இனி நான் குறுக்கே நிற்கமாட்டேன்.பிறகு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு யூசெங் ஓடி மறைந்தாள்.

இருவரும் சிறிதுநேரம் மௌனமாகவே இருந்தனர். பிறகு அந்த இளைஞன் கோப்பையில் மதுவை ஊற்றி,"நமது நலத்திற்காக முதலில் நாம் குடிப்போம்" என்று அவள் முன்பு வைத்தான்.

சீமாட்டி அதைக் கையில் எடுத்துக்கொண்டே, "என்னிடம்என்ன பேச வேண்டும்?" என்று கேட்டாள்.

"பேசத்தான் வேண்டாம். எந்த இடத்திலிருந்து பேச்சை ஆரம்பிக்க வேண்டும் என்பதுதான் புரியவில்லை" என்றான் அவன்.

"என் உதவி தேவையிருப்பதாகக் கேள்விப்பட்டேன்."

"ஆமாம். நீங்கள் என்னிடம் மனது வைக்கவேண்டும்."

"எந்தப் பதவியை நீங்கள் இழந்தீர்கள்?"

"எனக்குப் பதவியே கிடையாது!"

சீமாட்டிக்குச் சிறிது பயம் தோன்றியது. அவனை உற்று நோக்கியபடி "என் உதவி தேவையில்லை என்றால், நெக்லேஸ் ஏன் கொடுத்தனுப்பினீர்கள்?" என்று கேட்டாள்.

"உங்களைச் சந்திக்கும் பாக்கியம் கிடைத்ததைவிட, நெக்லேஸ் பெரிது அல்ல. உங்களுடன் நான் பேசிக்கொண்டிருப்பதை ஒப்பிடும் போது, நெக்லேஸ் எனக்கு அற்பம்" என்றான் புன்சிரிப்புடன் அந்த இளைஞன்.

"நீங்கள் மகா தைரியசாலி. இதோ பாருங்கள், நான் கலியாணமானவள். எனக்குக் குழந்தைகள் இருக்கின்றன!"

"மன்னியுங்கள் சீமாட்டி. உலகத்திலேயே ஒப்பற்ற பேரழகியுடன் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருப்பதையே, என் வாழ்நாளில் நான் சேர்த்து வைத்த பெரிய பொக்கிஷம் என்று, கருதுகிறேன். ஆனால் உங்களுடன் பேச எனக்குச் சக்தி இல்லை. கட்டளையிட்டால் சிறிதுநேரம் பேச ஆவல். இல்லையேல் எனக்கு இனி வாழ்வே கிடையாது."

"சரி, சுருக்கமாகச் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள்."

"உங்களை தீபத்திருவிழாவில் கண்டேன். அன்று முதல் கனவிலும், நினைவிலும் நீங்கள்தான் என் உள்ளத்தில் நிரந்தரமாக இருந்துவிட்டீர்கள். உங்களைச் சந்தித்து ஒரு வார்த்தை பேசினால் போதும், பிறகு நான் பிச்சைக்காரனாகி தெருவிலே திரிந்தாலும், உங்களுடைய நினைவுப் பொக்கிஷத்தால் உலகத்திலே நான்தான் பெரிய பணக்காரன் என்ற இறுமாப்புடன் சுற்றித் திரிவேன்!"

அவனுடைய பேச்சிலும், பார்வையிலும் காந்த சக்தி படைத்திருப்பதை சீமாட்டி உணர்ந்தாள்.

"அங்கே யூசெங் உங்களுடன் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டேன். அவள் மூலம் என் ஆவலை நிறைவேற்றிக்கொள்ள முயற்சித்தேன்"

"அதற்காக அவளுக்கு அளவு கடந்த லஞ்சம் அளித்திருக்கிறீர்கள்?"

"ஆமாம். பகிரங்கமாக அதை ஒப்புக்கொள்கிறேன். என் லட்சியம் நிறைவேறிவிட்டது. இனி

என்னை நீங்கள் வெளியே போகச் சொன்னாலும், இந்தச் சந்திப்பை இதயத்திலே தாங்கி மகிழ்ச்சியுடன் வெளியேறுவேன்''

அவனுடைய பேச்சில் சீமாட்டி உள்ளம் பறி கொடுத்தாள். "உங்களைப்பற்றி நான் ஒன்றும் தெரிந்து கொள்ள வேண்டாமா?'' என்று கேட்டாள்.

"நான் ஒரு பட்டதாரி!''

"அப்படியா? அரசியலில்...?''

"கலாசாலை மாணவர்களுக்கு அரசியலைப்பற்றிக் கவலையில்லை. அவர்களுடைய கவலையெல்லாம் நாடு விடுதலை பெற வேண்டும் என்ற ஒரே நோக்கம்தான்!''

"பெயர்?''

"செங்! மாணவர் தலைவன்!''

சீமாட்டியின் கொள்கையும் அது தான். கணவனை ஒரு லட்சிய புருஷனாக மாற்ற எண்ணினாள். அது நடைபெறவில்லை. அவளுடைய லட்சிய புருஷனாக செங் எதிரே நின்றான். அவன்மீது அவளுக்குப் பாசமும் பரிவும் தோன்றியது. இருவரும் குடித்தார்கள். இருவரும் தேசத்தின் விடுதலைபற்றித் தீவிர மாகப் பேசினார்கள். இருவருடைய முடிவும் கடைசியாக ஒரே லட்சிய மாக அமைந்தது.

"மிஸ்டர் செங். உங்களைச் சந்தித்ததில் மகிழ்ச்சி. இனி நாமிருவரும் நண்பர்கள்தான்!'' என்றாள் சீமாட்டி.

"இனி நான் செத்தாலும்எனக்கு அது மகிழ்ச்சியாகவே இருக்கும்'' என்றான் செங்.

சீமாட்டி விடைபெற்றுக்கொண்டு எழுந்தாள். அதே சமயம் யூசெங் உள்ளே நுழைந்தாள். அவளைப் பார்த்ததும் சீமாட்டியின் முகம் மாறுதலடைந்தது. மயக்கமடைந்து நாற்காலியில் விழுந்தாள் சீமாட்டி.

"என்ன?'' என்று ஓடிவந்து தூக்கினாள் யூசெங்.

"என் உடல்நிலை சரியில்லை. இன்று இங்கேயே நான் தங்கிவிடுகிறேன். வேலைக்காரியை வீட்டுக்கு அனுப்பிவிடு. நாளைக் காலையில் என்னுடைய பல்லக்கை இங்கே கொண்டுவரச் சொல்'' என்றாள் சீமாட்டி.

இளைஞனும் யூசெங்கும் சீமாட்டியை ஒரு படுக்கையில் கொண்டு போய்க் கிடத்தினர். யூசெங் ஓரப் புன்னகையுடன் அவனிடம் விடை பெற்றுச் சென்றாள்.

மறுநாள் வந்த பல்லக்கில் சீமாட்டி ஏறிச்சென்றாள். "உங்களைச் சந்தித்திருக்காவிட்டால் நான் செத்திருப்பேன்'' என்று கூறி அவளுக்கு விடை கொடுத்தான் செங்.

நாளடைவில் இருவரும் அடிக்கடி இரகசியமாகச் சந்தித்தார்கள். இருவரும் ஒருவரையொருவர் அதிக மாக நேசித்தார்கள்.

சீமாட்டியின் கணவன் ஊருக்குத் திரும்பினான். மனைவியின் நெக்லேசைப் பாராட்டி, "இதை எங்கே வாங்கினாய்?'' என்று கேட்டான்.

"இது ஒரு பெரிய குடும்பத்தாருடையது. ஆறுயிரம் டாலர் இதன் விலை. இன்னும் ரூபாய் கொடுக்கவில்லை.'' என்றாள் அவள்.

அவன் அதற்குரிய பணத்தை கொடுத்தான். சீமாட்டி அந்தப் பணத்தைத் தன் காதலனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டாள்.

அவளுடைய கணவன் தலை நகரில் நிரந்தரமாகத் தங்கிவிட்டான். சீமாட்டி தன்னுடைய காதலனைச் சந்திக்க வாய்ப்பின்றி இருந்தது. ஒருநாள் போலீஸ் கமிஷனர் வீட்டில் நடைபெற்ற விருந்துக்கு சீமாட்டி மட்டும் சென்றாள். விருந்தின் ஆரம்பத்திலே தனக்குத் தலை வலி என்று சொல்லி விடைபெற்று, காதலன் இல்லம் சென்று,களித்துத் திரும்பினாள்.

தனக்கு உடல்நிலை சரியில்லை என்றும், கிராமத்திற்கு தன் தாய் வீடு சென்று ஒரு மாதத்தில் திரும்பிவிடுவதாகவும் கணவனிடம் விடைபெற்று, கிராமத்துக்குச்சென்றாள். பெற்றோர் ஏற்கனவே இறந்து விட்டதால் சகோதரனுடைய ஆதர

வில் அங்கே தங்கினுள். ஏற்கனவே திட்டமிட்டபடி காதலன் செங் அங்கே வந்தான். இருவரும் பதினைந்து நாட்கள் இன்பக்கடலில் ஆழ்ந்து சுகம் அனுபவித்தார்கள். சீமாட்டி ஊர் திரும்பும்போது காதலன் செங் கூடவே வந்தான். பல்லக்குத் தூக்கிகள் இச்செய்தியை சீமாட்டியின் கணவனிடம் தெரிவித்துவிட்டனர். அவனுக்கும் சந்தேகம் தோன்றியது. ஆனுல் அவன் அதை வெளியே காட்டிக்கொள்ளவில்லை.

சீமாட்டி கர்ப்பமுற்ருள். அவளுடைய கணவனும் குறிப்புகளை உணர்ந்தான். அவனுடைய சந்தேகம் பலப்பட்டது. சீமாட்டி திகைத்தாள். முதலில் கர்ப்பமில்லை என்றும், ஏதோ கட்டி என்றும் சொன்ஞள். நாட்கள் ஆக ஆக அவளால் அதை மறைக்க முடியவில்லை. வெளியார் இதுபற்றிச் சந்தேகம் கொள்ளவில்லை. ஆனுல் கணவன் மனைவி இருவருக்கும் இது வேதனை தரும் விஷயமாகிவிட்டது.

"யார் அந்த மனிதன்? சொல்!" என்று அதட்டினுன் கணவன்.

"இது என்ன அற்பத்தனமான கேள்வி? கணவன் இருக்க, வேறு யார்?" என்று திருப்பிக் கேட்டாள் சீமாட்டி துடுக்குத்தனமாக.

"அது எப்படி முடியும்? உனக்குத்தான் நன்ருகத் தெரியுமே?"

"ஒரு நாள் நீங்கள் நல்ல குடி போதையில் இருந்தீர்கள். அதனுல் தான் உங்களுக்கு நினைவு இல்லை"

"குடித்தேனே இல்லையோ? உன்னேடு நான் படுத்துறங்கவே இல்லை. இது உன் தாய் வீட்டில் தோன்றியதால், நீ உன் தாய் வீட்டுக்கே போய்விடு" என்ருன் கோபத்துடன்.

அவனுடைய சந்தேகத்தை அவளால் போக்க முடியவில்லை. பகைவர்போல் இருவரும் நாட்களைக் கடத்தினுர்கள்.

நாட்டிலே மீண்டும் விடுதலை



உணர்ச்சி மேலிட்டது. விடுதலைப் படையில் சேர்ந்த ஒரு அதிகாரி நாடு கடத்தப்பட்டார். இதைக் கேள்வியுற்ற மாணவர்கள் சக்கரவர்த்தியின் அரண்மனைக்கு முன்ஞல் போராட்டம் நடத்தினுர்கள், பத்தாயிரக் கணக்கில் பொதுமக்களும் போராட்டத்தில் குதித்தார்கள். போராட்டம் புதிய உருப்பெற்றது. காவலர்கள் கொல்லப்பட்டனர். சிறைகள் திறந்து விடப்பட்டன. அரசாங்கக் கட்டிடங்கள் தீக்கிரையாயின.

மாணவர்களின் தலைவர்கள் அரசாங்கத்தினரால் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்களில் செங் ஒருவன். சீமாட்டியின் காதுகளில் இச்செய்தி விழுந்தது. என்ன செய்வதென்று தெரியாது திகைத்தாள்; பயந்தாள்.

அன்று இரவு கணவன் வீட்டிற்குத் திரும்பியதும் "நாடு விடுதலை பெற வேண்டுமென்று விரும்பும் அப்பாவி மாணவர்களை ஏன் கைது செய்கிறீர்கள்?" என்று கேட்டாள் சீமாட்டி.

அவன்பேசாமலிருந்தான். அவள் கோபத்துடன் திரும்பத் திரும்ப அதையே கேட்டாள். அவளுடைய குரலில் நடுக்கம் இருந்தது. முகம் வெளுத்திருந்தது.

"இதைப் பற்றி உனக்கென்ன கவலை? கைது செய்யப்பட்டவர்கள் சீக்கிரம் சுட்டுக் கொல்லப்படுவார்கள். இல்லையேல் இந்தக் கிளர்ச்சியை அடக்கமுடியாது" என்றான் அவன்.

தன் காதலனின் கதியைப் பற்றி நினைத்ததும் சீமாட்டி நடுநடுங்கினாள். வேலைக்காரிமூலம் செங் தப்பிவிட்டான் என்றும், கைது செய்யப்படவில்லை என்றும் கேள்விப்பட்டாள். உண்மையை அறிய அவளால் முடியவில்லை. அப்போது வேலைக்காரிக்குச் சொந்தக்காரன் ஒருவன் கிராமத்திலிருந்து வந்திருப்பதாக வேலைக்காரியே வந்து சொன்னாள். அழைத்துவந்து உபசரிக்கும்படி சீமாட்டி கூறினாள்.

வந்தவன் மாறுவேஷத்தில் இருக்கும் செங் என்பதை அறிந்தாள் சீமாட்டி. ஆனந்தக்கண்ணீர் வடித்தாள். அரசாங்க அதிகாரிகளிடமிருந்து தப்பிவிட்டதைக் கண்டு அவனை அன்புடன் தழுவிக் கொண்டாள். தன்னிடமிருந்த முத்துமாலையை அவன் கையில் கொடுத்து, "இதை விற்று செலவுக்கு வைத்துக்கொள். நிலைமை மாறும்வரை எங்கேயாவது போய் விடு" என்று அவனை அனுப்பி வைத்தாள்.

"நல்லநாள் வரும். நாம் சந்திப்போம்" என்று கூறிச் சென்றான் செங்.

கணவன் வீடு திரும்பியதும் "கைது செய்யப்பட்டவர்கள் அனைவரும் சுட்டுக்கொல்லப்பட்டனர்" என்றான். "நன்றாகச் சுடுங்கள். உங்களுடைய வேலையே அது தானே." என்றாள் எரிச்சலுடன்.

அவன் பேசாமலிருந்தான். "உங்கள் சொற்படி குழந்தை பெற என் தாய் வீடு போகிறேன்" என்றாள்.

"உன் இஷ்டப்படியே செய்" என்றான் அவனும். தன் பதவியையும் கௌரவத்தையும் இழக்க விரும்பாததால் தன் மனைவியின் நடத்தைபற்றி வெளியே சொல்லவில்லை அவன். அவளை விவாகரத்து செய்துகொள்ள நினைத்தாலும் தகுந்த காரணம் கூறியாக வேண்டும். அதனால் பேசாமலிருந்துவிட்டான்.

தாய் வீட்டிலே சீமாட்டிக்கு ஆண் குழந்தை பிறந்தது. செங் நினைவாக அந்தக் குழந்தையை அன்புடன் வளர்த்து வந்தாள் சீமாட்டி.

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு சக்கரவர்த்தி இறந்தார். புதிய சக்கரவர்த்தி அரசாங்கக் கொள்கைகளை மாற்றியமைத்தார். பதவியிலுள்ளவர்கள் நீக்கப்பட்டனர். போராட்டக்காரர்களை அழைத்து பதவியளித்தார். முற்போக்குக் கொள்கைகள் வகுக்கப்பட்டன. சீமாட்டியின் கணவனுக்கும் பதவிபறிபோயிற்று. மக்கள் அவனைக் கற்களால் அடித்துக் கொன்றுவிட்டனர்.

சீமாட்டி தலைநகருக்கு வந்து சேர்ந்தாள். கன்னிமாடத்துப்பெண் யூசெங் அவளை வரவேற்றாள். சீமாட்டியின் காதலன் புதிய அரசாங்கத்தில் பதவிபெற்றிருப்பதைக் கூறினாள்.

சீமாட்டி செங்கை மணந்து கொண்டாள். அந்த ஆண்டு தீபத் திருநாளில் சீமாட்டிக்கு அருகில் செங் அமர்ந்து வாண வேடிக்கைகளைக் கண்டு களித்தான். பெற்றோரை தன் மழலைச் சொற்களால் பேசி, மகிழ்வித்துக்கொண்டிருந்தான் அவர்களுடைய பையன். அப்போது யூசெங் அங்கே வந்தாள். பழைய நெக்லேசை சீமாட்டி அணிந்துகொண்டிருப்பதைக் கண்டு, "இந்த நெக்லேஸ் உங்களுக்குப் புதிய அழகைமட்டும் அளிக்கவில்லை; புது வாழ்வையும் அளித்திருக்கிறது" என்றாள். எல்லோரும் சிரித்தனர். ★

ஆசிரியர்: **கண்ணதாசன்.** வெளியிடுபவர்: **சுப. அருணாசலம்.**
ஏ.எல்.எஸ். அச்சகம். 2-127 மவுண்ட்ரோடு, சென்னை 6.—**தமிழ்நாடு.**

Regd. No. M. 6921 MULLAI March 1958



Wrapper Printed at the Asian Printers, Madras–5.